ஸ்ரீ:

# ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தம்


கோயமுததூர் வக்கீல் திருமலை நல்லான் சக்ரவர்த்தி வெங்கரை

ஸ்ரீ உ.ப. வே. ஸ்ரீசைல சக்ரவர்த்தியாசார்யர்

இயற்றியது.


---

ஜகதாசார்ய ஸிம்மாஸநாதிபதி காஞ்சீபுரம் ப்ரதிவாதிபயங்கரம்

விதவான

ஸ்ரீ உ.ப. வே. அண்ணங்கராசாரிய ஸ்வாமியின்

முன்னுரையுடன் கூடியது.

---


(டிலலி ஸ்ரீ வைஷணவ ஸிததாநத ஸபையாரால ப்ரசுரிககபபெற்றது)

ஸாவதாரி ௵ சிததிரை திருவாதிரை.

ராஜாஜீ பிரஸ் லிமிடெட, தேவகோடடை.

1948

# விஷய ஸூசிகை.

ஸ்ரீ:

# முன்னுரை.

---

கோயமுத்தூரில் எழுந்தருளியிருந்து இப்போது கீர்த்தி மூர்த்தியாய் விளங்காநின்ற ஸ்ரீசைல சக்ரவர்த்தியாசார்யஸ்வாமியின் சில அருமருந்தன்ன திவ்யஸூக்திகளை அநுபவிக்கும்படியான பாக்யம் அடியேனுக்கு இப்போது வாய்த்தது. இருபத்தைந்து வருஷகாலம் இந்த மஹநீயருடைய பரிசயம் பெற்றிருந்தவனடியேன். இவர் வக்கீலாக இருந்தபடியால் ஆங்கிலத்தில் வல்லவர் என்று இவ்வளவே முதலில் நான் க்ரஹித்திருந்தது. பிறகு அநுபவம் முற்ற முற்ற உபயவேதாந்தங்களிலும் அவர்க்கு இருந்த மிக்கத்தெளிந்த ஞானத்தைப் பலவாற்றானு முணர்ந்து வியந்தேன். ஆங்காங்கு இவர் செய்தருளின உபந்யாஸங்களில் சிலவற்றைக் கேட்டும் எழுதியருளின வ்யாஸங்களை ஸேவித்தும் இவரை ஞான நிதியெனக்கொண்டு களித்தவர்களில் அடியேன் தலைவன்.

ஒரு ஸமயம் கோயமுத்தூரில் நாலைந்து நாளும், மற்றொரு ஸமயம் காஞ்சீபுரியிலும் சென்னையிலும் நாலைந்துநாளும் இந்த மஹானோடு கலந்து பழகிக் களிக்க அடியேனுக்குப் பாக்யம் நேர்ந்தது. அந்நாட்களில் 'இந்தஸ்வாமி இவ்வளவு விசேஷஞானம் எவ்வாறு பெற்றார்?' என்கிற வியப்பே அடியேனுக்கு உண்டாயிற்று. காவ்ய நாடக அலங்காரங்களில் ஸகலக்ரந்தங்களும் இந்த ஸ்வாமிக்கு வாசோவிதேயங்களாயிருந்த அதிசயத்தை நேரில் கண்டு ஆச்சர்யமடைந்தேன். தமது திருத்தகப்பனார் பக்கலிலேயே ஸகல க்ரந்தங்களும் அதிகரிக்கப் பெற்றதாக ஸாதித்தார். ஸ்ரீராமாயணாதி இதிஹாஸ புராணங்களிலும் ஸ்ரீபாஷ்யம் முதலிய வேதாந்த க்ரந்தங்களிலும் ஸத் ஸம்ப்ரதாயஸித்தமான ஆழ்ந்த ஞானம் இந்த ஸ்வாமிக்கு இருந்ததை உலகமறியும்.

இப்பெரியாருடைய சில உபந்யாஸ விசேஷங்களைத் திரட்டி ஒரு புத்தகமாக வெளியிட அவரது திருக்குமாரர்க்குத் தோன்றி,

இவ்வுலகுக்கு விலக்ஷணமான விருந்து அளிக்கப்படுகின்றது. ஸ்ரீராமாயணதத்துவம், ஸ்ரீவிசிஷ்டாத்வைததத்வம் முதலான பல விஷயங்களை இந்தஸ்வாமி உபந்யாஸ ரூபமாக அருளியிருந்தது தவிர வியாஸரூபமாகவும் எழுதியிருந்தார். அவை ஸாதாரண ஞானிகளோடு மஹாவித்வான்களோடு வாசியற அனைவர்க்கும் பயன்படுவனவென்பது அடியேனுடைய துணிபு. அவையெல்லா மிப்போது உலகில் வெளிவந்தலவ எம்பெருமானுடைய திருவுள்ளமடைந்தது.

இங்ஙனம்,

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரியர்.

27—4—48.

ஸ்ரீ:

# முகவுரை.

---

ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தம் என்கிற இந்தப்புஸ்தகத்தில் ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தத்தின் கொள்கைகள் எளிதான தமிழ் நடையில் ஐந்து வியாஸங்களாக வெளியிடப்பட்டிருக்கின்றன. இவற்றில் ராமாயணதத்துவமும் குருபக்தியும் இந்த ஸபையின் வார்ஷிகோத்ஸவ ஸமயங்களில் படிக்கப்பட்டவை. அவற்றில் முதலாவது முன்னமேயே ஸபையாரால் ஒரு சிறிய புத்தகரூபமாய் வெளியிடப்பட்டிருக்கிறது. ஜீவபரஸம்பந்தம் ஸபையின் ஆதரவில் வெளியிடப்பட்ட 'வைஷ்ணவ ஜனபணில்' சிறியபாகம் ப்ரசுரிக்கப்பட்டது. விசிஷ்டாத்வைததத்வமும் ச்ருதிப்ராமாண்யமும் சென்னை ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்த ஸபையாரால் வெளியிடப்பட்டு வந்த வேதாந்த தீபிகையில் ப்ரசுரம் செய்யப்பட்டவை. இந்த வியாஸங்களை எழுதிய ஸ்ரீ உ. வே. ஸ்ரீசைல சக்ரவர்த்தியாசார்யருடைய குமாரர் இவைகளையெல்லாம் சேர்த்து புத்தகரூபமாக வெளியிடவேண்டுமென்கிற அவாவுடன் முன்வந்து பூர்த்தத்ரவ்யஸஹாயம்செய்து இந்த ஸபை மூலமாய்வெளியிடுகிறார்.

நமது ஸம்ப்ரதாயத்தின் கொள்கைகளை நன்கு எடுத்துக் காட்டுகிற இந்தப்புத்தகத்திலடங்கிய ஐந்துவ்யாஸங்களும் ஆத்த பஞ்சகமென்னப்படும் ஐந்து ரத்னங்கள் போன்றவையாயிருக்கிறபடியினால் ஸ்ரீவைஷ்ணவர்களெல்லோருக்கும் உபயோகமாயிருக்கும் என்பதில் ஸந்தேகமில்லை. அனைவரும் முன்வந்து இந்தப்புத்தகத்தை வாங்கி ஸம்ப்ரதாயார்த்தங்களை அறிந்து கொள்ளுவார்களென்று நம்புகிறேன்.

தற்காலத்திய காகிதத்தின் விலை, அச்சுக்கூலி முதலிய வற்றினால் இதைப் ப்ரசுரிப்பதற்கு அதிகத்ரவ்யம் செலவழிந்த போதிலும் எல்லோரும் அதிகச்ரமமில்லாமல் வாங்கவேண்டுமென்கிற எண்ணத்தினால் இதன் விலை குறைவாக ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.

இந்த வயாஸஙகளைக கடாக்ஷிதது கீழே பரசுரிககபபடட முன்னுரையை உபகரிததருளிய ஜகதாசாரய ஸிமமாஸநாதிபதி பரதிவாதிபயஙகரம காஞசீபுரம விதவான ஸ்ரீ. உப வே. அணணஙகராசாரிய ஸவாமிககு நன்றியைத தெரிவிததுக கொளளுகிறேன.

புதுடில்லி,
ஸாவதாரி ளு சித்திரை
ஆதிரை நாள்
12—5—1948

எஸ். எஸ் அய்யங்கார்,
காரியதரிசி,
ஸ்ரீவைஷ்ணவஸித்தாநத ஸபை.



*திருமலை நல்லான் சக்ரவர்த்தி*

வெங்கரை ஸ்ரீ உப. வே. ஸ்ரீசைல சக்ரவர்த்தி ஆசார்யர்

(1881–1946)

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாயண தத்துவம்.

---

## பூர்வ பீடிகை

வெங்கதிரோன் குலத்துக்கு ஓர் விளக்காய், கௌசலை தன் குலமதலையாய், தயரதன் மகனாய்த் தோன்றிய குணம் திகழ் கொண்டலான ஸ்ரீ ராமபிரானது அவதாரதினமான இப் புண்ய தினத்தில் பெரியோர்களின் நியமனத்தை சிரஸா வஹித்து அடியேன் ஸ்ரீ ராமாயணததில் சில தததவங்களைக் குறுகிய காலத் திறகுள சொல்லுவதாகத் துணிந்திருககிறேன்.

## ப்ரதிபாதிக்கப்படும் விஷய ஸங்க்ரஹம்.

(1) कामार्थ गुणसंयुक्तं धर्मार्थं पविस्तरम् ।
என்கிறபடியே ஸ்ரீ ராமாயணததில் தாமம, அர்ததம, காமம் மோக்ஷம், எனப்படும் நான்கு புருஷார்த்தங்களில் தர்மம், மோக்ஷம இவைகள் விஸ்தாரமாகவும், அர்ததம் காமம் இவைகள் சுருங்கவும் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. (1) समुद्रमिव रत्नाढ्यम् என்கிறபடியே கடலில முதது, பவழம் முதலிய ரதனங்கள் உள்ளே மறைந்து கிடக்கிறாப்போலே ஆழநத சிறந்த கருத்துககள் இதில் உள்ளடங்கி இருக்கின்றன. இதில் பல வேதாநத ரஹஸ் யங்களும, உலக நீதிகளும், ராஜ நீதிகளும, புருஷாாமங்களும், ஸ்திரீ தர்மங்களுமு ஆங்காங்கு பதிந்து கிடககின்றன. (2) வ்யங்க் யாாதத ப்ரதானமான உததமோததம காவயமாதலால் மேலெ ழுநதபார்வையில் தோன்றாத பல ஆழ்ந்த கருத்துக்கள தோண் டித தோண்டி எடுககபபடவேண்டியவைகளாயிருக்கின்றன. இதில கதாபாகங்கள எல்லோருககும தெரிந்தவிஷயமாகையால் அவைகளை விஸ்தரிக்காமல் அவச்யம் அறியவேண்டிய பொருள் களில் சிலவற்றைமட்டும் சொலலுகிறேன.

---

1. ராமா-பால—3-8

2. வெளிபபடையாகச் சொல்லாமல் மறைபொருளாகச் சொல்வதையே நோககமாக உடையதாய மிகவும் உயர்ந்ததான காவ்யம்.

## சிறை இருந்தவளின் ஏற்றம் சொல்லும் ப்ரகாரம்.

ஸ்ரீ ராமாயணம் முழுவதும் முக்கியமாய சிறை இருந்தவ ளான பிராட்டியின் ஏற்றம் சொல்லுகிறது என்று நம பூர்வர் கள் அநுஸந்திப்பார்கள். தேவ தேவ திவ்ய மஹிஷியான தன் மேன்மையையும், பெருமையையும் சிறையிருப்பின் தாழ்வையும் பாராதே, தேவஸ்திரீகளின் சிறையை விடுவிக்கைக்காகத் தான் சிறை யிருந்தது தயாபரவசமான காரியமல்லவா! கையில் இருந்த குழந்தை தவறி சாக்கடை ஜலம் நிறைந்த பள்ளத்தில் விழுந்து விட்டால் தாய் (அல்லது தகப்பன்) சற்றும் தயங்காமல் சடக் கென்று குதித்து குழந்தையை வெளியிலெடுப்பதைப்போல, சேதனர்கள் விழுந்து உழலும் ஸம்ஸாரஸாகரத்தில் பிறப்பிலி யான தான் வந்து பிறந்து, இவர்கள் பட்டபாடெல்லாம் தானும் பட்டு, ரக்ஷிக்கையாலே மாதருத்வ ஸம்பந்தத்தால் வந்த வாதஸல் யத்தை இந்த காந்தம் வெளிப்படுத்துகிறது. இந்த வாதஸல்யத் தின் மிகுதியை நம்மாழ்வார் (1) 'தனிச் சிறையில் விளப்புற்ற கிளிமொழியாள்' என்று வெளியிட்டார். காமத்தால் சிறையுண் டானால், அது தாழ்வாகும். ஆசிரிதைகளான தேவஸ்திரீகளின் சிறையைவிடுவிக்கைக்காகத் தன் அநுக்ரஹத்தாலே வலியச் செய்ததாகையாலே இந்தச் சிறை இருந்தது ஏற்றத்துக்குக் காரணமாயிற்று. ஸம்ஸாரிகள்போல கர்ப்பவாஸம் பண்ணிப் பிறக்கும் பிறப்பு பகவானுக்கு தேஜஸ்கரமாகிறது என்பதை (2) 'பலபிறப்பாய் ஒளிவரும்' என்று ஆழ்வார் வெளியிட்டருளி னார். ச்ருதியும் (3) 'அவன் ஒருவனே பிறக்கப் பிறக்க புகர்பெற்று பவனுகிறுன்' என்று சொல்லிற்று. ஏனெனில், ஒரு காமத்தினு லன்றிக்கே கேவலம் தன் இச்சையினலே ஆசரிதர்களை அநுக்ர ஹம் செய்ய வேண்டும் என்று பிறந்தபடியினல். அதுபோலவே பிராட்டி விஷயத்திலும் இந்த சிறைவாஸம் அவளுக்கு தேஜஸ்கரம

---

1. திருவாய்மொழி 4-8-5
2. திருவாய்மொழி 1-3-2
3. லோகத்தில் ஒருவன் பிறக்கப் பிறக்க காம பந்தத்தி னல் அவனுடைய சீர்மை குறைவை அடைகிறது. பகவான் ஒருவனே பிறக்கப் பிறக்க தேஜஸ்ஸு வருத்தி அடையும்படி நிற்கிறுன் பகவான் அவதரித்துத் தன் பக்தர்களுக்கு அநுகுண மான கார்யத்தைச் செய்வதினல் அவனுடைய ஸௌலப்யமான மஹாகுணம் வெளியிடப்பட்டு அவனுடைய தேஜஸ் வருத்தி அடைகிறது என்றபடி 'தேருமூர்ந்து தேசுயர்ந்த செல்வ தெய்வநாயக' என்னப்பட்டதிறே.

ஆயிற்று இந்த உண்மையை அறியாமல் ராவணபலாத்காரத்தி னால் சிறையிருந்ததாகச் சொல்வார்கள் அறிவில்லாத அல்பர்கள என்று ஆசார்யர்கள் பணித்தார்கள். ஹனுமானுடைய வாலில் துணிகளைச்சுற்றி நெருப்பை வைதத தகவல் அறிந்து (1) "शीतो भव हनूमतः" என்கிறபடியே உஷ்ணமான உன ஸ்வபாவத்தை மாற்றி, ஜலதத்வத்தின் ஸ்வபாவமான குளிர்ச்சியை நீ அடையக் கடவாய என்று அக்கினியை ஆஜ்ஞாபித்து, அக்கினிக்கு குளிர்ச்சியைக கொடுக்க வலல பிராட்டியானவள் "दग्धो भव" (நீ நீறாய போகககடவாய) என்று ராவணனைப பாரதது சொல்லமுடியாதா? அபபடிச் செயயாததறகுக காரணததை மஹாவி

(2) "असन्देशात्तु रामस्य तपसश्चानुपालनात् ।
न त्वा कुर्मि दशग्रीव भस्म भस्मार्हं तेजसा ॥

என்று வெளியிட்டான அதாவது ராமனுடைய கட்டளை இல் லாததாலும, என தவததைக் காப்பாற்ற வேணடியதறகாகவும், சாப பலாகக வேண்டிய உனனைச சுட்டு எரிக்கவில்லை எனறு அருளிச செயதாள் ஆகையால அசோகவனிகையில சிறையிருந தது தன் அனுகரஹததினாலே அநயரக்ஷணாததமாகச செய்த காரயமாதலால இவளுடைய தயை முதலிய குணஙகளுக்கு அது பரகாசகம.

ஸ்ரீ ராமாயணம் முழுவதும் பிராட்டியின விஷயமானது

ஸ்ரீ ராமாயணம முழுவதும பிராட்டியின ஏற்றம் சொலலு கிறது எனபது ஸ்ரீ வாலமீகி பகவானால்

(3) काव्यं रामायणं कृत्स्नं सीतायाश्चरितं महत् எனறும்,
(4) श्रीमद्रामयणमपि प्राणिति त्वच्चरित्रे

என்று படடராலும நிரூபிககப்படடிருககிறது. அதாவது இநதக் காவயம முழுவதற்கும பிராட்டியின சரித்திரம ஜீவிதம் எனறபடி. 'जीवितं व्यङ्ग्यवैभवं' எனறபடியே இந்த ஆதிகாவயத திறகு ஸீதையின சரித்திரம உயிர நிலை என்று திருவுள்ளம். 5 रामस्य अयनं எனறுலும, रामाया अयनं எனறுலும ராமாயணம் என்றே

---

1 ராமா - ஸுந்தர-33-29
2 ராமா - ஸுந்தர 20—20
3. ராமா - பால -4—7. 4. ஸ்ரீ குணரதனகோசம்-14.
5. ராமா ராமசச, ராமௌ, தயோ' அயனமஎன்றுலும் ராமாயணம என்றே ஸமாஸ ர வரும். பிராட்டி,ராமன இவர்கள் இருவருடைய சரித்திரததையும சொலலுகிறது எனறும் பொருள் கூறுவதுண்டு.

ஸமாஸமாகையால், ராம சரிததிரம் என்றும் ராமா சரித்திரம் என்றும கூற இடமுண்டு. இதைத் திருவுள்ளம்பற்றியே 'रामस्य चरितं कृत्स्नं' என்றும் 'सीताया चरितं महत्' என்றும் வால்மீகி அருளிச் செயதரா.

## தத்வஹித புருஷார்தத நிருபணம்

வேதோபப்ரஹமணஙகளில் ப்ரதானமான ஸ்ரீ ராமாயணத தில் வேததகில் போல் தத்வ ஹித புருஷாாததங்கள் சொலலப் படுகின்றன. சாஸ்திரார்த்தங்களை நிாணயிககிற (I) உபகரம உபஸமஹாராதி ந்யாயததை ஸஞ்சாரம பண்ணிப்பார்த்தால் இது நன்கு விளங்கும். ஸ்ரீ ராமனுய அவதரித்த ஸ்ரீமந்நாராய ணனே சதுர் முகாதிகளுக்கும் (ப்ரம்மா முதலானவர்களுக்கும) சரண்யமாய பரமகாரணமான (எல்லோரையும் ஸ்ருஷ்டிதத) பர ப்ரஹமம் எனகிற அாததம ஆதி முதல கடைசி வரையில் ஆங காஙகு சொல்லப்படுகிறது. அப்படியே பரததவ வசீகரண ரூப சரணுகதியே பரமஹிதம (உயாநத உபாயம்) என்று பல இடங்களில் நிரூபிககப்பட்டிருககிறது. தசரதன் செயத யாகத் தில ஹவிர்ப்பாகம வாங்கவந்த தேவர்கள பகவானை சரணம அடைதல், விசுவாமிதரரை த்ரிசஙகு சரணமடைதல் முதலாக சுமார் இருபது இடங்களில் சரணுகதி சொலலப்பட்டிருபபதி ஞல் ஸ்ரீ ராமாயணம் சரணுகதி சாஸ்திரம் எனறும், தீர்க்க

---

I. "இப்படி இப்ரபநதம

उपक्रमोपसम्हारावभ्यासोऽपूर्वता फलम् ।

अर्थवादोपपत्ती च लिंगं तात्पर्य निर्णये ॥'

எனகிற தாதபர்ய லிஙகங்களை எல்லாம பரிபூர்ணமாக உடைய தாய ஸ்ரீ வால்மீகி பகவானுலே தருஷ்டமாயிருப்பதொரு சரணு கதி வேதம்' என்று ஸ்ரீ அபயப்ரதான ஸாரததில் ஸ்ரீ தேசிகன் அருளிச்செய்திருப்பது இஙகு அனுஸந்தேயம். இதன கருதது ஒரு க்ரநதத்தில் ப்ரதிபாதிககப்பட்டிருககும விஷயம் எது எனறு நிச்சயிக்கக காரணம் என்று சொல்லப்பட்ட—ஆரம்பம், முடிவு, அடிககடி சொல்லுவது, பலத்தை நிரூபிபபது, ஸ்தோத திரம செயவது, முதலிய லக்ஷணஙகள் இதில் பூரணமாயிருக் கின்றன. அதாவது சரணுகதியை இதில் ஆரமபம முதல காண்டம தோறும் பல படிகளில் நிரூபிததிருப்பதிஞல் இது சரணுகதி வேதம் எனபபடுகிறது என்றபடி.

சரணாகதி என்றும் சொல்லப்படுகிறது. இந்த சரணாகதி என்கிற ப்ரபத்திக்கு (1) தேச நியமமும், காலநியமமும், ப்ரகார நியமமும் அதிகார நியமமும் பலநியமமுமில்லை. குணபூர்த்தி யுள்ள விஷய நியமமேயுள்ளது. தேவர்கள் செய்த சரணாகதி க்குப் பலன் ராக்ஷஸ நிரஸனம். த்ரிசங்குவுக்குப பலன் சரீரத் தோடு ஸ்வர்க்கம போவது. ஸுநச்சேபனுக்கும் காகாஸுரனு க்கும் ப்ராண ரக்ஷணம் பலன். லக்ஷ்மணனுக்கு ராமானுவ்ருத்தி ஸ்ரீ விபீஷணனுக்கு ராமப்ராப்தி. பெருமாளுக்கு ஸமுத்திர தரணம். இவ்விதம அநந்தப் பலன்களுக்கு அவரவாகள் ப்ர பத்தி செய்திருக்கிறாகள். பரம புருஷார்த்தம மோக்ஷமே ன பதும் இதில் ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. ஜடாயுஸ் சபரீ முதலியவாகளுக்கும (2) ‘அன்று சராசரங்களை வைகுந்தத தேற்றி’ என்றும், (3) புற்பாமுதலா புல்லெறும்பாதி ஒன்றின்றியே நற்பாலுக்கு உய்த்தனன்’ என்றும,

---

1. இந்த வாக்யத்தின் ‘ கருத்து-புத்திரனை ஆசைப்படும வன் புத்திர காமேஷ்டியாகம் செய்யக் கடவன் என்கிறப்போல் ஓர் ஓா பலத்திற்கு ஓா ஓா உபாயம் சாஸ்திரங்களில் விதிக்கப் பட்டிருக்கிறது ஆனால் இந்த சரணாகதியோ ஸாவ பலத்திற் கும உபாயமாயிருக்கும். அப்படியே அல்லாத (மற்ற) உபாயங் களுக்கு அதிகாரி, தேசம, காலம், இவைகள் பிரித்து நிரூபிக்கப் பட்டிருக்கின்றன. இந்த ப்ரபத்திக்கோவெனில் அப்படிப்பட்ட விசேஷ (தனித்த) அதிகாராதிகள் கிடையா. இது எல் லோருக்கும் பொதுவான உபாயம். எல்லாப் பலத்தையும் கொடுக்கக்கூடியது. ஸ்நானாதிகளைப்பண்ணித்தான் வைதிக காமங்களை அனுஷ்டிக்க முடியும். அப்படிப்பட்ட நிர்ப்பந்த மும இதற்கு இல்லை. பலத்தில் ஆசை உடையவன் யாராகிலும், எந்த ஜாதியராயினும, எந்த இடத்திலும், எந்தக் காலத்திலும, எந்தத் தசையிலும் நின்றவனாய், இந்த உபாயத்திற்கு என்று விதிக்கப்பட்டிருக்கும ஆகிஞ்சந்யம் (வேறு உபாயம் இல்லாமை) முதலியவற்றை உடையவன இந்த உபாயத்தை அனுஷ்டித்து இஷ்ட பலத்தைப் பெறலாம என்பது

2. பெருமாள் திருமொழி-10-10.

3 திருவாய்மொழி-7-5-1

(1) तिर्यग्योनि गताश्चापि सर्वे राममनुव्रता ।
(2) विवेश वैष्णवं तेजस्सशरीरस्सहानुज. ॥

என்றும சொல்லுகிறபடியே அயோத்தியில உள்ள சராசரங்கள் யாவற்றுக்கும் முக்தியைக் கொடுத்தார என்று சொல்லப்பட்டிருப்பதினுல் அந்த முகதியே உயாந்த புருஷாாததம் என்று நிரூபிககப்பட்டதாயிற்று

## ஆழ்நதிருக்கும் அாதத விசேஷங்கள்.

மஹிர்ஷியின் சொற்கள் எலலாம் பெருமபாலும ஸ்தூல ஸூக்ஷ்மார்த்தங்களோடே கலந்தே இருககும. பத்து முகங களாகிற பத்து இந்திரியஙகளோடு கூடிய மனதாகிற ராக்ஷஸ ராஜனுல் அதிஷ்டானம செயயபபட்டு ஸம்ஸாரக கடலால சூழப்பட்டிருககிற லங்கையாகிற சரீரததிறகுள் நினறு, தீன தசையை அடைந்து, தபிததுககொணடு, கடலைக கடகக உபாயம அறியாமல் வருநதுகின்ற ஸீதையாகிற ஜீவன் பககல் ஹனுமாளுகிற ஆசாாயன வநது நாயகனுகிற பகவானுடைய ஸவரூபாதிகளையும் இருப்பையும உபதேசிதது (3) 'உடன கூடுவது எனறு கொலோ' என்கிற ஆாததியை உண்டாககி, அதன வழியாக உபாயததைக் கைப்பற்றி மோக்ஷம அடையும்படி செயகிறுன என்பது வால்மீகியின உட்கருதது. இவ்வாாத்தத்தை

(4) दशेन्द्रियाननं घोरं यो मनो रजनीचरम् ।
विवेक शरजालेन शमं नयति योगिनाम् ॥

என்றிவை முதலியவைகளை அனுஸரிதது ஸ்ரீ தேசிகன்

(5) दर्पादग्र दशेन्द्रियाननमनोनक्तंचराधिष्ठिते
देहेऽस्मिन् भवसिन्धुना परिगते दीना दशामास्थित ।
अद्यत्वे हनुमत्समेन गुरुणा प्रख्यापितार्थ पुमान्
लङ्कारुद्ध विदेह राजतनया न्यायेन लालप्यते ॥

எனகிற சுலோகத்தில அருளிச் செயதாா, (4) ஸவாப தேசததில்

---

1. ராமா - உததர - 109—22, 2 ராமா-உத-110-12

3. திருவாயமொழி

4. ஸ்ரீ ஸங்கலப ஸூாயோதயம் - 1—72

5. ததவார்ததஙகளைப போதிக்கும வ்ருத்தாநதங்கள் ஸவாபதேசம், அநயாபதேசம, பரோபதேசம், என மூன்று வகையாகப பிரிக்கபபட்டிருககும். ஸ்வாபதேசம என்பது தனககு

பிராட்டியை ஜீவாத்மாவாக வைத்து வால்மீகி பேசுகிறார். ஜீவாத்மாவானவன் பரமாத்மா விஷயத்தில் எவ்விதம் இருக்க வேண்டும் என்பதை ஸீதையின் சரித்திரத்தால் பல இடங்களில் எடுத்துக் காட்டியிருக்கிறார். சேதனன் பகவத் விஷயத்தில் இழிந்து பகவானைப்பற்றும்போது பகவானிடத்திலுள்ள குணம் கண்டன்று, இவ்வாத்மாவிற்கு அவன் வகுத்த விஷயம் என்றே பற்றவேண்டும் என்கிற ரஹஸ்யமான அர்த்தத்தை பதிவ்ரதா ஸ்திரீயின் இருப்பைச் சொல்லுகிற வ்யாஜத்தால சேதனன் இருக்கவேண்டிய இருப்பை உபதேசிக்கிறார். பால காண்டத்தின இறுதியில் ஸ்ரீ ராமனுக்கும பிராட்டிக்கும் இருந்த அன்யோன்ய அனுராகம் (ஒருவருக்கு ஒருவருள்ள ப்ரீதி) எப்படி இருந்ததென்று நிரூபிக்கும் ப்ரகரணத்தில்

(I) प्रियातु सीता रामस्य दारा. पितृ कृता इति ।
गुणाद्रूप गुणाच्चापिर्भूयोऽभ्यवर्धत ॥
तस्याश्च भर्ता द्विगुणं हृदये परिवर्तते ॥

என்று நிரூபித்திருக்கிறார். இங்கு ராமனுக்கு ப்ரீதி உண்டானதற்கு दारा: पितृकृता इति गुणात् रूपगुणाच्चापि என்று மூன்று காரணம் சொல்லப்பட்டிருக்கிறது. முதல் காரணம் தன் தகப்பனார் பண்ணிவைத்த பெண் என்பது. ஸீதையினிடத்தில் உள்ள ஸ்திரீத்வ லக்ஷணமான தயை, அடக்கம் மடப்பம, தாக்ஷிண்யம் முதலிய குணபூர்ணத்வம இரண்டாவது காரணம. ஸீதையின் தேக ஸௌந்தர்யம் மூன்றாவது காரணம ஆனால் பிராட்டிக்கு

---

நடந்ததைத் தெரிவித்து அதனால மற்றவர்களுக்கு அந்த அர்த்தத்தை வெளியிடுவது. அந்யாப தேசம் என்பது தனக்கு நடந்ததைத் தானே தன் வார்த்தையாகச் சொல்லாமல் அயலாருடைய வார்த்தையாகத் தெரிவிப்பது. பரோபதேசம் என்பது அயலாருக்கு நேரில் உபதேச ரூபமாகச் சொல்லுவது. இங்கு 'ஸ்வாபதேசத்தில்' என்றது ப்ராட்டியின் அனுஷ்டான வ்ருத்தாந்தத்தை நிரூபித்து அதனால் ஜீவாத்மாக்களுக்கும அப்படியே உண்டாகும் என்பது காட்டப்படுகிறது என்றபடி.

I. ராமா - பால - 77—26, 27

ஸ்ரீ ராமனிடத்தில் உண்டான ப்ரீதிக்கு ஒரு காரணமும் சொல்லாமல் तस्याश्चभर्ता द्विगुणं हृदये परिवर्तते என்று ஸீதைக்கு பர்த்தாவிடத்தில் இரண்டு மடங்கு ப்ரீதி இருந்தது என்று நிரூபித்தபடியினால் கேவலம் பர்த்தா என்கிற காரணத்தைக் கொண்டே அப்படிச் செய்தாள் என்று மஹர்ஷியின் கருத்து. ராமன் விஷயத்திலும் கீழ்க் கூறிய காரணங்கள் இருந்தபோதிலும் அவை அநாதரிக்கத்தக்கவைகள் என்று திருவுள்ளம். இங்கு பர்த்தா என்கிற ஆகாரத்தினாலே ப்ரீதி உண்டாயிற்று என்பதை பிராட்டிதானே அநஸூயையுடன் ஸம்பாஷிக்கும் ஸந்தர்ப்பத்தில் வெளியிட்டதையும் மஹர்ஷி நிரூபித்தார். அத்ரி பகவானுடைய ஆச்ரமத்தில் அவருடைய பத்நியான அநஸூயை பிராட்டியைப் பார்த்து பந்து ஜனத்தையும் அபிமானத்தையும் ஐச்வர்யத்தையும் விட்டுப் பர்த்தாவுடன் காட்டிற்கு நீ வந்தது தைவயோகத்தாலே நன்றாய்க் கூடிற்று. நகரத்திலும் வனத்திலும் நல்லவனாகிலும் கெட்டவனாகிலும், ஸ்திரீகளுக்குப் பர்த்தாவே தைவம். நீ இப்படியே எப்பொழுதும் ராமன் விஷயத்தில் அநுகூலித்துப்போவாய் என்று சொல்ல, பிராட்டி இதைக் கேட்டு வெட்கத்தினால் தலை கவிழ்ந்து கொண்டு, எனக்கு ஸ்ரீ ராமன் பக்கல் த்ருடமான (உறுதியான) அநுராகமானது குணயோகத்தைப் பற்றியல்லாமல் ஸ்வரூப நிபந்தனமாக ஸ்வத: (தானே) உண்டாயிருக்கச் செய்தே, அதை (லோகத்தார்) அறியாமல் அவர் குணாதிகராய் (குணம் மிகுந்தவராய்) இருக்கையாலே எனக்கு குண நிபந்தனமான (குணத்தைக் காரணமாகக்கொண்டே) அநுராகமே உண்டாயிருக்கிறது என்று காட்டிலுள்ளார் நினைக்கிறார்கள். திருக்கல்யாண குணங்களுக்கு இருப்பிடமான ஸ்ரீ ராமனை அப்படிப்பட்ட குணங்களை விட்டுப் பிரித்துக் காட்டமுடியாமையாலே எனக்கு அவர் பக்கல் இருக்கும் இருப்பை அறிவிக்கமுடியவில்லை. (1) அவர் குணஹீனருமாய் (நல்ல குணங்கள் ஒன்றுமில்லாதவராய்) விரூபராய் (விகாரமான ரூபத்தை உடையவராய்) இருந்திருப்பாரேயாகில் அப்பொழுதும்

1. ராமா - அயோ .118—3 ச்லோகம் விவக்ஷிதம்

அவர் எனக்கு பர்த்தா என்கிற ஆகாரத்தால் ப்ரீதி உண்டாயே யிருக்கும் (1) 'வேமபின் புழு வேம்பன்றி உண்ணாது' (2) 'கண்டாரிகழ்வனவே காதலன்தான் செய்திடினும் கொண்டானையல்லால் அறியாக குலமகள்' என்கிறபடியே இருப்பவள் நான் என்று கருததுப்படச் சொன்னாள்.(3) ஆக இத்தால் சேதனன் பகவானைப்பற்றும்போது அவனிடத்தில் இருக்கும் குணஙகளைக் கண்டலலாமல் ஸ்வரூப ப்ராப்தம் என்றே பற்றவேண்டும என்கிற ரஹஸ்யத்தை வெளியிட்டார்.

பகவானுக்கு ஜீவன் சேஷ பூதன் என்பதை 'எந்த பகவானுககு நான் அடிமைப்பட்டவளோ அந்தப் பகவானை யின்றி வேறு ஒருவரை நான் அடையமாட்டேன்' என்றர்ததமுள்ள சுருதியின கருத்தை ஸ்ரீபரதாழவான் வாககில வைததுப் பேசுகிறார். ஸ்ரீ ராமனும் காட்டுககு எழுந்தருளி சகரவர்ததியும் ஸ்வர்க்கம் அடைநத பிறகு ராஜயம அராஜகமாக (அரசன் இலலாமல இருக்காமல் இருககவேண்டி ராஜயத்தை ஸ்வீகரிககும்படி வஸிஷ்டாதி மநதிரிகள் பரதனைப் பிரார்ததிகக அவர் ஸபாமததியில் கதறிககொண்டு (ஆசார்யராகையால் பூஜயரான) வசிஷ்டரையும் குறை கூறிககொண்டு

---

1. பெரிய திருமொழி - 11—8—7

2. பெருமாள் திருமொழி - 5—2

3. இது வெறும் பேச்சலல உண்மையான அபிப்ராயம எனபது ருகமணிப் பிராட்டியாய அவதரித்து ஸ்ரீ க்ருஷ்ணனைக காமுற்ற ப்ரகாரததை வெளியிடும் ஸப்த சுலோகஙகளில் முதல் சுலோகததில் श्रुत्वागुणान् என்று வெளியிடப்பட்டது. श्रुत्वा गुणान् என்பது முற்பட்ட யோஜனை, அது இங்கு விவக்ஷிதமில்லை, श्रुत्वा ऽगुणान् எனகிற இரண்டாவது யோஜனை இஙகு விவக்ஷிதம் தேவரீர் ப்ருந்தாவனததில கோபிமார்களுடன் விளையாடிய பரகாரத்தை எல்லாம கேட்டும், என்னுடைய மனது உமமை விட்டு அகலமாட்டாமல் நிறகிறது என்கிறாள் என்றபடி. அதாவது 'சடியன் கொடியன் நெடியமால் உலகம் கொண்ட அடியன் அறிவருமேனி மாயததன் ஆகிலும் கொடிய என்னெஞ்சம அவன் எனறே கிடககும்'' என்றும், ''உன தன்மார்வு தழுவதறகு ஆசையினமை அறிந்தறிந்தே உன்தன் பொயயைக் கேட்டு' என்றும 'கருமலாக கூந்தல் ஒருததி தன்னைக கடைக்கணிதது ஆங்கே

(1) राज्यं चाहं च रामस्य धर्मं वक्तुमिहार्हसि

ராஜ்யமும் நானும் ராமனுடைய சொத்து அதாவது அவருக்கு சேஷமான வஸ்துக்கள், சேஷ வஸ்துக்கள் ஒன்றை மற்றொன்று ஆளக்கூடுமோ? அப்படியானால் ராஜ்யம் தான் என்னை ஆளட்டுமே, லோகத்தில ராஜ்யத்துக்காகத் தகப்பனாரையும் தமையனையும் கொல்லுவாருண்டு. ஆனால் புத்திரனைவிட்டுப் பிரிந்து உடனே மரணம் அடையும் ஸ்வபாவத்தை உடைய தசரதன் வயிற்றில் பிறந்த நான் எங்ஙனே ராஜ்யத்தை ஏற்றுக் கொள்ளுவது என்றான்.

இப்படியே சேஷபூதனான சேதனன் தன்னுடைய சேஷத்வத்திற்கு அனுகுணமாக ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னிவழுவிலாவடிமை செய்வதும் கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியான ஒரு மிதுனத்திற்கு (பிராட்டியுடன் கூடிய பகவானுக்கு) என்பதை இளைய பெருமாளின் (லக்ஷ்மணனுடைய) அனுஷ்டானத்தினால் கவி வெளியிட்டிருக்கிறார் (2) 'கோலத் திருமாமகளோடு' என்றும், (3) ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலா நிற்ப' என்றும் நம்மாழ்வார் அனுஸந்தித்தபடியே ப்ராப்யம் (அடையவேண்டிய ப்ரயோஜனம்) ஒரு மிதுனம் என்பதை இளையபெருமாள்

(4) भवांस्तु सह वैदेह्या गिरिसानुषु रंस्यते ।
अहं सर्वं करिष्यामि जाग्रतः स्वपतश्च ते ॥

என்று பெருமாளும் பிராட்டியுமான சேர்த்தியிலே அடிமையை (கைங்கர்யம் செய்யவேண்டும் என்பதை) ப்ரார்த்தித்துப் பெற்றார் இது ஸ்வரூபப்ராப்தம். மிதுனசேஷத்வம் ஸ்வரூபமானால் மிதுன கைங்கர்யமும் ஸ்வரூபமே. (அதாவது இருவர்களுக்கு ஒருவன் சேஷபூதனானால் அவன் அவ்விருவர்களுக்கும் கைங்கர்யம் செய்யக் கடமைப்பட்டவனாவனிறே என்றபடி.) மாதா

---

ஒருத்தி தன்பால் மருவி மனம்வைத்து மற்றொருத்திக்கு உரைத்து ஒரு பேதைக்குப் பொய் குறித்து, புரிகுழல் மங்கை ஒருத்தி தன்னைப் புணர்த்தி அவளுக்கும் மெய்யனல்லை' என்றும், 'கள்வன் கொல்' என்றும் அனுஸந்திக்கப்பட்டதிறே.

1. ராமா - அயோத் 82—12
2. திருவாய்மொழி - 6—9—3
3. திருவாய்மொழி - 4—9—10
4 ராமா - அயோ - 31—27

பிதாக்கள் இருவருமான சேர்த்தியிலே ஶுச்ரூஷை (பணி) செய்யும புத்திரனுக்குப்போல, செய்கிற அடிமை ரஸிப்பதும் பிராட்டியும் பகவானுமான சேர்த்தியிலே. ஆகையால் தனித்து இவர்களுககு ப்ராப்யத்வமில்லை இருவரையும் பிரித்து விரும்பி னல் ராவண ஶூர்ப்பணகாதிகளுக்குப் போலே விநாசமே பலமாயிருககும். பிராட்டியைத் தனிதது விரும்பிய ராவணனும, பெருமாளைத் தனித்து விரும்பிய ஶூர்ப்பணகையும நாசம அடைந்தார்கள். இருவரையும பறறினல் இளையபெருமாளைப் போலே உஜ்ஜீவிததுப் போகலாம். (1) 'அல்லி மாமலராள் தன்னெடுமடியேன் கண்டுகொண்டு அல்லல தீர்நதேனே' என்ற படியே சேர்ததியிலே பறறினல்தான (2) உஜ்ஜீவனம உண்டா கும் எனபது தெரிவிககபபட்டதாயிறறு.

பகவானுடைய திருவடிகளில சரணகதி செயத ஞானி களில தலைவரான பரபன்னருககு உபாயத்தில பரவருததியானது அவரது அதயந்தபாரதநதாய ஸ்வரூபத்திறகு விரோதி என்றும் உபேயததில நிவருததியானது ருசிவிரோதி எனறும இவவிரண்டு அர்ததத்திற்கும் உதாஹரணமாக பிராட்டியையும இளைய பெருமாளையும் ஸ்ரீ வால்மீகி எடுததுக்காட்டி இருககிறார் லஙகையில் வநது ஹனுமான் பிராட்டியிடம் தன முதுகினபேரில் ஏறிககொண்டுபோய இராமனிடம ஸமாப்பிபபதாகச் சொன னபோது பிராட்டி தன்னைத்தான் காபபாறறிக்கொள்ள சக்தி உள்ளவளாயிருநதும, ஸ்வரூப பாரதநதர்யததை வெளிக் காட்டினள்.

---

1. பெரிய திருமொழி - 4—3—6

2. ஈட்டில் முதல ச்ரிய: பதியில் "ஆசரயண வேளையிலே மலர் மகள் விரும்பும நமரும பெறலடிகள" என்று தொடங்கி, போக வேளையிலே" கோலமலர்ப் பாவைக கன்பாகிய என் அன பேயோ' என்று சொலலுகையாலே ஆச்ரயணவேளையோடு போக வேளையோடு வாசியற ஒருமிதுனமே உத்தேசயம என்னுமிடம சொல்லிற்றாயிற்று" என்றும, 6—10—10 பாட்டின் வ்யாக்யா னத்தில் "பிராட்டிபககல் அபராதம காகத்துககும ராவணனுக் கும ஒததிருக்கச் செயதேயும் இவள் ஸந்நிதியாலே தலை பெறறது காகம்; அததனை அபராத மின்றியிலே இருகக ராவணன் தலை யறுப்புண்டானிறே இவள் ஸந்நிதியில்லாமையாலே; இததனை யுண்டிறே இவள் ஸந்நிதிககும் இவள் அஸந்நிதிககும வாசி" என்றும அருளிச் செய்யப்பட்டிருப்பது அநுஸந்தேயம.

(1) शरैस्तुसंकुलां कृत्वा लङ्कां परबलार्दनः ।
मां नयेद्यदि काकुत्स्थः तत्तस्य सदृशं भवेत् ॥

லங்கையில் சரகூடு கட்டி சத்துருவை அழித்துப் பெருமாள் என்னை அழைத்துக்கொண்டுபோவாராகில் அது (என் ஸ்வரூபத்துக்கும்) அவர் ஸ்வரூபத்திற்கும் தகுதியாகும். நானே என்னை ரக்ஷித்துக்கொள்ள முயலுவதும், அயலாரால் ரக்ஷணம் செய்து கொள்ளப் பாரிப்பதும் ஸ்வரூப விருத்தம் என்று பிராட்டி சொல்லியதும் நடத்திக்காட்டியதும் ஜீவனுக்கு உபாயத்தில் ப்ரவ்ருத்தியானது ஸ்வரூபவிருத்தமென்பதைக் காட்டுகிறது (2). பெருமாள் நில் என்று சொல்லியும் நிற்காமல் அவரை விட்டு ஒரு க்ஷணகாலமும் தனக்குச் செல்லாது என்பதைக் காட்டி அவருடைய வார்த்தையையும் மீறிக் காட்டிற்குத் தொடர்ந்து அடிமை செய்த இளையபெருமாளின் அனுஷ்டானத்தில் नाकिंचित्करस्य शेषत्वम् (யாதொரு காரியமும் செய்யாமல் இருப்பவனுக்கு சேஷத்வம் என்பது உண்டாகாது) என்கிறபடியே உபேயத்தில் நிவ்ருத்தியானது கைங்கர்ய ருசிக்கு விரோதி என்று காட்டப்பட்டதாகிறது.

---

1. ராமா - ஸு - 39 - 30

2. இதின் கருத்து - ப்ரபத்தியை அனுஷ்டித்தவன் இந்த ப்ரபத்தி தனக்கு பலத்தை ஸாதித்துக் கொடுக்கிறது என்று நினைப்பது ஸ்வரூபவிருத்தம், ப்ரபத்தி, நாம் இதுவரையில் செய்துவந்த பாபங்களை விலக்க, ஸர்வேச்வரன் தனதுடைய ஸஹஜகாருண்யத்தால் மோக்ஷம் கொடுக்கிறான் என்று பகவானே ப்ரதானமான உபாயம் என்று அனுஸந்திக்க வேண்டும் என்று தெரிவிப்பதில் தாத்பர்யத்தை உடையது. இப்படி இல்லாவிட்டால் உபாயானுஷ்டானமே விதிக்கா தாகையினால் ப்ரபன்னன் என்கிற ஆகாரமும் ஏற்படாது ஆகையினால் ஸ்வரூபவிருத்தம் என்பதே விதிக்காது-என்பது. அப்படியே உபேயத்தில் நிவ்ருத்தியானது ருசிவிரோதி என்பதற்கும் ப்ரமாணங்களுக்கு விரோதமில்லாமல் அர்த்தம் கொள்ளவேண்டும். அதாவது இந்த ஜீவாத்மா பகவானுக்கு சேஷ பூதமாயே இருக்குமாகையினால் அந்த சேஷத்வத்திற்கு உசிதமான கைங்கர்யத்தை இவன் ஸ்வரூப முள்ளவரையில் நிரப்பந்தித்தாவது செய்யவேண்டும் என்கிற

இந்தக் காவ்யத்தில் பிராட்டி முதலியவர்களின் அனுஷ்டானம், அனுபவம் முதலியவற்றால் இந்த ஸம்ஸாரததில் இருக்கும் ஒரு ஸ்ரீவைஷ்ணவனுக்கு உண்டாகக்கூடிய பல இடையூறு முதலியவைகள் வெளியிடப்பட்டிருக்கின்றன. எங்ஙனே என்னில்:—

இளையபெருமாள் திறததில் பிராட்டி சொன்ன கொடியதான வார்த்தையின் பலனாக அப்பொழுதே பிராட்டிக்குப் பெருமாளை விட்டுப்பிரிய நேர்ந்த வ்ருததாந்தத்தினால் பாகவதாபசாரததின் கெளரவம் வெளியிடப்பட்டது.

பிராட்டியை ராவணன பலாத்காரமாக எடுத்துககொண்டு போன ஸமயததில் அவனுடைய கரஸ்பாசம எவவளவு அஸஹ்யமாய இருநததோ அதைபபோல இந்த தேஹஸம்பந்தமும் நமக்கு அஸஹ்யமாய இருககவேண்டும என்பது காட்டப் பட்டது.

பிராட்டிக்கு ராக்ஷஸிகளின மிரட்டுதல முதலியவைகளைப் போல புதர களததராதிகளின பாஷணாதிகள் இருககும் எனபது தெரிவிக்கப்பட்டது.

மாயா மருகமாய்த் தோனறிய மாரீசன பிராட்டியின மனதை இழுததுப பஹு தூரம் சென்றுபபோலே சபதாதி விஷயங்கள் நம்மை இழுததுச செல்லும என்பது நிரூபிககப் பட்டது.

---

சாஸ்திரார்த்ததை வெளியிட்டபடி. அபபடியே பகவான் நியமிததருளும கைஙகாயததைச செய்வது நமககுக கடமை என்கிற அர்த்ததை ஸ்ரீபரதாழ்வான் தம்முடைய அனுஷ்டானத தால வெளியிட்டார். இளையபெருமாளும் சேஷியுகநத கைங்கா யானுஷ்டானததின் ப்ராதான்யததை ஸ்ரீ பாதுகையாக திருவ யோதயைககு மீண்ட வருததாந்த்தினால் காட்டியருளினர். "ப்ரார்த்தநீயமான (ப்ரார்த்திக்கப் படவேண்டிய) சேஷி உகந்த கைங்காயததை இளையபெருமாளுடையவும் இவருடைய அவதார விசேஷமான திருவடி நிலையாழ்வாருடையவும ப்ரவருத்தி நிவ்ருத்திகளிலே தெளிவது" என்று ஸ்ரீமதரஹஸ்யதரய ஸாரததில் ப்ரதான பரதிந்ததிராதிகாரததில அருளிச செய்பபபட்டிருக கிறது அனுஸநதேயம். இளைய பெருமாள நிர்ப்பந்தித்துக காட்டிற்குச் சென்றுரே ஒழிய அங்குசெயத கைஙகர்யம எல்லாம் ஸ்ரீ ராமனுககும் ஸீதைக்கும் உகந்தவையாகவே இருநதன என்பது ப்ரஸிததம.

பத்துத் தலையுடைய ராவணனுடைய தோற்றம் எப்படிப் பிராட்டிக்குப் பொறுக்கமுடியாமல் இருந்ததோ அதைப்போல இவனுக்கும் இந்திரியங்களின் ஸந்நிதி என்பது தெரிவிக்கப் பட்டது.

ஹனுமானுடைய வரவுபோல ஆசார்யனுடைய ப்ராப்தி இருக்கும் என்று ஸூசிப்பிக்கப்பட்டது.

இப்படியே ராமகுணங்கள் பிராட்டிக்கு ஆறுதலாய் இருந்தாப்போல ஆழ்வார்களின் அருளிச் செயல்கள் இருக்கும் என்பதும், திருவாழியின் (ராமனுடைய நாமாங்கிதமான மோதிரத்தின்) வரலாற்றைத் திருவடி தெரிவித்தாப்போல ஆசார்யன் உபதேசிக்கும் குரு பரம்பரை என்பதும், திருவாழியைப் பெறுவது போல இருக்கும் ஆசார்யனால் உபதேசிக்கப்படும் திருமந்திரம் என்பதும், அசோகவனிகையில் பிராட்டிக்கு த்ரிஜடை முதலிய சிலர் உசாத்துணையாய் இருந்தாப்போலே இங்கு இவனுக்கு ஸ்ரீவைஷ்ணவர்களுடைய ஸல்லாபம் என்பதும், ராவணவதம் செய்து பிராட்டியை மீட்டாப்போலே இவனுடைய ப்ராக்ருத ஸம்பந்தத்தைவெட்டி, பரமபத ப்ராப்தியைத் தந்தருளுவான் என்பதும் விளக்கிக் காட்டப்பட்டதாகிறது.

பாகவதாபசாரத்தின் கொடுமை த்ரிசங்கு வருத்தாந்தத்தாலும் த்ருடீகரணம் செய்யப்பட்டதாகிறது. அதாவது எப்படி த்ரிசங்கு பாகவதாபசாரத்தினால் உருமாய்ந்து தக்த படம் போலே (கொளுத்தப்பட்ட துணிபோலே) ஆனானோ, அதைப் போல இச் சேதனனும் ஆவான் என்று காட்டப்பட்டது என்ற படி. தன்னுடைய சரீரத்துடன் ஸ்வர்க்கம் அடைவதற்கு ஸாதனமாக ஒரு யாகத்தை நடத்தவேண்டும் என்று தன் குலகுருவான வஸிஷ்டரை ப்ரார்த்திக்க, அவர் அது முடியாத கார்யம் என்று சொல்லியும் அதைக் கேளாமல் அவருடைய புத்திரர்களிடம் சென்று அப்படியே ப்ரார்த்திக்க, அவர்களும் மஹர்ஷியால் முடியாத கார்யத்தை நாங்கள் செய்ய முடியுமோ என்று கேட்க, ராஜா கோபத்தை அடைந்தவனாய் ஆசார்யனும் அவருடைய புத்திரருமான நீங்களும் 'மாட்டோம்' என்று சொல்லிவிட்டபடியினால், நான் மற்றோரிடம் சென்று அப் பலனைப் பெறப் பார்க்கிறேன் என்று சொல்ல, அவர்களும் கோபம் அடைந்து 'நீ சண்டாளன் ஆகக்கடவாய்' என்று சபிக்க,

அவன் உடனே பரம சண்டாளனாய்விட்டான். முன்பு ப்ரஹ்ம, வர்ச்சஸ்ஸுக்கு லக்ஷணமாக இருந்த யஜ்ஞோபவீதம் உடனே தோலாக மாறிவிட்டது. (சாபமானபடியினால் உடனே ப்ரத்யக்ஷத்தில் மாறுதல ஏற்பட்ட மற்ற இடஙகளில் இப்படி ப்ரத்யக்ஷமாக ஏறபடாவிட்டாலும் அவசியம் உண்டாகும என பது சாஸ்திர பலததினால் அறியத்தக்கது.)

(1) मद्भक्तान् श्रोत्रियो निन्दन् सद्य चण्डालता व्रजेत्। என்றும, (2) 'நுமர்களைப் பழிப்பராகில நொடிப்பதோரளவில் ஆஙகே அவாகள் தாம்புலையாபோலும்' எனறும ப்ரமாணஙகள் சொல்லு கிறபடியே காம சண்டாளர்கள் ஆவார்கள் ஜாதி சண்டாள னுககு காலாநதிரததில் பாகவதனாகைக்கு யோகயதையுண்டு. கர்மசண்டாளனுககு அதுவும இல்லை. தன்னுடைய ஆசாாயனை வஸிஷடரை அநாதரித்து, அவருடைய அனுமதியினறியே மறறொரு ஆசார்யனை வரிததமை த்ரிசஙகுவிறகு மஹாபாதகமாய் விட்டது இதின கொடுமையிறே விசுவாமிதாருடைய தபோ மாஹாதம்யததால் சரீரததுடன ஸ்வர்க்கம ஏறின தரிசஙகு இநதிரனால கீழே தளளப்படுவதற்கும், त्राहि, त्राहि (காப்பாறறும காப்பாறறு!) எனறு கதறும்படி செயததறகும், மீளவும அவரு டைய தபஸ்ஸின மகிமையினால் ஒரு புது ஸ்வாககம ஸ்ருஷடிக கப்பட்டாலும அதில அவன் தலைகீழாக நிறகுமபடியான இருப்பு ககும காரணமாய நின்றது. அப்படியே ஆசாாயாகளும, பகவான் அவதரித்துப் பண்ணின ஆனைததொழில்கள் எல்லாம் பாகவதாபசாரம பொறுமையினால்' என்று அனுஸந்திநதார்கள் மஹாஷிகளான பாகவதாகள் திறததில் ராவணன் செய்த அபசா ரததின் பலனாக பகவான அவதரிதது அவனை வதம் செய்யும்படி நேரிட்டது பகவான் தன் விஷயததில் செயத அபராதங்களை அதிகமாய்க் கணிசியான. தன ஆசரிதா திறததில் (விஷயததில) ஸ்வல்ப அபராதம பண்ணினாலும அவன் அபபோதே தண்டிதது விடுவான். (3) त्वयि किंचित्समापन्ने किं कार्यं सीतया मम

ஸ்ரீ ராமன் எழுந்தருளி நிறகச் செயதே ராவணன் கோபுர சிக ரததிலே வநது தோன்றினதை ஸஹிக்க முடியாமல ஸுக்ரீவன் அவன்மேல் பாயந்து அவனைக கீழேதள்ளி, திருமபி வநத பொழுது அவரைநோக்கி, நீர் மஹாராஜரான மேன்மை குலைய உம்மைத் திரஸ்கரித்து அந்த ராக்ஷஸப் பயல் ஒரு வார்த்தை

2. திருமாலை - 43
3 ராமா - யுத - 41 —4

சொன்னுனுகில் பிறகு ஸீதை தானும் எனக்கு எதற்கு? என்று சொன்னுன் ராமன். தனக்கு உயிரினிலையான பாகவதர்களுக்கு ஒரு தீங்கு நேர்ந்தால தனககு நேருவதைவிட அதிக சீறறம் கொள்வான் பகவான். தான் ஸமுத்திரராஜனை சரணம புகச் செய்தேயும் அவன் முகம காட்டாதிருகக அவன் விஷயததில 'कोपमाहारयत्तीव्रं, என்கிறபடியே பெருமாள் கோபததை ஏறிட்டுக் கொண்டார் (வரவழைததுக கொண்டார). ஆனுல தன்னுடைய பக்தனை ஹனுமானை நோவுபடுத்திய ராவணன விஷயத்திலோ

(I) ततो रामो महातेजा. रावणेन कृतव्रणम् ।
दृष्ट्वा प्लवङ्गशार्दूलं कोपस्य वशमेयिवान् ॥,

எனகிறபடியே கோபம இட்ட வழககாய அதாவது அதறகு வசபபட்டு நின்றுர்.

ராஜ தாமங்களின விவரணம்

இந்தக காவியததில் பல ராஜ தாமங்கள் ஆஙகாங்கு பதிநது கிடககினறன.

(2) रामो राज्यमुपासित्वा ब्रह्मलोकं गमिष्यति ।

என்கிற இடததில் வெகு அழகான ஆழ்ந்த பொருள் அமைககப் பட்டிருக்கிறது பரஜைகள எககேடு கெட்டாலும் கெடட்டும் நமக்கு என்ன? நம்முடைய வரும்படியும அதிகார வல்லமை யும தான் நமக்குவேண்டியது, பரஜைகள வரி முதலிய கஷ் டங்களினுல் அதிருப்தி அடைநதால் அவர்களை ஸைந்ய பலத தைககொண்டு அடக்குவோம எனறு அரசாக்ஷி புரிநத மன்னர் கள போலனறிககே, பகவான தனனைத் தாழநத வனுகவும பரஜைகளை உயர்நதவர்களாகவும கருதி ஒரு உபாஸகன் தன் உபாஸ்ய தேவதை விஷயததில எப்படி நடந்து கொள்வானே அதைபபோல ராஜ்யத்தை உபாஸிததார் என்பதினுல ராஜ்யத்தி லுள்ள ஜனங்களின் ப்ரீதியையே லக்ஷ்யமாகக கொண்டு, அவர்கள் மனம் கோணுமல் அவாகளுககுக கனவிலும் தீஙகு நினைக்காமலும் செய்யாமலும் அரசுபுரிநதார் எனறு சொல்லப் பட்டதாகிறது.

---

I. ராமா - யுத் - 69—136.
2. ராமா - பால - 1—97

'लोकस्य चरता हितम्' 'गुर्वींधर्मधुरं वहन्'

உலக நன்மையையே செய்துகொண்டு, ப்ரஜாபாலனமாகிற பெருமபாரத்தைத தாங்கிவந்தேன் என்றும் தசரத சக்ரவாததி வாககில் வைதது வெளியிடப்பட்டிருக்கிறது. அயோததியா காண்டம 100-வது ஸாககத்திறகு 'கச்சித ஸாககம்' என்று பெயா. அதில் ஸ்ரீ ராமன் பரதனை பரச்னம் பண்ணும (க்ஷேமம் விசாரிக்கும்) வியாஜததினல், பல ராஜ தர்மங்களை விரிவாக எடுததுக் காட்டியிருக்கிறா. யுததகாண்டததில் ராவணன், ராமன் இவவிருவரும் ஸபை கூட்டியதை வயாஜமாகக கொண்டு நீதி சாஸ்திரங்களில சொல்லியபடி ஸபை கூட்டினல் அது அரசனுக்கும் ப்ரஜைகளுக்கும் க்ஷேமகரமாகும் என்றும், அதறகு விருததமாகக் கூடடினல் பலன் விபரீதமாகும் எனறும வெகு சமத்காரமாக வெளியிட்டிருக்கிறா. [விபீஷணனுடைய சரணகதி ப்ரகரணத்தில் ஒரு ராஜா தன்னுடைய மநதிரிகளோடு எப்படிப் பேசவேண்டும் என்பதைக் காட்டியிருக்கிறா.]

—:*:—

---

இந்த வ்யாஸம் டெல்லி ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்த ஸபையின் வார்ஷிக மஹோதஸவத்தில் (2—4—44) படிக்கபபட்டது. இது எல்லோருககு ் உபயோகமாயிருககட்டும் என்று ஷை ஸபையா ரால் இது முதலில் அச்சிட்டு வெளியிடப்பட்டது. இதில் புட்நோட்டுகளும் ப்ரமாண ஆகாரங்களும ஷை ஸபையின் கார்யதரிசியினால் (ஸ்ரீ உப S. S. அயயங்கார்) எழுதப்பட்டவை

---

॥ श्रीः ॥

॥ श्रियै नमः ॥

॥ अस्मद्गुरुपरंपरायै नमः ॥

# ஸ்ரீவிசிஷ்டாத்வைத தத்வம்.

अशेषचिदचिद्वस्तु शेषिणे शेषशायिने ।
निर्मलानन्तकल्याणनिधये विष्णवे नमः ॥

श्रीवत्सान्वयभूषणं तिरुमलै नल्लार्यवंशोद्भवम्
ख्यातानन्तगुरोस्सुताद्गुणनिधेः श्री श्रीनिवासाद्गुरोः ।
संप्राप्ताखिल नैगमान्तयुगलं मत्तातमाढ्यं गुणैः
आचार्यं मम चक्रवर्तिनमहं श्रीरंगराजं भजे ॥

## ப்ரவேசம்

நம் விசிஷ்டாத்வைத தர்சநமானது ச்ருதி மூலமானதால் ச்ருதிபோல் அநாதியானது. அநாதியான நம் தர்சநத்துக்கு குமதிகளால் ஏற்பட்ட கலகத்தை நீக்கி நம் தர்சனத்தை நிலை நாட்டியதால் உடையவருக்கு தர்சன ஸ்தாபகர் என்று பெயர் வந்தது. அவர் புதிதாக ஒரு மதத்தையும் ஏற்படுத்தவில்லை. அவருக்கு முன்னிருந்த வ்யாஸர், போதாயனர், குஹதேவர், பாருசி, ப்ரஹ்மநந்தி, டங்கர், த்ரமிடாசார்யர், ஸ்ரீபராங்குசர், ஸ்ரீமந்நாதமுனிகள், ஸ்ரீ ஆளவந்தார் முதலிய பூர்வாச்சார்யர்களின் மதத்தையே அவர் தழுவியிருக்கிறார். அவர்களின் சொற்களை ஒவ்வொரு விஷயத்திலும் ப்ரமாணமாக அவர் எடுத்துக்காட்டியிருக்கிறார். நம் ஸித்தாந்தார்த்தங்கள் முழுவதும் எட்டெழுத்துடைய திருமந்திரம் முதலிய மந்திரங்களில் அடங்கியிருக்கிறது. அவ்வர்த்தங்களையெல்லாம், சிறிய கண்ணாடி மலை முதலிய பெரிய உருவங்களைக் காட்டுமாப்போலே, திருமந்திரம் சுருங்கத்தெளிவிக்கும் மந்த்ரங்களின் அர்த்தங்களையும், யோஜநாபேதங்கள் முதலியவைகளையும் ஸதஸம்ப்ரதாயப்படி அறிந்துகொள்ளவேண்டியது.

பரக்ருதவிஷயமான விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை நாம் நன்ருயறியவேண்டுமானுல், அதற்கு எதிர்தட்டான நிர்விசேஷாத்வைதத்தின் கொள்கை அவசியம் அறியவேண்டியதாகையால், அதைச்சற்றுச் சுருங்க விசாரிப்போம்

## நிர்விசேஷாத்வைதத்தின் சுருக்கம்

தத்வம் ஒன்றே உள்ளது. அகண்டமான பரமாத்மா ஒன்று தான் ஸத்யம். இது ஏகரஸமாய் ஏகஸ்வரூபமாயுள்ளது. இது கேவலம் ஸத்தாமாத்ரம் (இருப்பு என்பது); சைதந்ய ரூபம் (ஞானஸ்வரூபம்). இதைக்குறித்து அறிவு (ஞானம்) என்பதை இதற்கு விதேயமாய (Logical Predicate ஆக) சொல்லமுடியாது. ப்ரஹ்மம் என்பது ஞானமுடையதன்று; ஆனுல் ஞானமாகவேயிருக்கிறது. அதற்கு யாதொரு குணமும் விசேஷணமுமில்லை. நாம் மனதால் எந்த குணத்தை, (அடைமொழியை, விசேஷணத்தை) நினைக்கக்கூடுமோ அவை ஒன்றும் அதற்கு இல்லையென்றே சொல்லவேண்டும். (It is a homo- geneous mass of objectless thought) அவ்விதம் ஏகரஸமான ஒரு வஸ்துவைத்தவிர வேறே ஒன்றுமில்லையென்னும் பக்ஷத்தில் நம்மைச் சுற்றிலுமுள்ள நாநாவித இப்ரபஞ்சக் காக்ஷியும், நாமெல்லோரும் இப்ரபஞ்சத்தில் தனித்தனியாக இருப்பதும் எவ்வாறு எனருல், ப்ரஹ்மமானது அவித்யை என்றும் மாயை என்றும் சொல்லப்பட்ட ஒரு சக்தியோடு கூடியிருப்பதால் இந்த ஸமஸ்தமான ப்ரபஞ்சத்தின் தோற்றம் ஏற்படுகிறது இந்த சக்தியை 'ஸத்' (இருப்பது) என்று சொல்லமுடியாது ஏனெனில் ப்ரஹ்மம் ஒன்று தான் 'ஸத்'; सच्चेन्न बाध्येत Sat will not be sublated (ஸத்தாயிருந்தால் பாதம் ஏற்படாது இல்லாதது என்றும் சொல்லமுடியாது.) ஏனெனில் அது ப்ரபஞ்சத்தோற்றத்தை உண்டுபண்ணுகிறது. असच्चेन्न प्रतीयते (அஸத்துக்குத் தோற்றம் உண்டாகாது).

ஆகையால் இது 'ஸத்' என்றும், 'அஸத்' என்றும் சொல்லமுடியாத அநிர்வசநீயமான மாயை. அதனுலன்ரு தனித்தனியாக இருக்கும் நாநாவித வஸ்துக்களையுடைய இப் பிரபஞ்சம் காணப்படுகின்றது. ஒரு மாயாவியான இந்திரஜால வித்யையைச் செய்பவன் நம்முடைய மனதிற்கு எட்டாத தன் மாயாசக்தியால் வாஸ்தவமல்லாத சராசரரூபமான நாநா

வித வஸ்துக்களையும் பிராணிகளையும் எவ்வாறு காண்பிக்கின்றானோ, அவ்வாறே ப்ரஹ்மமும் இம்மாயா சக்தியோடு கூடியிருந்து வாஸ்தவமல்லாத இப்பிரபஞ்சத்தின் காக்ஷியை உண்டாக்குகிறது. ஆகையால் இந்த பிரபஞ்சத்திற்கு மாயைதான் உபாதானகாரணம் (material cause), அல்லது மாயையை ப்ரஹ்மத்தின் சக்தியாக விவக்ஷிக்கும்போது மாயையோடு கூடிய ப்ரஹ்மம் இந்த ஜகத்திற்கு உபாதான காரணமாய்ச் சொல்லப்படும். ஜகத்துக்குக் காரணமாகச்சொல்லும்போது அதை 'சபளிதப்ரஹ்மம் என்றும், 'ஈசவரன்' என்றும் சொல்லுவார்கள். ஈச்வரனுக்கு வசப்பட்டு நாமரூபங்களையுடைய (பெயர், உருவங்களுடைய) அநேக பேதங்களோடு கூடிய ஜகத்தாக ஆகிறது. அதிலிருந்து க்ரமமாக பஞ்சபூதங்கள முதலியவைகளும் உயிருள்ள பிராணிகளின் சரீரங்களும் உண்டாகின்றன. தனித்தனியாகக் காணப்படும் எல்லா உருவங்களிலும் அகண்டமான பரஹ்மம் ஒன்று தான உளது, ஆனால் மாயையின் காரியமான உபாதியால் பின்ன பின்னமாகக் காணப்படும் வஸ்துக்களால அது 'ஜீவன்', 'ஜீவன்' என்று சொல்லப்படு அநேக சேதனர்களாய் கண்டம் கண்டமாய் வெட்டுண்டிருப்பதாகக்காணப்படுகிறது. ஒவ்வொரு ஜீவனிலும வாஸ்தவமாயிருப்பது அகண்டமான ப்ரஹ்மம் ஒன்றே. வ்யவஹார தசையில் ஒரு ஜீவனை மற்றொரு ஜீவனிலிருந்து வகுத்துப் பிரிக்கும் (प्रातिस्विकமான) அந்தந்த ஜீவனுக்குரிய, அவயவ அமைப்புகளும மனோவ்யாபாரஙகளும் மாயையால் தோற்றுவதால் அவை வாஸ்தவமல்ல. மாயையால் மூடப்பட்ட ஜீவன் அஞ்ஞானததால் தன்னுடைய ஸ்வபாவத்தை அறியாமலும் தான் தான் ப்ரஹ்மம் என்று கண்டுகொள்ளாமலும மாயையின் காரியமான உபாதியேதான, என்று நினைத்துச் சரீரத்தையும் இந்திரியங்களையும் மனதையும தான் என்று பிரமித்திருப்பதால வாஸ்தவத்தில் சுத்த சைதந்யமாயும், அகர்த்தாவாயும், அகண்டமாயும், அளவில்லாமலுமிருக்கிற ஆத்மாவானது ஸ்வரூபத்திலும ஞானத்திலும அளவிடப்பட்டதாயும கர்த்தாவாகவும், போக்தாவாகவும் காணப்படுகிறது அதன் காமத்தால் புண்யபாபங்களை அனுபவிக்கிறது. கல்பத்தின் முடிவில் இந்த ஜகத்தானது அவ்யக்தமான மாயையாக ஆகிறது. ஆனால ஜீவர்கள அக்காலத்தில் உபாதி ஸம்பந்தமில்லாததால் பெரும் தூக்கத்திலுள்ளவர்கள்போல் இருக்கின்றன மறு

படியும் ஸ்ருஷ்டிகாலததில் முன் கர்மபலனே அனுபவிப்ப தறகாக சரீர ஸமபநதத்தையடைகின்றன. இவ்விதம ஜன்மம, காமம், மரணம் என்கிற ஸமஸார சககிரம் அநாதியாயசசுழன்று வருகிறது. இந்த ஸமஸாரத்தினினறும் மோக்ஷம அடைய உபாயம் வேததைதில் சொல்லப்பட்டிருக்கிறது. வேததநில கர்மங்களை விதிக்கும் கர்மகாண்டமானது மோக்ஷோபாயத தைக்காண்பிககாது. ஏனெனில மிகவும புண்யமான காமங களும புதிய சரீரங்களுககுக காரணமாகின்றன ஞானகாண் டததிலும் இரண்டு பாகஙகளுண்டு ஜகததோடு ஸமபநதப பட்ட ப்ரஹ்மததை அதாவது ஈச்வரன எனறும், ஸபளித ப்ரஹ்மமென்றும, 'அவரப்ரஹ்மமென்றும்' சொலலப்பட்டதும அநேக விசேஷணஙகளுளளதுமான தாழ்நத ப்ரஹ்மததை ப்ரதி பாதிக்கும பாகம ஒனறு; நிரகுணமானதும, விசேஷணமில லாததும, ஜீவனும ப்ரஹ்மமும ஒனறு எனனும்படியானது மற்றொரு பாகம, ஆக இரண்டு பாகஙகள் ஈச்வரன் எனறு சொலலப்பட்ட அவரப்ரஹ்மததை உபாஸனம செய்கிற ஜீவன மோக்ஷம அடையமாட்டான் ஆனால சரீரததை விட்டபிறகு தாழ்ந்த ப்ரஹ்மததினுடைய லோகததிறகுசசென்று அஙகே ப்ரஹ்மத்தைககாட்டிலும் வேறாகவே இருந்துகொண்டு அதிக மான சக்திகளுடன் அதிக சுகத்தை அனுபவிததுககொண டிருப்பான் பிறகு க்ரமேண பரஜ்ஞானததையடைநது அதினால் ஆத்யந்திகமான மோக்ஷததை அடைவான. ஆனால் तत्त्वमसि 'நீயே அந்த ப்ரஹ்மம்' என்பவை முதலிய ஜீவ ப்ரஹ்ம ஐகயததை ப்ரதிபாதிககும் வேதாநதவாகயஙகளின ஜ்ஞானததால் சிறப்புற்ற ஜ்ஞானியோவென்றால் தனக்கும ப்ரஹ்மததிறகும் யாதொரு பேதமுமில்லை யென்று கணடு கொண்டு சரீரவியோகமடைநதவுடன மோக்ஷததையடைகிறான் அதாவது மாயையை விலககி பரப்ரஹ்ம ஸ்வரூபமாகிற தன னுடைய ஸ்வரூபததோடு பிரகாசிககிறான் இதுதான நிர் விசேஷாத்வைதவாதிகளின மதம்.

## நிர்விசேஷ வஸ்துவை ப்ரத்யக்ஷத்தாலும் அநுமானததாலும் ஸ்தாபிக்கமுடியாது.

இதைச்சற்று விசாரிப்போம் நிர்விசேஷமாயிருக்கும ஏதாவது வஸ்துவைச்சொல்லமுடியுமா? அதறகு ஏதாகிலும் ப்ரமாணம உண்டா? நிர்விசேஷமான ஜ்ஞானம் நமக்கு எந்த

ப்ரமாணத்தினுலாவது உண்டாகக்கூடுமா? ப்ரத்யக்ஷப்ரமாணத்தை முதலில் எடுத்துக்கொள்வோம். நாம் எந்த வஸ்துவைக் காண்கிறபோதிலும் (Perception) அதை விசேஷணமுடையதாகவே காண்கின்ருேமல்லவா? இந்த வஸ்து பெரியது, சிறியது, நீளமானது, அகலமானது, உருண்டையானது, தட்டையானது, வெளுப்பானது, அழகானது, பழையது, பயங்கரமானது, சேர்ந்திருப்பது, தனித்திருப்பது முதலிய ஏதாவது ஒரு குணத்தோடு அதாவது விசேஷணத்தோடு கூடியதாகவே காணப்படுகிறது. கேவலம் வஸ்துமாத்திர ஜ்ஞானம் ஒருபொழுதும் உண்டாகிறதில்லை ஸ்ரீ சங்கராசார்யரின் கொள்கை வஸ்து மாத்திரஜ்ஞானம் உண்டாகலாம் என்பது புராதன ஐரோப்பிய தார்க்கிகர்களும் ஸ்ரீ சங்கராசாரியரின்கொள்கைப்படி 'Concept is the unit of thought' என்று சொன்ஞர்கள் அதாவது ஒரு வஸ்துவைக்குறித்து 'இது' என்று வஸ்து மாத்திர ஞானமும் 'வெளுப்பு' என்று விசேஷணமாத்திரஞானமும் தனித்தனியாக முதலில் உண்டாகிறதென்றும், பிறகு 'இதுவெளுப்பு' என்கிற ஸமுதாயஜ்ஞானம் (சேர்ந்தஜ்ஞானம்) உண்டாகிறதென்றும் சொன்ஞர்கள். அந்தப் பக்ஷத்தை நவீன ஐரோப்பிய தார்க்கிகர்கள் தூஷித்து 'Concept is not the unit of thought, but judgment is the unit of thought' என்று ஸ்தாபிக்கிருர்கள் அதாவது வஸ்துமாத்திர ஜ்ஞானமாவது விசேஷணமாத்திர ஜ்ஞானமாவது உண்டாகிறதில்லை. ஒரு வஸ்துவை நாம் பார்க்கும்போது 'இது வெளுப்பு' என்கிற விசிஷ்டஜ்ஞானமே உண்டாகிறதேயல்லாமல் துண்டு துண்டாக 'இது' என்றும், 'வெளுப்பு' என்றும் உண்டாகிறதில்லை. ஆனுல் 'இதுவெளுப்பு' என்கிற விசிஷ்டஜ்ஞானம் உண்டானபிறகு தனித்தனியாகப்பிரித்து நாம் ஆராய்ச்சி செய்கிருேமாதலால் நிர்விசேஷஜ்ஞானம் அனுபபன்னம், என்று நிர்த்தாரணம் செய்திருக்கிருர்கள். 'நிர்விகல்பகஜ்ஞானம்' என்ருல் ஏதாவது சில விசேஷணமில்லாமல் ஒரு வஸ்துவை நாம் க்ரஹிப்பதேயன்றி ஒருவிசேஷணமுமில்லாமல் க்ரஹிப்பது என்பதல்ல. ஒரு விசேஷணமுமில்லாமல் நாம் க்ரஹிப்பதுமில்லை, க்ரஹிக்கவும் முடியாது, ஸந்மாத்ரத்தை (இருப்பு என்பதை மட்டும்) நாம் க்ரஹிக்கிருேம் என்னும் பக்ஷமானது 'குடமிருக்கிறது', 'வஸ்திரமிருக்கிறது' என்கிற விசிஷ்ட விஷயமான ஜ்ஞானத்தை உண்டுபண்ணுகிற ப்ரத்யக்ஷ ப்ரமாணத்திற்கு

விரோதமாகிறது. ஸம்மாத்திரத்தைத்தவிர அவயவ அமைப்பு என்கிற ஜாதி முதலிய பேதத்தை ப்ரத்யக்ஷத்தினால் நாம் க்ரஹிக்காமற்போனால், குதிரையை விரும்புவோன் கழுதையைக் கண்டு ஏன் த்ருப்தியடைந்து திரும்பிப்போவதில்லை. ரூபத்தோடு கூடிய வஸ்துவைக் கண்ணாலும், ஸ்பர்சத்தோடு கூடியதை த்வகிந்த்ரியத்தாலும், சப்தத்தோடு கூடியதைக் காதாலும், ரஸத்தோடு கூடியதை நாவாலும், வாசனையோடு கூடியதை மூக்காலும் நாம் க்ரஹிக்கின்றோமேயல்லாமல் ஸம்மாத்ரத்தை நாம் க்ரஹிப்பதில்லை. ஆகையால் வஸ்துவின் அவயவ அமைப்பு என்கிற ஜாதி முதலிய பேதவிசிஷ்டம் தான் ப்ரத்யக்ஷத்திற்கு விஷயம். இப்படியே ப்ரத்யக்ஷமூலமான அனுமானப் ப்ரமாணத்தாலும் நிர்விசேஷ வஸ்துவை ஸ்தாபிக்கமுடியாது.

## சப்தமும் பேதத்தையே ஸ்தாபிக்கிறது

பிறகு சப்தப்ரமாணத்தைக் கவனிப்போம். சப்தமும் விசேஷணத்தோடு கூடிய வஸ்துவைத்தான் போதிக்கின்றது. ஒருபதம் என்றால் ப்ரக்ருதி (ப்ரத்யயத்தோடு (பகுதி விகுதிகளோடு) சேர்ந்தது. ப்ரக்ருதியும் ப்ரத்யயமும் அர்த்தத்தில் பேதமுள்ளவையாதலால் பதம் என்பது விசிஷ்டமான அர்த்தத்தையே போதிக்கிறது. உதாஹரணமாக 'போகிறான்' என்னும் பதத்தை எடுத்துக்கொள்வோம். இதற்குப் பொருள், पुंस्त्वविशिष्टवर्तमानकालविशिष्टगमनक्रियाविशिष्टव्यक्तिविशेषः அதாவது ஆண்பாலோடு கூடியதும், நிகழ்காலத்தோடு கூடியதும், போதல் என்கிற செய்கையுடன்கூடியதுமான ஒருவஸ்து, என்று இவ்வளவு விசேஷணங்களோடு கூடியது ஒரு பதமாயிருக்கிறது. பதபேதத்திற்குக் காரணம் அர்த்தபேதம். ஆகையால் அநேக பதங்கள் சேர்ந்த ஒருவாக்கியத்தில் அநேக அர்த்தபேதங்கள் அவசியமாதலால் நிர்விசேஷமான வஸ்துவை போதிக்கும் சக்தி சப்தத்திற்கு இல்லை. ஆதலால் சப்த ப்ரமாணத்தாலும் நிர்விசேஷ வஸ்துவை ஸ்தாபிக்கவொண்ணாது.

## ஸ்வப்நம் முதலியவையும் அப்படியே.

ஸ்வப்னம், மூர்ச்சை முதலிய அவஸ்தைகளிலும், ஸுஷுப்தி தசையிலும் நமக்கு உண்டாகும் ஜ்ஞானம் ஸவிசேஷமாகவே உண்டாகிறது. நல்ல அயர்ந்த நித்திரையிலும்

**सुखित्वं** (ஸுகியாயிருக்கும் தன்மை), **ज्ञातृत्वं** (அறியும் தன்மை), ஆகிய விசேஷணங்கள் 'நான்' என்பதற்குப்பொருளான ஆத்மாவுக்கு உண்டு.

### ஆகையால ப்ரஹ்மம் குணத்தோடு கூடியதே

ஆகையால் ஒவ்வொரு அவஸ்தையிலும் நமக்கு ஏற்படும ஜ்ஞானம் விசேஷண விசிஷ்டமாதலால ஜ்ஞானத்திற்கு ப்ரதியோகியான (பொருளான) வஸ்துக்களெல்லாம விசேஷண விசிஷ்டமானவை. இந்தஜகத்துக்குக் காரணமான ப்ரஹ்மத்தைப்பற்றி நமக்கு உண்டாகும் ஜ்ஞானமும விசேஷண விசிஷ்டமாதலால (குணத்தோடு கூடியவையாகையால்) ப்ரஹ்மம் விசேஷண விசிஷ்டமேயல்லாமல் நிர்விசேஷமல்ல.

### ப்ரஹ்மத்தின் விசேஷணங்கள.

பிறகு ப்ரஹ்மத்திற்கு விசேஷணங்கள் எவை என்கிற கேள்வி உண்டாகிறது. '**चित्**' (ஜீவன Soul), '**अचित्**' (அசேதனம, Matter,) இவை இரண்டும பரஹ்மத்திற்கு விசேஷணங்கள

### ஜீவ ஸ்வரூபம்.

'சித' என்று சொல்லப்பட்ட ஜீவஸ்வரூபமானது—சார்வாகர்கள் (நாஸ்திகர்கள்) சொல்லுகிறப்போல் சரீரமல்ல. யானையின் சரீரத்தில் யானையின அளவுள்ளது, எறும்பின் சரீரத்தில் எறும்பின் அளவுள்ளது என்று ஜைனர்கள் சொல்லுகிறபடி வெவ்வேறு அளவுள்ளதுமல்ல. உபாதியுடன்கூடிய, ப்ரஹ்மத்தின் கண்டம என்று பாஸ்கரர் சொல்லுகிறபடியுமல்ல. ப்ரஹ்மத்தின் ஓர் அம்சம ஜீவன் என்று யாதவப்ரகாசர் சொல்லுகிறபடியுமல்ல. பரப்ரஹ்மமே ஜீவன முதலியவைகள என்று அஜ்ஞானத்தால் ப்ரமித்திருப்பதால் ஜீவன் என்று பெயருள்ளது என்று ஸ்ரீசங்கரர் சொல்லுகிறபடியுமல்ல ஆனல் **वालाग्रशतभागस्य शतधा कल्पितस्य च भागो जीवः** (மயிர் நுனியில் நூறில் ஒன்றிலும நூறில் ஒரு பங்கு ப்ரமாணமுள்ளது ஜீவன் என்றறியவேண்டும); **नित्यो नित्यानां चेतनश्चेतनानां एको बहूनां** (நித்யர்களான அநேக ஜீவர்களுக்கு நித்யனான ஒரு சேதனன்), '**विज्ञानं यज्ञं तनुते**' (ஜீவன யஜ்ஞத்தைச

செய்கிறுன்)என்றிவை முதலிய ச்ருதிகளால் அணு அளவுள்ளது; ஒரே ஜீவனல்ல; ஜீவர்கள் அநநதம (infinite in number), மிதயையல்ல, ஸதயமானவர்கள், பிரதி சரீரமும பினனாகள் (as entities they are separate and real) என்று நிசசயிககப படுகிறது. அநேக ஜீவாகளிருக்கும்போது **अत्रिनाशितु नतद्विद्धये सर्वमिदम्** (யாதொன்றினல இந்த பரபஞ்சம முழுவதும வ்யாபிககப்படுகிறது. அது நாசமடையத்தகாதது) என்றிவைமுதலிய இடங்களில் ஜீவனை ஒருமையாகச் சொலலி யிருப்பது, ஒரு நெலகுவியலைப்பார்தது 'இது ஒரே நெல' என்று சொல்லுமாப்போல ஜஞான உருவததில் ஒனருபிருப்பதுபறறி என்று அறியத்தககது.

ஜீவன ஜஞானததை ஸ்வரூபமாகவுடையவன, ஜஞானமமுதலிய குணங்களை உடையவன், நிதயன் (eternal), அழிவில்லாதவன். ஜீவனை சேதனன எனறு சொல்லுகிறது சேதனாகள பததர், முகதா, நிதயர் என மூன்றுவகை. அநாதியான காம ப்ரவாஹததால ஸம்ஸாரததில மூழ்கியிருக்கும பதிநான்கு புவன அண்டகடாஹததுள்ளிருக்கும சதுர்முக ப்ரஹமா முதல பூசசி புழு ஸ்தாவரமவரையிலுள்ள ஜீவகோடிகளான நாமெலலோரும பத்தாகள். ச்ருதியில விதிககப்பட்ட உபாயத்தால் ஸமஸாரத தினின்று விடுபட்டவர்கள் முக்தாகள் என்றைக்கும ஸமஸார மிலலாமல அளவறற ஆநந்தததை அனுபவிததுக கொண டிருப்பவர்கள் நித்யாகள்.

## அசேதனஸ்வரூபம்.

அசேதனமும் ப்ரக்ருதி, காலம, சுத்தஸத்வம என்று மூனறு வகைப்பட்டது. இவையும் நித்யங்கள் ப்ரக்ருதி என்பது ஸத்வ ரஜஸ்தமஸ் என்கிற முககுணமுளளது; எபபோதும் விகார முள்ளது; பகவத் ஸவரூபததை மறைபபது, தன்னையே அனு பவிககும் புத்தியை ஸம்ஸாரிகளுக்கு கொடுப்பது; ஜீவாகளைப போல இதுவும ஸத்யமானது; மிதயையானதலல (பொய்யல்ல); இதை மாயை என்றும் சொல்வதுண்டு **मायां तु प्रकृतिं विद्यात्** (மாயை என்ருல் பிரக்ருதி என்று அறிதம) **दैवीह्येषागुणमयी मम माया दुरत्यया।** என்ளுல் உண்டாக்கபபட்ட முககுணமுள்ள மாயாப்ரக்ருதியானது தாண்டமுடியாதது, என்று பரமாணங் கள் முறையிடுகின்றன.

ஆனால் இந்த இடங்களில் 'மாயா' என்பதற்கு நிர்விசேஷாத்வைதவாதிகள் சொல்லுகிறபடி 'மித்யா' (பொய்யானது வாஸ்தவமல்லாதது) என்று பொருள் கிடையாது. பின்னையோ வென்றால் அஸுரர்கள் ராக்ஷஸர்கள் இவர்களுடைய அஸ்த்ரம் முதலியவைகள் போல் விசித்திரங்களான காரியங்களைச்செய்கிற படியால் மாயை என்னும் பதம் ப்ரக்ருதியைச்சொல்லுகிறது எது விசித்ர கார்யங்களைச்செய்கிறதோ அதற்கெல்லாம் மாயை என்று பெயர். ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் ततो भगवता तस्य रक्षार्थं चक्रमुत्तमम् । आजगाम समाज्ञप्तं ज्वालामाली सुदर्शनम् । तेन माया सहस्रं तच्छंबरस्याशुगामिना ॥ बालस्य रक्षता देहमेकैक श्येन सूदितम् ॥ (பிறகு அந்த ப்ரஹ்லாதனைக்காப்பாற்றுவதற்காக பகவானால் ஆஜ்ஞாபிக்கப்பட்ட ஜ்வாலை வரிசைகளையுடைய ஸுதர்சனம் என்கிற பெயருடைய உத்தமமான சக்ராயுதமானது வந்தது. மிகவும் வேகமாய்ப் போகிறதும் குழந்தையான ப்ரஹ்லாதனைக் காப்பாற்றுகிறதுமான அந்த சக்ராயுதத்தால் சம்பராஸுரனுடைய அநேக மாயைகள் தனித்தனியாக நாசம் செய்யப்பட்டன) என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த சுலோகத்தில் மாயை என்பதற்குப் 'பொய்' என்று பொருள் கூறப்பொருந்தாது ஏனென்றால் பொய்யானவஸ்துவாகில் சாஸ்திரங்களினால் கொல்லப்படவேண்டிய அவசியமில்லை ஆகையால் மாயாசப்தத்தால் சொல்லப்பட்ட பொருள் வாஸ்தவமாகவே இருக்கவேண்டும். मायया सततं वेत्ति च प्राणिनां शुभाशुभं (ஜந்துக்களின் புண்யபாபங்களைத் தன்னுடைய ஜ்ஞானத்தால் எப்போதும் அறிகிறான்) என்றும், ஸ்ரீமத்ராமாயணத்தில் देवमायेव निर्मिता (தேவதைகளின்மாயையாலே போல ஸீதை ஸ்ருஷ்டிக்கப்பட்டாள்)என்றும் சொல்லப்படடிருக்கிறது. மேலும் தண்டநீதியில ஸாம தாந பேத தண்டம் என்கிற நான்கு உபாயங்களை நிரூபித்து பிறகு இன்னும் சில மாயை, உபேக்ஷை, இந்திரஜாலம் முதலிய அமுக்கியங்களான மூன்று உபாயங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அதில் மாயையாவது ஒருவிதமாக இருக்கும் வஸ்துவை வேறுவிதமாக மாற்றும் சக்தி; இந்திரஜாலமாவது ஒருவிதமாக இருக்கும் வஸ்துவை வேறுவிதமாக காட்டும் சக்தி, என்று பிரித்துச்சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் ஆச்சர்யங்களான விசித்திர வஸ்துக்களை ஸ்ருஷ்டிப்பதால் ப்ரக்ருதியை மாயை என்று சொல்லுகிறதே யல்லாமல், பொய் என்கிற காரணத்தாலல்ல ஈசுவரனை மாயாவி என்று சொல்லுவதுண்டு.

ஏனெனில் அவன் மாயையை தனககு வசப்படுத்திக் கொண்டிருககிறுன் மாயையை வசப்படுததிக்கொண்டிருககும காரணததினுலேயல்லாமல், அஜஞானததை உடைததாயிருப்பதால மாயாவீ என்று சொல்லக்கூடாது.

ஜீவன் ஒருவனுககுத்தான் மாயையினுல் தடஙகல் சொல்லப்பட்டிருக்கிறது. இந்திரஜால விதயையைச செய்கிறவாகள முதலியவாகளிடததிலும சில மநதிரங்களினுலும, ஔஷதம முதலியவைகளினுலும, பொயயான வஸ்துவைபபறறிய உணமையான புத்தியுண்டாகிறபடியால் 'மாயாவீ' எனறு பிரயோகம் செயயப்பபட்டிருககிறது. ஆகையால் 'மாயை' என்பதறகுப் பொய என்று பொருள் இலலையாதலால மாயாஎன்னபபடும் பரகருதி மிதயையலல வாஸ்தவமானது.

காலம் நித்யம எனபது எலலோருககும தெரிநத விஷயம. சுத்தஸதவம் எனுறல் அபராகருதலோகம, அதைததான் 'தரிபாதவிபூதி' யெனறும, 'நிதயவிபூதி' யெனறும, 'ஸ்ரீவைகுண்டம்' எனறும், பரமபதம் எனறும, தெளிவிசும்பு என்றும் சொலலுகிறது.

கீழசசொனன ப்ரகருதி, காலம, சுத்தஸதவம், மூனறையும் 'அசித' எனறும் அசேதனம் எனறும சொலவாாகள.

இம மூன்றுவகையான சேதனர்களுடையவும, மூனறு வகையான அசேதனங்களுடையவும, ஸ்வரூபம், ஸ்திதி (இருபபு), ப்ரவருததி இவைகள ப்ரஹமததிறகு வசபபட்டவை இதை ஸ்ரீபாஷ்யகாரா स्वाधीनत्रिविधचेतनाचेतनस्वरूपस्थितिप्रवृत्तिभेदम् 'தனககுவசபபட்ட மூனறு விதஙகளான சேதனம, அசேதனம, இவைகளுடைய ஸ்வரூபம, இருபபு, வயாபாரம இவைகளை உடையவன்' எனறு அருளிச்செயதார்.

மூாதத (உருவுளள) த்ரவயம் விசேஷணமாகும் ப்ரகாரம்.

இந்தச் சேதனன் அசேதனம இவை இரணடும பரஹமத்திறகு விசேஷணஙகள் என்று கூறப்பட்டது இவவிடததில ஒரு ஆக்ஷேபம வரலாம். அதாவது உருவமிலலாத குணஙகள (abstract qualities) ஒருவஸதுவுககு விசேஷணஙகளாயிருககக

காண்கிறோம்; உருவுள்ளவை, (concrete objects) விசேஷணங்கள் என்று சொல்லுவது எவ்வாறு? எனறு. இதறகு ஸமாதானம்:— இங்கு விசேஷணம் என்றால் விசேஷ்யததை விட்டுப் பிரிக்க முடியாத பொருள். அது த்ரவ்யமாயும் (வஸ்துவாயும்) இருக்க லாம். குணமாயு மிருககலாம. பசுவினிடத்திலிருந்து கோதவம (பசுவான உருவ ), வெளுபபு முதலிய பதார்ததங்களை எவ்விதம மனதால் மட்டும் பிரிக்கலாமேயன்றி, (qualities which can be abstracted only by the mind) வேறு ப்ரகாரத்தில் பிரிக்கமுடியாதோ அவ்விதமே இநதச்சேதனன அசேதனம் இவை இரண்டையும் பரஹரத்தை விட்டுப் பிரிககமுடியாது ஆகையால்தான் இவைகளை ப்ரஹமத்துககு **अपृथक्सिद्धविशेषणं** (பிரிக்கமுடியாத விசேஷணங்கள்) என்கிறது பரஹ்மத்திறகு ஞானம பலம ஐச்வாயர முதலிய கலயாண குணங்களானவை எவவிதம் விட்டுப்பிரிககமுடியாத விசேஷ ணஙகளோ, அவ்விதமே சேதனன் அசேதனம இவை இரணடும் பிரிக்கமுடியாதவைகள். இவவிதமாக குணங்களையும் சேதனு சேதனங்களையும் விடடுபபிரிககமுடியாத விசேஷணங்களோடு கூடியதால பரஹமம விசிஷ்டமேயல்லது நிர்விசேஷமல்ல; அநேக கல்யாண குணஙகளோடு கூடியது என்றதாயிறறு

## நிர்குண ச்ருதிகளின தாத்பாயம்.

அநேக சுருதிவாகயஙகள் '**निष्कलं निष्क्रियं निरंजनं, निर्गुणं केवलो निर्गुणश्च**' பரஹ்மம நிர்குணமென்று பரதிபாதிக் கின்றனவே, அப்படியிருக்க பரஹமம் ஸகுணமென்றும் விசே ஷண விசிஷ்டமென்றும எவவாறு சொல்லலாம? என்கிற ஆக்ஷேபததிறகு ஸமாதானம்:—

**सत्यं ज्ञानमनन्तं ब्रह्म** ஜஞானமாதர ஸ்வரூபததை உடையது என்ற சுருதிகளும் பரஹமம ஜஞானஸவரூபம், அதாவது ஜ்ஞானம் என்பதினாலே நிரூபிககததக்கது என்றே சொல்லுகின் றன. இததாலே பரஹ்மம் நிர்விசேஷஜ்ஞானமாத்ர தத்வம் என்று சொல்லவொண்ணாது. ஏனென்றால அறிகிறவனுக்கு அறிவு ஸ்வரூபம். ஜஞானஸ்வரூபமான ப்ரஹமம, ஜஞானத திற்கு ஆச்ரயமாயிருககிறதென்று சொல்வது மிகவும் உசிதம தேஜோதரவயங்களான ஸூர்யன முதலியவைகள் ப்ரபை முதலியவைகளுக்கு ஆச்ரயமாயிருப்பதுபோல ப்ரஹமம்.

ஜ்ஞானம் முதலியவைகளுக்கு ஆச்ரயமாயிருக்கிறது. ப்ரஹ்மத்திற்கு ஜ்ஞாத்ருத்வம் முதலிய அநேக குணங்களுண்டு என்பதை ச்ருதிகள் பலவாறு உத்கோஷிக்கின்றன. यस्सर्वज्ञः सर्ववित् (எவன் யாவற்றையும் அறிகிறவனோ) ज्ञाज्ञौ द्वावजावीशानीशौ (அறிகிறவனும் ஆளுகிறவனுமான ஒருவனும் அறியாதவனும் ஆளப்படுகிறவனுமான மற்றொருவனும்), परास्य शक्तिर्विविधैव श्रूयते स्वाभाविकी ज्ञानबलक्रिया च இந்த ப்ரஹ்மத்திற்கு அநேக மேலான விசித்ரசக்தி ஜ்ஞானம் பலம் முதலிய குணங்கள் ஸ்வபாவமாயுள்ளது एष आत्माऽपहतपाप्मा विजरो विमृत्यु विशोकः विजिघित्सोऽपिपासः सत्यकामः सत्यसंकल्प (பாபம், கிழட்டுத்தனம், மரணம், துக்கம், பசி, தாஹம் முதலிய (கெட்ட) குணங்கள் இல்லாததும், ஸத்யகாமத்வம், ஸத்ய ஸங்கல்பத்வம் முதலிய நல்ல குணங்களையுடையதுமானது, ப்ரஹ்மம்) என்கிற ச்ருதிவாக்கியங்கள் ப்ரஹ்ம குணம் ஒன்றும் இல்லாதது என்று சொல்லுகிற நிர்குண ச்ருதிகளுக்கு ப்ரஹ்மம் கெட்டகுணங்கள் ஒன்றும் இல்லாதது என்று சொல்லுவதிலேயேதான் தாத்பர்யமென்பது ப்ரஹ்மம் அநந்த கல்யாணகுணமுடையதென்று சொல்வதற்காக முதல் ஆறுவிசேஷணங்களால் கெட்ட குணங்கள் யாவற்றையும் நிஷேதித்துக் கடைசி இரண்டு விசேஷணங்களால் ஸமஸ்தகல்யாணகுணங்களை உடையவன் என்று சொல்லியிருப்பதினால் ஏற்படுகிறது என்று வெளியிடுகின்றன ஆகையால் ப்ரஹ்மம் நிர்விசேஷமல்ல, அநந்த கல்யாணகுணங்களோடும் சேதனாசேதனங்களோடும் கூடியது இவ்விதம் சேதனாசேதன விசிஷ்டமான ப்ரஹ்மம் ஒன்றுதான் தத்வம்—என்பது விசிஷ்டாத்வைத ஸித்தாந்தம். இதுவே விசிஷ்டாத்வைத சப்தத்தின் பொருள்—விசேஷணங்களோடு கூடியவஸ்து விசிஷ்டம் என்னப்படும், அப்படி விசிஷ்டமான வஸ்து ஒன்று —என்பது.

## ப்ரஹ்மத்துக்கும் விசேஷணங்களுக்கும் ஆத்ம சரீரபாவஸம்பந்தம்.

இதற்குமேல் ஒரு ஆக்ஷேபம் வரலாம். அதாவது:— கீழ்க் கூறிய பிரகாரம் சேதனன், அசேதனம், ப்ரஹ்மம் இவைகள் வெவ்வேறு தனித்தனியான பதார்த்தங்களானதால், தத்வங்கள் மூன்றாயிருக்க, ஒரே தத்வம்தான் உண்டு என்று எவ்வாறு சொல்லக்கூடும் என்று. இந்த ஆக்ஷேபத்திற்குச் சரீர சரீரி பாவத்தால் விசிஷ்ட ஐக்யவிவக்ஷையினால் ஸமாதானம் சொல்லிக்

கொள்ளவேண்டியது. எப்படியென்றால்.—'நான் அறிகிறேன் என்று சொல்லும்போது அறிவது என்பது ஆத்மாவின் கார்யமாதலால் 'நான்' என்று சொல்லும்போது 'நான்' என்னும பததிளுல் சேதனனைத தனித்துச்சொல்லுகிறோம. 'நான பெருத்திருககிறேன்' என்று சொல்லுமபோது பெருததிருப்பது என்பது சரீரததின் தர்மமாதலால் 'நான்' என்னும் பதத்திஞல சரீரத்தைத்தனிததுச் சொலலுகிறோம "நான் பேசுகிறேன்" என்று சொல்லும்போது 'பேசுகிறது' என்பது தனித்த ஆதமாவின் கர்மமுமல்ல; தனிதத சரீரத்தின் தாமமுமல்ல தனிமையான ஆதமா பேசாது. தனித்த சரீரமும பேசாது, ஆகையால் "பேசுகிறேன்" என்பது சரீரததோடுகூடிய ஆத்மாவின் கார்யமாதலால, 'நான்' என்னும பததிஞல இவவிடததில் சரீரவிசிஷ்டமான ஆதமாவைச் சொல்லுகிறோம. அதுபோலவே சுருதியானது ஒன்றுக்கொன்று அதயந்தம பின்னங்களாயிருககும. சேதனன, அசேதனம, ப்ரஹமம, இபமூனறு வஸதுக்களையும, சில இடஙகளில தனிததனியாகவும சில இடங்களில சேர்த்துச் சொல்லுகின்றது மீமாம்ஸையில 'அகநிதேவதையை உததேசித்து அமாவாஸ்யை பௌர்ணமாஸைகளில எட்டு கபாலஙகளிலசெய்த புரோடாசததை தயாகம செயயவேண்டியது' என்கிற உதபததி வாக்யததால் ஆகநேயயாகததையும, அவர்களின பொருட்டு பௌர்ணமாஸையில பதினேரு கபாலஙகளில் செயத புரோடாசததை தயாகம செய்யவேண்டியது என்கிற மறறொரு உதபததி வாகயத்தால் அக்நீஷோமீயம் என்கிற யாகததையும் அவவாறே **उपांशुयाजमन्तरा यजति।** (உபாம்ஸு யாகததை நடுவில் செயயவேண்டியது) என்று மற்றொரு உதபதது வாகயததால் உபாம்சுயாகத்தையும், ஆக இமமூன்று யாகஙகளையும தனிததனியே விதிததுப் பிறகு ஷை மூனறு யாகஙகளையும சோததுச் சொல்லுகிற **य एवं विद्वान् पौर्णमासीं यजते।** (இவவிதம அறிநத எவன் பௌர்ணமாஸீ யாகத்தைச் செயகிருனே) என்கிற விதி வாக்கியத்தால் மூன்றுயாகங்களையும சோதது 'பௌர்ணமாஸீ' என்னும பதத்தாலும், அவவாறே முதலில் தனித்தனியாக விதித்துப் பிறகு 'அமாவாஸீ' என்னும் பதததால் ஆக்நேயம் 'ததியாகம' பயோயாகம்; என்கிற இமமூனறு யாகங்களையும் சோத்துச் சொல்லி, ஷை ஸமுதாயதவயமாகிற ஆறு யாகங்களை **दर्शपूर्णमासाभ्यां स्वर्गकामो यजेत।** ஸ்வாககத்தை விரும்புகிறவன

தர்ச பூர்ணமாஸ யாகம் செய்யக்கடவன் என்கிற அதிகார வாக்யத்தால் சொல்லுகிறது. அது போல் பெயரும் ரூபமும் வெவ்வேருக உள்ள சித், அசித, ஈசுவரன் இவைகளை क्षरं प्रधानं अमृताक्षरं हरः क्षरमात्मा नावीशते देव एकः ॥ விகாரமுள்ள பரக்ருதியையும் விகாரமில்லாத ஜீவனையும் ஆள்கின்ற ஈசுவரன் पतिं विश्वस्यात्मेश्वरं । (ஜகத்திற்கு சேஷியாயும், ஆத்மாவுககு நியநதாவுமான ஈசுவரன்) என்றிவை முதலிய வாக்யஙகளால் எலலா அவஸ்தைகளிலும் பரமாத்மாவான ப்ரஹமம சரீரி என்றும், மற்ற இரண்டும் அவனுக்குச் சரீரமென்றும் சொல்லி, சரீரியாகிற பரமாத்மா காரணவஸ்தையிலும் கார்யாவஸ்தையிலும் ஒரே தத்வம் என்று सदेव सोम्येदमग्रमासीत् । (ஸத் ஒனறு தான் முதலில் இருந்தது) आत्मा वा इदमग्र आसीत् । ब्रह्मवाइदमग्र आसीत् (ஆத்மா என்றும் ப்ரஹ்மம் என்றும சொலலப்படடது தான முதலில் இருந்தது,) என்றிவை முதலிய வாகயங்களால் சேதனு சேதனங்களைச் சரீரமாயுடைய பரமாத்மா விசிஷ்ட வேஷத்தாலே ஒன்று என்று சுருதி உத்கோஷிக்கிறது. ஆகையால் இச்சரீராத்மபாவ ஸம்பந்தத்தை விட்டுச் சில இடங்களில தததவம் ஒன்ருகவும் மற்ற இடங்களில் தத்வம் அநேகமாகவும் அர்த்தத்தை பறுவிதது அநதந்த அபிப்பிராயததுக்கு தக்கவாறு சுருதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

இந்தச் சரீராத்மபாவஸம்பந்தம் நம் ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தத்திற்கு ப்ரதானப்ரதிதந்த்ரம் (differentia) அதாவது மற்றுமுள்ள ஸித்தாந்திக ளொருவரும இசையாதே நம்முடைய ஸித்தாந்தத்திற்கே அஸாதாரணமான அர்த்தம். நம்முடைய ஸித்தாந்தம் ஒன்றில் தான் ஸகல ச்ருதிவாக்யங்களும தல்ய பலமானவை (ப்ரமாணமாக அங்கீகரிக்கப்படும தன்மை உடையவை) நிர்விசேஷாத்வைதிகளுக்கு ஜீவனுக்கும ப்ரஹமத்திற்கும் ஐக்யம் சொல்லுகிறப்போல் தோன்றும் அபேதச்ருதிகளும, ஆத்மாவுக்கு யாதொரு குணமும் இல்லையென்று சொல்லுகிறப்போல் தோன்றும நிர்க்குண ச்ருதிகளும முக்கியமானவை. பேதசுருதிகளும் ஸகுணசுருதிகளும் முககியமல்லாதவை. அவை வ்யவஹாரதசையில் கறபிக்கப்பட்ட பேதஙகளையும் குணங்களையும சொல்லுகின்றன. த்வைதவாதிகளுக்கு அபேதச்ருதிகள் முக்கியமல்ல. பேதசருதிகள் மட்டுமே

ப்ரபலஙகள். அபேதசருதிகள் துர்ப்பலங்கள். விசிஷ்டாத் வைதிகளான நமககோவென்றால், சேதனுசேதனங்களுக்கும ஈசுவரனுககுமுண்டான சரீராதமபாவஸம்பநததகதைச சொல்லு கிற கடக ச்ருதிகளின் பலததால எல்லா ச்ருதிகளும் துல்ய பலங்கள. ஸமஸ்தகல்யாண குணங்களையும் போதிப்பதால ஸகுணசுருதிகளும், கெட்டகுணங்கள் ஒன்றுமில்லையென்று சொல்வதால நிரகுணசுருதிகளும. அநதந்த பிநநஙகளான இமமூன்று தததவங்களின் ஸ்வரூபததைத தனிததனியாகப் பிரித துச்சொல்வதால் பேதசுருதிகளும், சரீரவிசிஷ்டமான பரமாத மாவை ஒனறு என்று விவக்ஷிபபதால அபேதசுருதிகளும, ஸ்வா ஸஙகளாய ஸர்வசுருதி ஸாமரஸ்யம் உண்டாகையால விசிஷ்ட வேஷத்தால் ததவம் ஒன்று என்று சொல்லக்குறையில்லை.

## ப்ரஹ்மததுககுச சரீரம் என்பதற்கு ஆக்ஷேபங்கள.

இதறகுமேல் ஒருபலமான ஆக்ஷேபம கிளம்புகிறது. விசிஷடாதவைத ஸிததாந்தததிறகு ப்ரதாந ப்ரதிதந்த்ரமான இநதச் சரீராத்மபாவ ஸம்பந்தம மிகவும் அஸஙகதம். சருதி பரமாணததிறகும அநுபவயுகதி வாதத்திறகும விரோதமாயிருக் கிறது. எனெனில் பரமாத்மாவைக குறித்து अपहतपाप्मा (பாபம மூப்பு, பசி தாஹம் முதலியது இல்லாதது).
I. अनश्नन्योऽभिचाकशीति । (சாப்பிடாமல் காமபலததை அநுப விககாமல, விளஙகுகிறுன்.) 2 अपाणिपादो जवनोग्रहीता पश्यत्यचक्षुः सशृणोत्यकर्णः । (கைகால்கள் இல்லாமல் வஸ்துககளை எடுககவும, ஓடவும், கண்களில்லாமல் பாரககவும, காதில்லாமல் கேட்கவும, சகதியுள்ளது), 3. अप्राणो ह्यमनाः । (பிராணனும் மனதுமில்லா தவன்) எனறு பரமாதமாவுக்கு சரீரம இந்திரியம் மனது பிராணன் ஒனறுமிலலையென்றும், 4. न ह वै स शरीरस्य सतः प्रियाप्रिययोरपहतिरस्ति । (சரீரமிருககுமளவில் ஸுகதுக்கங்கள் விடுவதிலலை) எனறும் சுருதிகள சொல்வதாலும, சரீரததில் தாதுககள் ஸமமாயிருநதால் ஸுகமும விஷமமாயிருந்தால துககமும உண்டாவது நம் அநுபவ ஸிததமாதலாலும, ஸர்வேசவரனுக்குக் காமங்களும் காம பலபோ கஙகளும் இல்லாததாலும், அவன இநதிரிய மூலமாய் போகத்தை அநுபவிககிறதில்லை யாதலாலும், அவனுககு நம்மைபபோல ப்ராணன்கள் இல்லை யாதலாலும், அவனுக்கு சரீரம் இருக்க

முடியாது. சேதனனும் அசேதனமும் அவனுக்குச் சரீரமா யிருக்கமாட்டா. சரீரத்திற்கு இந்திரியம் அவசியமாய் வேண்டி யிருப்பதால் இந்திரியாச்ரயமல்லாத அசேதனவ்யஷ்டி ரூபமான (அசேதனங்களின் சேர்க்கையினாலுண்டான) தருணம் காஷ்டம் முதலியவைகளும், ஸமஷ்டி ரூபமான பூதஸூக்ஷ்மமும் சரீரமாகா. ஜ்ஞானமொன்றே ஆகாரமான சேதனனுக்கும் இவை ஒன்றுமில்லாததால் அவனும் சரீரமாகமாட்டான்.

'சரீரம் என்றால் என்ன? भोगायतनं (போகஸ்தானம்) சரீரம் என்று சொல்லமுடியாது. போக ஸ்தானங்களாகிற வீடு வயல் முதலியவைகள் சரீரங்களென்று வ்யவஹரிக்கப்படுவதில்லை. ஸ்வதஸ்ஸித்தமான நித்யநிரதிசயானந்தத்தையுடைய ஈச்வரனுக்குத் தன்போகத்தைக் குறித்துச் சேதனர்களும் அசேதனர்களும் ஸ்தானங்கள் என்று சொல்லமுடியாது. ஆனால் 'எவனுடைய இச்சைக்கு அதீனமான ஸ்வரூபம், ஸ்திதி, ப்ரவ்ருத்தி இவைகளையுடையது எதுவோ அது அவனுக்குச் சரீரம்' என்று சரீர லக்ஷணம் சொல்லில் எல்லா வஸ்துக்களும் ஈச்வரனுடைய இச்சைக்கு அதீனமான ஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்திகளுடையவையாகையால் அவனுக்கு எல்லாம் சரீரம் என்று சொல்லவும் முடியாது. ஏனெனில் நம்முடைய சரீரத்தின் ஸ்வரூபமானது நம்முடைய இச்சையால் உண்டாகிறதில்லை. அவ்விதம் லக்ஷணம் (definition) சொன்னால் நம்முடைய சரீரம், சரீரமாகாமற் போய்விடும். ஒரு வியாதிக்காரனுடைய சரீரம் அவனுடைய இச்சையினால் ப்ரவ்ருத்திக்கிறதில்லை. அவன் சரீரமும் சரீரமாகாமற் போய்விடும். இறந்துபோனவனுடைய சரீரத்திற்கும் அந்த ஆத்மாவின் இச்சையினால் ஸ்திதி ஏற்படுகிறதில்லை. அதுவும் சரீரமாகாமல் போய்விடும். மேலும் நாம் நம்முடைய இச்சையினால் ஒரு பொம்மையைச் செய்கிறோம். அதைக் காப்பாற்றிவைத்து அதை ஆட்டிவைக்கிறோம். நம் இஷ்டம்போல் அதை அழித்து விடுகிறோம். ஆகையால் அந்த பொம்மையின் ஸ்வரூபம் ஸ்திதி ப்ரவ்ருத்தி இவைகள் நம்முடைய இச்சைக்கு அதீனமானதால் அது நமக்குச் சரீரமாய்விடும். பொம்மை நம்முடைய சரீரமென்றால் பரிஹஸிக்கத்தக்கது. ஆகையால் சரீரத்திற்கு லக்ஷணம் கீழ்க்கூறிய ப்ரகாரம் சொல்லக்கூடாது. பின்னை யெப்படிச் சொல்லவேண்டுமென்றால் — 'காம்பல போக

மான ஸுகதுக்கத்துக்கு ஸாதநமாயும், இந்திரியாச்ரயமாயும், பூதஸங்காத (சேர்க்கை) (combination of elements) ரூபமாயும், பஞ்சப்ராணாதீநதாரணமாயும் (sustained by the five breaths) இருப்பது சரீரம், என்றே லக்ஷணம் சொல்ல வேண்டியது. இவ்விதமான சரீரம் ஈச்வரனுக்கு இல்லை. ஆதலால் ஈச்வரனுக்குச் சரீரம் உண்டென்றும் சேதநாசேதனங்கள் அவனுக்குச் சரீரம் என்றும் சொல்லுகிற ஸித்தாந்தம் அஸங்கதம்—என்று. இதற்கு

ஸமாதானம்

இந்த ஆக்ஷேபம் ஸரியல்ல. ஏனென்றால்—எல்லா வேதாந்தவாக்கியங்களும் எவ்வித அவஸ்தையிலும் சேதனனும் அசேதனமும் பரமாத்மாவுக்குச் சரீரமென்பதைத் தெரிவிக்கின்றன. ப்ருஹதாரண்யகோபநிஷத்தில் **य पृथिव्यां तिष्ठन् . . . यस्य पृथिवी शरीरम् ।** (எந்த பரமாத்மா பூமியில் இருந்துகொண்டு அதை அடக்கி ஆளுகின்றானோ, எவனுக்குப்பூமி சரீரமோ) என்று ஆரம்பித்து ஜலம், அக்நி, வாயு, ஆகாசம், ஸூர்யன், சந்திரன் நக்ஷத்திரம், பிராணன், வாக்கு முதலிய இந்திரியங்கள், மனஸ், முதலிய ஸமஸ்தமான அசித் வஸ்துக்களையும் அவனுக்குச் சரீரம் என்று சொல்லி (எவன் ஜீவாத்மாவிலிருந்துகொண்டு அதை அடக்கி ஆள்கிறானோ, எவனுக்கு ஜீவாத்மா சரீரமோ) என்று சேதனனையும், அசேதனத்தையும் பரமாத்மாவுக்குச் சரீரமாகத் தனித்தனியாகச் சொல்லியிருக்கிறது. அவ்வாறே ஸுபாலோபநிஷத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்ரீமத் ராமாயணத்திலும் **जगत्सर्वं शरीरं ते** (ஜகத்து முழுவதும் உமக்குச் சரீரம்) என்று சக்ரவர்த்தித் திருமகனைப் பார்த்து ப்ரஹ்மா சொல்லுகிறார். ஸ்ரீவிஷ்ணு புராணத்திலும் **यदंबु वैष्णवः कायः तत्सर्वं वै हरेस्तनुः ।** (ஜலம் முதலிய எல்லாம் ஹரியின் சரீரம்), **तानि सर्वाणि तद्वपुः ।** (அவைகள் எல்லாம் அவன் சரீரம்) என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. மநுஸ்ம்ருதியிலும் **सोभिध्याय शरीरात् स्वात् सिसृक्षुः विविधा प्रजाः ।** (அவர் ஸங்கல்பித்து ஸூக்ஷ்மமான தன் சரீரத்திலிருந்து பிரஜைகள் யாவற்றையும் ஸ்ருஷ்டிப்பதற்காக) என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த மநுஸ்ம்ருதி ச்லோகவ்யாக்கியானவஸரத்தில் குல்லூகபட்டரும் **ब्रह्मैवाव्याकृत शक्त्यात्मना जगत्कारणमिति त्रिदण्डिवेदान्तसिद्धान्त एवाभिमत प्रतिभाति ।** (ஸ்ம்ருதிகர்த்தாவான மநுமஹர்ஷிக்கும் த்ரிதண்ட ஸந்யாஸ

மதமாகிற ஸ்ரீவைஷ்ணவஸித்தாந்தத்திலேயே திருவுள்ளம போல காண்கிறது) என்று வெளியில் சொல்லிக்கொள்ள மனமில்லாமல் சொல்லுகிருர். மஹாபாரததகிலும் ஸஹஸ்ரநாமாதயாயததில் त्रिभुवनवपुषं विष्णुमीशं नमामि । (மூன்று லோகஙகளையும சரீரமாயுடைய விஷ்ணுவை நமஸ்கரிககிறேன்) என்று சொலலப் பட்டிருக்கிறது. ஆகையால் பரமாத்மாவுககு சேதநாசேதனஙகள் சரீரமெனபது ஸாவசாஸ்திரஙகளுககும் ஸமமதமா யிருககிறது.

பிறகு சரீரலக்ஷணவிசாரம செயயப்புகுநதால, லோகததில் சரீரம் என்று எநத வஸ்துககளைச்சொல்லுகிருேமோ அவைகள ஒரே ஆகாரமுள்ளதாகக காணபபடுகிறதில்லை. கடம எனபது ஒருவிதமான அவயவ அமைப்புள்ள தரவயததை நியமேன (எபபோதும்) குறிககினறது. ஆகாரம் வேறுபடடால அநத வஸ்துககளைசசட்டி, வாணுய முதலிய பதஙகளால சொலலுகினருே.ம. சரீரசப்தம அப்படியலல. ஈ, எறுமபு, கொசு, புழு. பக்ஷி, ஸர்ப்பம, பசு, விருக்ஷம், மனிதன முதலிய ஒனறுக கொன்று மிகவும விதயாஸமுள்ள, விலக்ஷணஙகளான வஸ்துக கள யாவற்றையும சரீரசபதம குறிககினறது ஆகையால நாம சொல்லும லக்ஷணம மேறகுறித்த எலலா வஸ்துககளுககும பொருநதியதாக இருககவேண்டும. கர்மபலபோக ஸாதனமாயும, இந்திரியாச்ரயமாயும, பூதஙகளின சேர்க்கையாயும, பஞ்சவருத்தி ப்ராணதிநதாரணமாயுமிருபபது சரீரமென்று சொல்லவொண்ணுது. ஏனெனில்:—கீழகூறியபடி ஈசவரனுக்குச் சரீரமாகசசொல்லப்பட்ட ப்ருதவீ, ஜலம, ஜீவாதமா, முதலியவைகளிற பொருநதுவதிலலை (அவயாபதி தோஷம வருகிறது) அவ்விதமே ஈசுவரனும் முக்தாகளும தஙகளிஷ்டப் படி ஸவீகரிக்கும் சரீரஙகளிலும லக்ஷணம பொருநதுவதிலலை, ஏனெனருல் அந்தச் சரீரஙகள் கர்மபலபோகத்திறகாக ஏறபட்டனவல்ல. பரமாத்மாவினுடைய இச்சாவிகரஹஙகளும் அர்ச்சாவிகரஹஙகளும் न भूत संघसस्थानो देहोस्य परमात्मन । (பரமாதமாவின சரீரம் பூதஙகளின் சேர்க்கையால் ஏறபடடதலல) என்று சொலலபபடடிருப்பதால் அவவிடததிலும லக்ஷணம பொருநதாது. ஆகையால் பூதஸஙகாதரூபம எனகிற லக்ஷணமசம ஸரியலல. पंचवृत्तिप्राणाधनधारणम् । (ஐநது விதமான வருததிகளையுடைய பராணனலை தரிககப்படுதல்) என்கிற அமசமும ஸ்தாவர சரீரததில் பொருந்துவதிலலை. ஏனெனில் ஸ்தாவரஙகளில் பிராணன இருநதபோதிலும ஐநது

விதமாக இருந்துகொண்டு சரீரத்தைத் தரிப்பதில்லை. மேலும் 'இந்திரியாச்ரயத்வம்' (இந்திரியங்களையுடைத்திருத்தல்) என்கிற அம்சமும் பொருந்தாது; ஏனெனில் அஹல்யை முதலானவர் களுக்குக் காயத்தால் ஏற்பட்ட சிலை காஷ்டம் முதலிய சரீரங் கள் இந்திரியாச்ரயங்களல்ல. ஆகையால் ஸுகதுக்கத்திற்குக் காரணம் என்றும் சொல்லமுடியாது. ஆகையால் மேற்கூறிய சரீரலக்ஷணம் அஸங்கதம். ஸரியான லக்ஷணம் என்னவென் றால்—'ஈசுவரனைப் பற்ற நியமேன தார்யமுமாய் நியாம்யமுமாய் சேஷமுமான த்ரவ்யமாயிருக்கை அதாவது ஒரு சேதனனால் நியமேன தரிக்கப்படுகிறதும், நியமேன (எப்பொழுதும்) ஏவப் படுகிறதும், அவனுடைய அதிசயத்தை உண்டாக்குவதற்காக ஸ்வீகரிக்கப்பட்டதுமான த்ரவ்யம் சரீரம், (1) 'லோகத்திலும் சரீரம் சரீரியினுடைய ஸ்வரூபாச்ரிதமுமாய், ஸங்கல்பாச்ரிதமு மாயிருக்கக் காணாநின்றோம். ஜீவனிருந்த காலமிருந்து இவன் விட்டபோது அழிகையாலே ஸ்வரூபாச்ரிதம். இவ்வாத்தம் ஸங்கல்பமில்லாத ஸுஷுப்தி முதலிய அவஸ்தைகளில் நன்கு விளங்கும். ஜாகராதி (முழிப்பு முதலிய) அவஸ்தைகளில் ஸங்கல்பத்தாலே விழாதபடி தாங்கும்போது ஸங்கல்பாச்ரித மென்னக் கடவது. இதில் ஸ்வரூபாச்ரிதமாயிருக்கிறபடியை ஆதேயத்வமென்றும், ஸங்கல்பாதீனமாயிருக்கிறபடியை நியாம் யத்வமென்றும் சொல்லுகிறது. ஈச்வரன் சேதனாசேதனங்களைப் பற்றத் தாரகனுமாய நியந்தாவுமாகையாவது தன் ஸ்வரூபத்தா லும் ஸங்கல்பத்தாலும் யதார்ஹம் ஸத்தா ஸ்திதி ப்ரவ்ருத்தி களுக்கு ப்ரயோஜகனாயிருக்கை. ஈசுவரன் தன்னைத் தவிர ஸமஸ்த த்ரவ்யங்களுக்கும் அவ்யவஹிதமாக (நேராகவே) ஸ்வரூ பத்தால் ஆதாரமாயிருக்கிறான். அவ்வோ த்ரவ்யங்களைப் பற்ற ஆச்ரயித்திருக்கும் குணாதிகளுக்கு அவ்வோ த்ரவ்ய முகமாக ஆதாரமாயிருக்கிறான். ஸர்வ வஸ்துக்களுடையவும் ஸத்தை ஈசுவர ஸங்கல்பாதீனையாகையாவது, அநித்யங்கள் அநித்யேச்சை யாலே உத்பந்நங்களாயும் நித்யங்கள் நித்யேச்சையாலே ஸித்தங் களாயுமிருக்கை.' ஆகையால் இவ்விதம் லக்ஷணம் சொல்லில் ஈசுவரனைக் குறித்துச் சேதனாசேதனங்கள் யாவற்றும் சரீரம், அவற்றைக் குறித்து ஈசுவரன் சரீரீ, என்பது நன்கு பொருந்தும்.

ரோகியின் சரீரவிஷயத்தில் நியமனசக்தி இருந்தபோதிலும்,

---

1. ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரம்—ப்ரதானப்ரதிதந்த்ராதிகாரம்,

அக்கிக்கு மணி முதலிய தடைகள் இருக்கும் காலததில் சூடு முதலியது காணப்படாததுபோல, ப்ரதிபந்தகததால (தடைகளால) நியமன சக்தியானது காணப்படவிலலை. பருத சரீரவிஷயததில முனபு சரீரமாக ஏற்பட்டிருந்த ஸங்காததின ஏகதேசமிருபப தால் சரீரமென்று வ்யவஹரிக்கப்படுகிறதே தவிர, வாஸ்தவததில அது சரீரமலல. பகவானுககுச் சரீரம, இநதிரியங்கள ஒன்று மிலலை என்கிற சுருதி வாக்யங்களுக்குக காரணததால ஏறபட்ட சரீராதிகள் இல்லையெனறே தாதபாயயமாதலால, பூமி முதலிய அசேதனங்கள, சேதனாகள் இவைகள எல்லாம அவனுககுச் சரீரம் என்று சொலலததட்டில்லை.

## ஸ்ருஷ்டி எனபதின அாததம்.

இதன் பேரில ஒரு ஆக்ஷேபம் சொலலலாம 'எலலா சேதனர்களும் எலலா அசேதனஙகளும பகவானுககுச் சரீரமென்றும எனறைககும அவனைவிட்டுப பிரியாமலிருப்பவை யெனறும சொலலும பக்ஷததில आत्मा वा इदमग्र आसीत्, सदेव सोम्येदमग्र आसीत् ('ஆதமா ஒனறாகவே முதலில இருநதது', 'ஸத ஒனறு தான இருநதது') எனறிவை முதலிய சுருதி வாகயஙகளுக்கு விரோதம வருகிறது. மேலும பகவான ஜகததை ஸ்ருஷ்டிததார் எனறு சொலலுவதறகு அரததமேயிலலை. எபபோதும இருககும சரீரததை ஸ்ருஷ்டிததார் என்பது ஸ்வ வசன விரோதம்'— எனறு இதறகு ஸமாதானம்:— சில சுருதிகள் அசித வஸ்துவான போக்யததையும, சிதவஸ்துவான போகதாவையும், இவவிரண்டிறகும ஈசுவரனான பரமபுருஷனையும ஸ்வரூபததில வெவ்வேறு எனறு பிரிததுககாட்டுகின்றன. உதாஹரணம:— भोक्ता भोग्यं प्रेरितारं च मत्वा, प्रधान क्षेत्रज्ञ पतिः गुणेशः எனறிவை முதலியவைகள. மறறும சில சுருதிகள போக்தாவான சேதனனும, போக்யமான அசிததும பரமபுருஷனுக்குச சரீரமாயிருநது கொண்டு அவனால அடஙகி ஆளபபட்டு அவனை விட்டுப பிரியாமலிருக்கின்றனவெனறும, அவைகளுககும பரமபுருஷன் ஆதமா வென்றும் சொல்லுகின்றன. இவவிதம் எலலா அவஸ்தைகளிலும் சித், அசித, இரண்டும அவனுக்கு பரகாரம (Mode) என்றும், அவன பரகாரி யென்றும, காரணாவஸ்தை காரயாவஸ்தயிலுள்ள ஜகத்ரூபமாகவே அவன இருககிறான எனபதை ஜஞாபித்துக்கொண்டு सदेव सोम्येदमग्र आसीत् (ஸத ஒன்றேதான

முதலிலிருந்தது) एकमेवाद्वितीयं (ஒன்றேதான் வேறு இல்லை) तदैक्षत बहुस्यां प्रजायेयेति (அது நான் பலவாக ஆகக்கடவன் என்று ஸங்கல்பித்தது) सन्मूलास्सोम्य (இந்தப் பிரஜைகளெல்லாம் ஸத்திலிருந்து உண்டாயின') என்றிவை முதலிய சுருதிகள் புறப்பட்டன. இவ்விதம் ஸகல வஸ்துக்களுக்கும் ஆத்மாவான பரப்ரஹ்மம் சில காலத்தில் அவிபக்த நாமரூபமாய் (பெயரும், உருவமும் பிரியாமல்) இருக்கிறது. அப்போது சித், அசித, இவைகள் ஸூக்ஷ்மாவஸ்தையில் (subtle state) இருக்கின்றன. அதாவது ஒன்றுக்கொன்று வித்யாஸம் காணப்படாமல பெயர உருவம் ஒன்றும் காணப்படாமலிருக்கும் ஜீவன்களுக்கு அப்போது சரீர ஸம்பந்தமில்லாமல் ஜ்ஞானம் ஸங்குசிதமாய் (சுருங்கி) க்கிடக்கும் அசித்தானது அவ்யக்தமாயிருக்கும் (Unevolved). ஸ்வரூபத்தில் ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேறாக இருந்த போதிலும், ஜலத்தில் கரைந்த உப்புக்கட்டிபோல் பெயர் உருவமற்றுக்காணமுடியாமல மிகவும் ஸூக்ஷ்மமாயிருப்பதால் 'அவ்யக்தம்' என்று சொல்லுகிறது. அது तमःपरे देवे एकी भवति என்றபடியே நாசத்தையடையாமல் பகவானோடு ஒன்றாய்க் கலந்து கிடக்கிறது. ஆகையினால் சித, அசித, இவைகள் விபக்தமாக இல்லாமல் பரமாத்மாவோடு ஒன்றாய்க்கலந்து ஸ்வரூபம் தெரியாமலிருப்பதால் பரமாத்மா ஒன்றுதான் இருந்தது என்றும், ब्रह्म एवेदमग्र आसीत्। आत्मा वा इदमग्र आसीत्। एकोहवै नारायण आसीत्। एकमेवाद्वितीयम्।. (ப்ரஹ்மமென்றும், ஆத்மாவென்றும், ஸத் என்றும், நாராயணன் என்றும் சொல்லப்பட்ட ஒரே வஸ்துமாத்திரம் இருந்தது) என்றும சுருதிகள் சொல்லுகின்றன. 'அத்விதீயம்' (இரண்டாவதில்லாதது) என்பதற்கு வேறே வஸ்துக்கள் சித், அசித், இவைகள் இல்லையென்று அர்த்தம சொல்லக்கூடாது. நமது ஜாராஜ சக்கிரவர்த்தி பூமண்டலத்தில் அத்விதீயர் (one without a second) என்று சொன்னால் அவர் ஒப்பும் உயர்வுமற்றவர் என்று மாத்திரம் தாத்பர்யமேயல்லாமல், அவருக்கு புத்திர மித்திர களத்ர மந்திரி முதலானவர்கள் ஒருவருமே இல்லையென்று அர்த்தமில்லை. ஸூர்யன் ஆகாசத்தில் அத்விதீயனாய் விளங்குகிறான் என்று சொல்லும்போதும் அவனுடைய கிரணங்கள் இல்லையென்று மறுக்கப்படுகிறதில்லை. அவ்வாறே ப்ரஹ்மத்திற்கு இரண்டாவதாக எண்ணக்கூடியவனது முக்காலத்திலுமில்லை, அதற்கு மேலானதாவது ஸமான

மானதாவது ஒன்றுமில்லையென்றே தாத்பர்யமாதலால் சேதனு சேதனரூபமான இப்ரபஞ்சம் அககாலததிலில்லையென்று 'அத்விதீய' சுருதிக்கு ஆாததமில்லை. ஸர்வசகதியுள்ள பரஹ மத்தைத தவிர அதிஷ்டாதா வேறு இல்லை எனறே ஆாததம. நாமரூபம் ஒன்றும் இல்லாத அவஸ்தையைததான ப்ரளயா வஸ்தையென்றும், அவயக்தாவஸ்தையெனறும, காரணாவஸ்தை யென்றும் சொல்வது. அப்போது ப்ரஹமம் ஸூக்ஷ்ம சிதசித விசிஷ்டமாயிருக்கும். பிறகு ப்ரளயத்தின முடிவில ஸூக்ஷம சிதசித் விசிஷ்டமான ப்ரஹமம் बहुस्यां प्रजायेय। (நான பஹு வாக, அநேகமாக, ஆகிறேன) என்றும், हन्ता हमिमाः तिस्रो देवताः अनेन जीवेनात्मनानुप्रविश्य नामरूपे व्याकरवाणि (என்னை ஆதமா வாக உடைய ஜீவகோடிகளோடு அசித வஸ்து யாவற்றையும் அநுப்ரவேசிதது, விசிததிரங்களான நாமரூபஙகளையடைந்து விசிததிரநாநாவித ஸ்தாவரஜங்கம ரூபமான ஜகததாக ஆகிறேன்) என்றும் ஸங்கல்பிதது, तत्सृष्ट्वा तदेवानुप्राविशत् तदनुप्रविश्य सच्च त्यच्चाभवत्। (அதை ஸ்ருஷ்ட்டிதது அதையே அநுப்ரவேசிததது, நிர்விகாரமான சேதனனையும், எபபோதும விகாரமுள்ள அசேத னத்தையும் வயக்தமாகச்செய்து அவைகளின் பெயர் உருவங் களை அடைந்தது) எப்போதும எல்லா வஸ்துக்களையும் வயாபிதத ப்ரஹ்மத்திற்கு ஸருஷடிகாலத்தில அநுபரவேசமாவது — பசு வின வயிற்றில எஙகும வியாபிதத கனறுபோல ஸாரததையும வியாபிதத பரஹமததிறகு தனிததனியாக ஒவவொரு வஸ்து விலும நிறைநதிருககும் தன்மையைக் காண்பிககககூடிய இருபபு என்றே அாத்தம். ஒவவொரு வஸதுவின பெயரையும உருவததை யுமடைவதால், ஒவவொரு வஸதுவின பெயரும் ப்ரஹ்மததைக குறிக்கிறது. இத்தால் ப்ரஹமம் ஸாவசப்தவாச்யமாகிறது (எல்லா ப்பதங்களுக்கும் பொருளாகிறது.) ப்ரஹமததிறகு ஸாவசபதவா சயதவம் நம விசிஷ்டாதவைத ஸிததாநதத்திறகு மட்டுமே இசை ந்த அர்ததம், ஆகையால சரீராதமபாவ ஸம்பநதம போல ஸாவச ப்த வாச்யத்வமும ஸ்ரீவைஷ்ணவ ஸிததாநததின் மற்றொரு பர தான பாதிதநதரம. இவவிதமான ஸ்ருஷடியில ஜீவாகள பூாவஜனம புண்யபாபஙகளுககுத தககவாறு ஸுகதுககஙகளை அநுபவிபப தறகாக சரீரங்களைபடைந்து ஜஞானததிலும் மலர்ச்சியை யடை கின்றார்கள். இவவிதம ஸ்ருஷடிககுமுன ஸூக்ஷம சிதசித

விசிஷ்டமாயிருந்த ப்ரஹ்மமே நாமரூபங்களால் விகாரத்தை யடைந்தும், அநேக கர்த்தாக்களோடும், போக்தாக்களோடும், போகாங்களோடும், போக்யங்களோடும் கூடியதும், போகோபகரணங்களோடும் ப்ரதிநியதமான தேசகால நிமித்தம் கிரியா பலங்கள் இவைகளுக்கு ஆச்ரயமாயும், நம்முடைய மனதால கூட நினைக்கவொண்ணாத அமைப்போடு கூடியதும், மிகவும் ஆச்சர்யமுமான இந்த ஜகத்தாக ஆகிறது இவ்விதமான ஸ்தூல சித்சித்விசிஷ்டமான ப்ரஹ்மத்தை காரியாவஸ்தையென்றும், வ்யக்ததாவஸ்தையென்றும், அநேகமென்றும் சொல்லுகிறது. ஆகையால் நாம் காண்கிற இந்த ஜகத்தாகிற ஸ்தூலமான சேதநாசேதனங்களோடுகூடிய ப்ரஹ்மத்திற்குக் காரணம் ஸூக்ஷ்மமான சேதநாசேதனங்களோடுகூடிய ப்ரஹ்மமே யாதலால், இந்த ஜகத்திற்கு ப்ரஹ்மமே உபாதானகாரணம் (Material cause) என்று ஏற்படுகிறது ஆகையால ஸ்ருஷ்டி என்பதற்கு 'தனக்குள் பெயர் உருவமில்லாமல் அடங்கியிருக்கும் அநேக வஸ்துக்களைப் பெயர் உருவங்களோடு வெளிப்படுத்துவது' என்பதே பொருளாதலால ஸ்ருஷ்டி என்பதற்கு அர்த்தமேயில்லையென்று பூர்வபக்ஷி சொன்ன ஆக்ஷேபம் நிராகரிக்கப்பட்டது.

## ப்ரஹ்மமே ஜகத்துக்கு உபாதானகாரணம் என்பதற்கு ஆக்ஷேபங்கள்.

இதற்குமேல் ஒரு ஆக்ஷேபம் சொல்லலாம் அதாவது:— 'ஜகத்துக்கு ப்ரஹ்மம் உபாதான காரணம்' (Material Cause) என்று சொல்லுவது மிகவும் அநுசிதம். அது சாஸ்திரத்திற்கும் யுக்திக்கும் விரோதமாயிருக்கிறது. வேதாந்த வாக்கியங்கள் ப்ரதானம் என்னப்பட்ட ப்ரக்ருதியைத்தான் உபாதான காரணமாகச் சொல்லுகின்றன எது விகாரத்தை யடைகிறதோ அதைத்தான் உபாதான காரணமாய்ச் சொல்லவேண்டும் மண்ணானது குடமாக விகாரத்தை யடைவதால், குடத்திற்கு மண் உபாதான காரணம் அவ்விதமே ஜகத்தாக விகாரத்தை யடையக்கூடியது ப்ரக்ருதியாதலால், ப்ரக்ருதியே ஜகத்திற்கு உபாதான காரணம் என்று சொல்லவேண்டும். அறிவில்லாத அசேதனத்தை உபாதான காரணமாயும் அதற்கு அதிஷ்டாதாவாய

அதைத் தன் வசமாக்கிக் கொள்ளுகிற அறிவுள்ள சேதனனே நிமித்த காரணமாயும் (Operative Cause) உலகத்தில் கண்டிருக்கின்றோம். குடத்தைக் குறித்து மண் உபாதான காரணமென்பதும், குயவன் நிமித்த காரணமென்பதும் நம் அனுபவஸித்தம். ஸர்வஜ்ஞனும், விகாரமில்லாதவனும், அதிஷ்டாதாவுமான ஈசுவரன், அதிஷ்டேயமாயும், விகார முள்ளதுமான ப்ரதானமின்றிக் காரணமாகச் சுருதிகளிலும் சொல்லப்படவில்லை ஈசுவரன் निष्कलं निष्क्रियं शान्तं निरवद्यं निरंजनम्, स वा एष महानज आत्माऽजरोऽमर என்றபடியே யாதொரு விகாரமுமில்லாதவனென்றும், विकारजननीमज्ञामष्टरूपामजां ध्रुवां என்றபடியே ப்ரக்ருதி விகாரமுள்ளதென்றும், ஈசவரனால் அதிஷ்டிதமாயிருந்து கொண்டு ப்ரக்ருதியானது ஜகத்தை உண்டு பண்ணுகிறது, अस्मान्मायी सृजते विश्वमेतत् (இந்த ப்ரக்ருதியிலிருந்து ஈசுவரன் ஜகத்தை உண்டுபண்ணுகிறான்), 'मयाध्यक्षेण प्रकृतिस्सूयते स चराचरं' (என்னால் ஏவப்பட்டு ப்ரக்ருதியானது ஸ்தாவர ஜங்கம ரூபமான ஜகத்தை உத்பத்தி செய்கிறது) என்றும் சுருதி ஸ்ம்ருதிகள் சொல்லுகின்றன. மேற்படி விதம் சுருதிகள் சொல்லாமற்போனாலும், 'ஈசுவரன் ஜகத்திற்குக் காரணம்' என்கிற சுருதிவாக்யங்களுக்கு ஆதாரமின்றிப் போகாமலிருப்பதற்காக அவனால் அதிஷ்டானம் பண்ணப்பட்ட ப்ரதானமே உபாதான காரணம் என்று சொல்லவேண்டியது அவசியமாயிருக்கும். மேலும் லோகத்தில் நிமித்த காரணத்தையும் வெவ்வேறாகக் காண்கின்றோம். மண், தங்கம், முதலிய அசேதனங்களைக் கொண்டு குடம் கடகம் முதலியவைகளைச் செய்வதில், குயவன், தட்டான் முதலியவர்களுக்கு அநேக காரகங்கள் (செய்கைகள்) அவசியமாகச் செய்யவேண்டியிருக்கின்றன. ஆகையினால் நிமித்த காரணமும் உபாதானகாரணமும் வெவ்வேறாகவே அவசியம் இருக்கவேண்டியதென்கிற நியமத்தையும், காரியம் உண்டாவதில் அநேக காரகங்கள் அவசியம் என்கிற நியமத்தையும் கடந்து, ஒரே வஸ்துவானது நிமித்த காரணமுமாய் உபாதான காரணமுமாயிருக்கிறதென்று சொல்வது யுக்தமல்ல. ஆகையால் ईश्वरो न जगदुपादानं - जगन्निमित्तत्वात्, योऽनिमित्तं न तस्योपादानं यथा' घटस्य कुलालः (ஈசுவரன் ஜகத்திற்கு உபாதான காரணமல்ல. நிமித்த காரணமாயிருப்பதால்,

எவன் எதைக்குறித்து நிமித்த காரணமோ அவன் அதைக் குறித்து உபாதான காரணமல்ல (குடத்திற்குக் குயவன் போல) என்று யுக்தி வாதத்தாலும் ஈச்வரன் ஜகத்திற்கு உபாதான காரணமாகமாட்டான்.

மேலும் ப்ரஹ்மமானது ஜகத்தைக் காட்டிலும் விலக்ஷணமாய (வேறாக) இருப்பதால், அது ஜகத்திற்கு உபாதான காரணமாய இருக்கமுடியாது. நமது ப்ரத்யக்ஷத்தில் அசேதனமாயும், அசுத்தயாயும், ஈச்வரனல்லாததும் துக்கமயமாயும் காணப்படும் சித்சித் ரூபமான இந்த ஜகத்திற்கு ஸர்வஜ்ஞனும், ஸர்வேச்வரனும், கெட்ட குணங்களில்லாதவனும் ஆநந்தமயமாயுமிருக்கும் ஈச்வரன் உபாதான காரணமென்று சொல்லுவது எவ்விதம் பொருந்தும்? ஸர்வ தோஷங்களோடும் கூடிய ஜகத்திற்கு யாதொரு தோஷமுமில்லாத ஈச்வரன் உபாதான காரணமாகமாட்டான்.

மேலும் ஈச்வரன் ஜகத்தைக்காட்டிலும் விலக்ஷணன் என்று சுருதிகளும் முறையிடுகின்றன. காரியமாகிற ஜகத்தானது அசேதனமாயும், துக்கமுள்ளதாயுமிருக்கிறதென்று சுருதிகளும் சொல்லுகின்றன. எது எதற்குக் காரணமோ அது அதைக்காட்டிலும் விலக்ஷணமாய (வேறாக) இராது, மண் தங்கம் முதலியவைகளின் காரியமான குடம் கடகம் முதலானதுபோல். ஆகையால் ப்ரஹ்மம் ஜகத்திற்கு நிமித்த காரணமேயல்லாமல் உபாதான காரணமல்ல—என்று.

## இதற்கு ஸமாதானம்.

இந்த ஆக்ஷேபம் ஸரியல்ல. சாந்தோக்ய உபநிஷத்தில் ச்வேதகேதுவைப் பார்த்து அவன் பிதா சொல்லுகிறார் **स्तब्धोसि उत तमादेशमप्राक्ष्यः येनाश्रुतं श्रुतं भवति अमतं मतं, यथा सोम्यैकेन मृत्पिण्डेन सर्वं मृण्मयं विज्ञातं स्यात्।** (நீ எல்லா மறிந்தவன் போல் கர்வமுள்ளவனாய்க் காணப்படுகிறாய், அந்த ப்ரஹ்மத்தைப்பற்றி ஆசாரியர்களைக் கேட்கிறாய் போலும்—எதைப் பற்றிக் கேட்டால், கேழ்க்கப்படாத மற்ற வஸ்துக்கள் யாவையும் கேழ்க்கப்பட்டதாக ஆகுமோ, எது அறியப் பட்டால் அறியப்படாத மற்ற வஸ்துக்கள் எல்லாம் அறியப் பட்டதாக ஆகுமோ, அவ்விதமான ப்ரஹ்மத்தை நீ அறிந்தவன்

போதும்!) - என்று. இவ்விடத்தில் பிரதிஜ்ஞை த்ருஷ்டாந்தம் இவை இரண்டும், ப்ரஹ்மம் ஜகத்திற்கு உபாதான காரணமாக இருந்தால் மட்டுமே பொருந்தும். இவ்விடம் பிரதிக்ஞையாவது 'ஒன்று அறியப்பட்டால், அறியப்படாத மற்றவையெல்லாம் அறியப்படும்' என்பது. தருஷ்டாந்தமாவது, 'ஒரு மண்கட்டியை அறிந்தால் மண் ஸாமானகள் யாவற்றும் அறியப்படுகின்றன' என்பது முதலானவை. ப்ரஹ்மம் ஜகத்துக்கு நிமித்தகாரணமாக மட்டுமிருந்தால், ப்ரஹ்ம ஜ்ஞானத்தால் எல்லா ஜகத்தும் அறியப்பட்டதாக ஆகாது. குயவன் முதலியவர்களை அறிவதால் அவர்களால் செய்யப்பட்ட குடம் முதலியன அறியப்பட்டதாக ஆகாது. அப்போது பிரதிஜ்ஞையும் திருஷ்டாந்தமும் பொருந்தாது, ப்ரஹ்மம் உபாதான காரணமாக இருந்தால் மட்டுமே, உபாதான த்ரவ்யமாகிற மண்ணுண்டை, தங்கக்கட்டி, இரும்பு, இவை முதலியதை அறிந்தால் அவைகளின் கார்யமாகிற குடம், கடகம், வாசசி, கோடாலி முதலியதை அறிய முடியுமோ, அதுபோல, ப்ரஹ்மத்தின் கார்யமாகிற ஸமஸ்த ஜகத்தையும் அறியக்கூடும். காரணமே மற்றொரு அவஸ்தையை அடைந்தால் கார்யமாகிறதே தவிர, கார்யம் காரணத்தைவிட வேறான வஸ்து அல்ல, என்று கார்யகாரண ரூபமாயிருக்கும் மண் அதினவிகாரம் இது முதலியவற்றை திருஷ்டாந்தமாகக் காண்பித்து, பிரதிஜ்ஞையை ஸமர்த்தித்ததால், ப்ரஹ்மமானது ஜகத்துக்கு உபாதான காரணமும் ஆகிறது என்று நிச்சயிக்கப்படுகிறது.

மேலும் ஜகத்திற்கு நிமித்த காரணமும் உபாதான காரணமும் ஒன்று என்று சுருதிவாக்யங்களால் ஏற்படுகிறது. இந்த ஜகத்தை ஆளுகின்ற அதிஷ்டாதாவை அறிந்தால், அறியப்படாததும் அறியப்பட்டதாக ஆகும் என்றதினால், विकारजननीं गौर नाद्यन्तवती (விகாரத்தைச் செய்கிற ஆதியும் அந்தமும் இல்லாத ப்ரக்ருதி) என்று ப்ரக்ருதி சப்தத்தால் நாமரூபங்கள் விடுவிக்கப்படாத காரணவஸ்தையிலுள்ள ப்ரஹ்மமே சொல்லப்படுகிறது. ஏனெனில் ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறான வஸ்து ஒன்றும் இல்லை.

மேலும், सोऽकामयत बहुस्यां प्रजायेयेति, तदैक्षत बहुस्यां प्रजायेयेति (அந்த ப்ரஹ்மம் நான் அநேகமாய் ஆக வேண்டும்,

அதாவது ஸ்ருஷ்டிக்க வேண்டும் என்று ஸங்கல்பித்தது) என்று ப்ரஹ்மமானது தானே சேதனசேதன ரூபத்தால் பஹுவாய் விடுகிறேன் என்று ஸங்கல்பித்த ஸ்ருஷ்டியானது சொல்லப் பட்டிருக்கிறது.

தவிர **साक्षाच्चोभयाम्नानात्** என்றபடியே நிமித்த காரண மும் உபாதாந காரணமும ப்ரஹ்மம் என்று கண்டோக்தமாய் (நேராகவே) சுருதியில ஏற்படுகிறது. **किंस्विद्वनं क उ स वृक्ष आसीद्यतो द्यावापृथिवी निष्टतक्षुः । मनीषिणो मनसा पृच्छतेदुतयद्ध्य तिष्ठद् भुवनानि धारयन् । ब्रह्मवनं ब्रह्म स वृक्ष आसीद्यतो द्यावापृथिवी निष्टतक्षुः मनीषिणो मनसा वि ब्रवीमि व: ब्रह्माध्यतिष्ठद्भुवनानि धारयन् ।** என்று 'இந்த ஜகத்தாகிற மர ஸாமான் எந்த மரத்திலிருந்து செதுக்கப் பட்டது? அந்த மரம எந்தக்காட்டில் விளைந்தது?' என்றும், 'ஸ்ருஷ்டி கர்த்தாவான ப்ரஹ்மமானது எந்த உபாதான த்ரவி யத்தைக் கொண்டு இந்த ஜகத்தை ஸ்ருஷ்டித்தது? எந்த உப கரணங்களைக் கொண்டு ஸ்ருஷ்டித்தது? அந்த உபாதான திரவ்யத்திற்கு அதிகரண காரகம யாது?' என்கிற கேள்வி களுக்கு ப்ரஹ்மமானது, ப்ரஹ்மமாகிற வ்ருக்ஷத்திலிருந்து ஜகத்தாகிற மரஸாமானைச் செதுக்கி யிருக்கிறது. அந்த ப்ரஹ்மமாகிற மரமானது ப்ரஹ்மமாகிற காட்டில் விளைந்தது' என்று ப்ரஹ்மமே உபாதாந த்ரவ்யம், ப்ரஹ்மமே அதிகரண காரகம என்று சொல்லப்பட்டிருக்கிறது. **स भगवः कस्मिन् प्रतिष्ठित इति स्वे महिम्नि यदि वा न महिम्नि** (ப்ரஹ்மத்திற்கு ஆதாரம் எது? என்றால் தன்னுடைய மஹிமை தான் ஆதாரம) அதாவது, அதற்கு ஆதாரம யாதொன்றுமில்லை என்பதுபோல இந்த உபா தான திரவ்யத்திற்கு ஆதாரம ஒன்றுமில்லை, என்றிவைகளால ப்ரஹ்மம ஜகத்திற்கு உபாதான காரணமென்று சுருதிகள் முறை யிடுகின்றன.

மேலும் ஸ்ருஷ்டிக்க வேண்டுமென்று ஸங்கல்பித்த ப்ரஹ்ம மானது **तदात्मानं स्वयमकुरुत ।** (தன்னையே ஸ்ருஷ்டித்துக்கொண் டது.) ஸ்ருஷ்டிக்குக் காமாவாகவும கர்த்தாவாகவும (both subject and object) தானே இருந்ததென்பதால நிமித்தகாரண மும உபாதான காரணமும ப்ரஹ்மமே என்று ஏற்படுகிறது. அவ்யக்த நாமரூபமான ஆத்மா கர்த்தாவென்றும, வ்யக்த நாமரூபமான ஆத்மா கார்யமென்றும அர்த்தம.

சிதசித்வஸ்துக்களை சரீரமாயுடையதும் அவைகளுக்கு ஆத்மாவுமான பரப்ரஹ்மமானது ஸங்கோசம (குறுகியிருததல்) என்கிற காரணாவஸ்தை, விகாஸம (விரிவு) என்கிற கார்யாவஸ்தை, எனகிற இரண்டு அவஸ்தைகளையுடையது எனறு சொல்வதில யாதொரு விரோதமுமிலலை. ஏனெனில் ஸங்கோசம், விகாஸம என்பது ப்ரஹ்மததிறகு சரீரமாயிருக்கும சித அசித இவைகளுககே யலலாமல் ப்ரஹ்மததின ஸ்வரூபததிறகலல சரீரத்திறகுரிய தோஷங்கள் ஆதமாவில ஸமபநதிககமாட்டா. ஆதமாவிறகுரிய குணங்களும் சரீரததிறகு உண்டாகமாட்டா. எப்படியென்றால தேவன, மனிதன, மிருகம, விருக்ஷம முதலிய சரீரஙகளையுடைய ஜீவாதமாககளின சரீரதோஷங்களாகிற பால்யம, யௌவநம, கிழட்டுததனம முதலியவைகள ஆதமாவில ஸம்பநதிப்பதிலலை. ஆதமாவுககுரிய ஜ்ஞானம முதலிய குணஙகளும சரீரததில் ஸமபநதிபபதிலலை. ஆகையால சரீரம பரிணாமததை (மாறுதலை) யடைவது எனபது பரப்ரஹ்மத்திறகு தோஷமான ஸ்வபாவமல்ல பின்னை யென்னவென்றால தடையிலலாததும அளவறறதுமான ஈசுவர ஸ்வபாவததைக காண்பிககினறது.

காரணமாகிற ப்ரஹ்மததைககாட்டிலும ஜகத்தாகிற கார்யம விலக்ஷணமாய (வேறாக) இருப்பதால ப்ரஹ்மம உபாதான காரணமனறு எனறு சொனன யுகதியும ஸரியல்ல. விலக்ஷணமாயிருககும வஸ்துககள காரண கார்யங்களாயிருககப் பார்ககிறோம தேன கூட்டிலிருநது அதைக் காட்டிலும விலக்ஷணமான பாக்ஷிகம எனனும புழு முதலியவைகளும, கோமயததிலிருநது அதைவிட விலக்ஷணமான தேள் முதலியதும உண்டாகினறதலலவா? அதுபோல காரணமான ப்ரஹ்மமும தனனைககாட்டிலும விலக்ஷணமான ஜகததாகப் பரிணமிககினறதெனறு சொலவதில யாதொரு பாதகமுமில்லை.

மேலும நிமிததமும உபாதானமும ஒன்றாயிருபபதை நாம லோகததில காணாமலிருபபதால ப்ரஹ்மம உபாதான காரணமாக மாட்டாது எனறு சொலவதும ஸரியலல. இதறகு த்ருஷ்டாநதம எங்கு அகபபடும? ப்ரஹ்மததைபபோல் வேறு வஸ்து ஏதாவது உண்டா? அவ்விதமிருந்தா லலலவோ த்ருஷ்டாந்ததைக காண்பிக்கலாம. எல்லா வஸ்துககளைக் காட்டிலும விலக்ஷணமாயும, ஸர்வசகதியுள்ளதும, ஸர்வஜ்ஞமுமான

பரப்ரஹ்மத்திற்கு உபயவித காரணமாயிருக்கும் தன்மை பொருந்தும. அசேதனமான மண் முதலியவைகளுக்கு ஜ்ஞானமில்லாததால் அதிஷ்டாதாவாயிருக்கும தன்மையில்லாத தாலும்; அவைகளுக்கு அதிஷ்டாதாவான குயவன் முதலியவர் களுக்கு ஈசுவரனுக்கிருக்குமாப்போல் விசித்ரமான பரிணாம சக்தி (மாறும சக்தி) இல்லாததாலும, ஸத்ய ஸங்கல்பத்வம இல்லாததாலும நமக்கு நிருஷ்டாந்தம அகப்படுவதில்லை ஆனால் நம மனதிற்கு எட்டாத ஜ்ஞான பல சக்திகளையுடைய பரப்ரஹ் மமானது அசிந்த்ய விவிதவிசித்ரரசனையை யுடைய ப்ரஹ்மாமுதல ஸ்தம்ப பர்யந்தமான ஜகத்தாகப பரிணமிப்பதால் ப்ரஹ்மமே ஜகத்திற்கு உபாதான காரணமென்று சொல்ல யாதொரு ஆக்ஷேபணையுமில்லை.

## ‘அத்வைதம், தத்வம்’ என்பதின் திரண்டபொருள்.

இவ்விதம ஸர்வதத்துக்கும ஈசுவரனாய, ஸர்வசேஷியாய, ஸ்வரூபத்தாலும் காலத்தாலும வஸ்துவாலும அளவிடக்கூடாத வனாய, ஸர்வகாம ஸமாராதபனாய், ஸர்வபல ப்ரதாதாவாய, ஸர்வாதாரனாய, ஸர்வகாரயத்தையும உண்டுபண்ணுகிறவனாய், ஸர்வசப்த வாச்யனாய், ஸர்வ வயாபக சேதனனாய், ஸூக்ஷ்ம சிதசித் விசிஷ்ட வேஷத்தாலே ஜகதுபாதான காரணமாய், ஸங்கல்ப விசிஷ்ட வேஷத்தாலே நிமித்த காரணமாய், காலாதி களுக்கு அந்தர்யாமி வேஷத்தாலே ஸஹகாரி காரணமாய், ஹேய ப்ரத்யநீக அநந்த கல்யாண குணகண விசிஷ்டனாய், ஸர்வாவஸ்தையிலும லக்ஷ்மீ விசிஷ்டனாய, பரப்ரஹ்ம மென்றும் ஸர்வேச்வர னென்றும, புருஷோத்தம னென்றும, ச்ருதிகளில் முறையிடப்பட்டவனுமான ஸ்ரீமந்நாராயணன் தான் அத்வைத மான தத்வம். இவன ஜகதநின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங் களைச் செய்கிறான. அண்டத்தை ஸ்ருஷ்டித்த பின் சதுர்முகன், தக்ஷப்ரஜாபதி, காலம், இவர்களுள் அந்தர்யாமியா யிருந்து கொண்டு மற்ற ஸ்ருஷ்டியைச் செய்கிறான். விஷ்ணு அவதார ரூபமாயும லோகபாலர் மநு முதலியவர்கள், ராஜா, மாதா, பிதா, காலம முதலியவர்களுள அந்தர்யாமியாயு மிருந்து கொண்டு ஜகத்தை ரக்ஷிக்கிறான். ருத்ரன், காலம் இவர்களுள் அந்தர்யாமியாயிருந்து கொண்டு ஜகத்தை ஸம்ஹாரம் செய் கிறான்.

## பகவத் ரூபத்தின் ஐந்து ப்ரகாரங்கள்.

இந்த ப்ரகாரங்களையுடைய ஈச்வரன் பர, வ்யூஹ, விபவ, அந்தர்யாமி, அர்ச்சாவதாரம் என்கிற ஐந்து ப்ரகாரமாயிருக்கிறான். பரரூபமாவது—த்ரிபாத்விபூதி யென்கிற ஸ்ரீவைகுண்ட லோகத்தில், திருமாமணி மண்டபத்தில் ஸ்ரீபூமி நீளா ஸமேதனாய், திவ்யாயுதபூஷண ஸஹிதனாய் सदा पश्यन्ति सूरयः என்ற படியே அநந்த கருட விச்வக்ஸேநாதிகளான நித்யஸூரிகளால் அநவரதம் ஸாமாதி கானங்களால் ஸ்துதிக்கப்பட்டும் மற்றுமுள்ள முக்தர்களா லனுபவிக்கப்பட்டு முள்ள பரப்ரஹ்ம வாஸுதேவாதி சப்தங்களால் பேசப்படும் அப்ராக்ருத திவ்ய மங்கள விக்ரஹம். வ்யூஹமாவது—ஜகத் ஸ்ருஷ்டி முதலியவைகளுக்காகவும் உபாஸனத்திற்காகவும் வாஸுதேவன், ஸங்கர்ஷணன், ப்ரத்யும்னன், அநிருத்தன், என்கிற நான்கு விதமாயிருப்பது. விபவமாவது—அநந்த ஜாதிகளிலுமுண்டான ரூபங்களோடு மத்ஸ்ய கூர்மாதிகளாக அவதரிக்கை இந்த அவதாரங்களுக்கு பகவானுடைய இச்சைதான் காரணம்; துஷ்டநிக்ரஹ சிஷ்ட பரிபாலனாதிகள் தான் ப்ரயோஜனம். அந்தர்யாமியாவது—ஸ்வர்க்க நரகாதி அநுபவத்தையிலும் கூட ஜீவாத்மாவுக்கு सर्वस्य शरणं सुहृत् என்றபடியே ஸுஹ்ருத்தாய் யோகிகளால் த்யானிக்கப்படும்படியாய ஹ்ருதய ப்ரதேசத்திலுள்ள ரூபம். ஜீவனோடுகூடக் கலந்திருந்தாலும் அவனுடைய தோஷங்களால் ஸம்பந்தப்படாதவன். அர்ச்சா ரூபமாவது—தேசகாலத்தாலுண்டாகும் தூரமில்லாமல், தன்னை ஆச்ரயித்தவர்களுக்கு இஷ்டமான த்ரவ்யத்தைச் சரீரமாக ஸ்வீகரித்து அதிலும் அதே அளவுள்ள அப்ராக்ருத சரீரத்தை யுடையவனாய், அர்ச்சகர்களுக்குப் பராதீனமாய் ஸ்நாந போஜநாஸந சயநாதிகளை யடைந்து யாவற்றையும் பொறுத்துக்கொண்டு பரிபூர்ணனாய க்ருஹம், க்ராமம், சிறந்த மலைகள் முதலியவைகளில் இருக்கும் மூர்த்தி விசேஷம்.

இவ்விதம் ப்ருஹி வ்ருத்தௌ என்கிற தாதுவிலிருந்து ப்ருஹதி ப்ருஹ்மயதீதி ப்ரஹ்ம, ப்ரஹ்மணத்தவாத்ப்ரஹ்ம என்று ஸ்வரூபம், குணம் முதலியவைகளில் தானும் பெரியதாய், स चानन्त्याय कल्पते என்கிறபடியே ஸகல ஸங்கோசத்தையும் நிவ்ருத்திசெய்து நிரவதிகமான ஜ்ஞானாநந்த விகாஸ ரூபமான

மோக்ஷம் என்கிற ஆநந்த்யத்தை (infinitude in knowledge and bliss) தன்னை வசப்படுத்திய ஜீவர்களுக்குக் கொடுக்கக்கூடிய வல்லமையும் ஸ்வபாவமு முள்ளது ப்ரஹ்ம. துக்ககரமாயும் அநாதியுமான இந்த ஸம்ஸாரத்தினின்றும் மோக்ஷம் அடைவதற்கு உபாயம் என்னவென்றால் அவனை வசப்படுத்திக் கொள்வது தான். அவனை ஜ்ஞானத்தால் தான வசப்படுத்த வேண்டும். இந்த ஜ்ஞானம பக்தி ரூபமாகவாவது ப்ரபத்தி ரூபமாகவாவது இருக்கும். பக்தி ப்ரபத்திகளை வ்யாஜமாகக்கொண்டு ஈசுவரன் மோக்ஷத்தைக் கொடுக்கிறான். பக்தியாவது—கர்மயோக ஜ்ஞான யோகங்களினால் ஸம்ஸ்காரத்தை யடைந்த அந்த கரணத்தால் ஸாத்யமாயும், யம நியமம் முதலிய அஷ்டாங்க யோகத்தோடு கூடியதாயும், முதல் மூன்று வர்ணத்தாரை அதிகாரிகளாகக் கொண்டதும், அந்தந்த வர்ணம், ஆச்ரமம் இவைகளுக்குரிய தர்மங்களை அங்கமாயுடையதும், வெகு ப்ரயாஸத்தால ஸாத்யமானதும், தைலதாரைபோல் இடைவிடாத ஸ்ம்ருதியின தொடர்ச்சியாயும், ப்ரதி தினம அப்பியாஸத்தால சிறப்பை யடைகிறதும், சரீர மிருக்குமளவும் அனுஷ்டிக்கவேண்டியதுமா யிருக்கும். த்யானம என்று சொல்லப்பட்ட இந்த பக்தி யானது வித்யா பேதத்தினால் அநேக விதமாயிருக்கும். அந்த வித்யைகள் ச்ருதியில ஜ்ஞான காண்டத்தில ப்ரஹ்மவித்யைகள் என்று சொல்லப்பட்ட அக்ஷிவித்யா 'அந்தராதித்யவித்யா' பூமவித்யா, ஸத்வித்யா, உபகோஸலவித்யா, சாண்டில்யவித்யா புருஷவித்யா ந்யாஸவித்யா முதலான 32 வித்யைகள். ந்யாஸ வித்யையைத்தான் ப்ரபத்தியென்று சொல்லுவது ப்ரபத்தி யென்பது—மஹாவிச்வாஸாதிகளால் ஸம்ஸ்காரத்தை யடைந்த அந்த கரண ஸாத்யமாயும் ஆநுகூல்ய ஸங்கல்பாதிகளை மாத்ரம் பரிகரங்களா யுடையதாயும், இந்தச் சரீரத்தின் முடிவில் முக்தியைக் கொடுக்கக் கூடியதாயும், ப்ரார்த்தனையோடு கூடிய ஸமர்ப்பண ரூபமாயுமிருக்கும். இவைகளின் ஸ்வரூபாதிகளெல்லாம் ஸத்ஸம்ப்ரதாய பூர்வகமாக அறியப்பட வேண்டிய தாகையால் இங்கு விஸ்தரிக்கப்படவில்லை.

நம் ஸித்தாந்தத்தில் பக்தி ப்ரபத்திகளே மோக்ஷோபாயங்களென்று சொல்லப்பட்டது. வேதபாஹ்யர்களுக்குள் சிலர்கள் தேஹத்தைத்தவிட்டிலும் வேறான ஆத்மா என்பதை அங்கீகரிக்காமலிருப்பதால் அவர்களுக்கும், ஜ்ஞானம க்ஷணிகம என்று

சொல்லுகிறவர்கள் பக்ஷத்தில் அதுவே ஆத்மதத்வ மாதலால் அவர்களுக்கும், பாஷாணத்திற்கு ஸமமா யிருப்பது தான் மோக்ஷம் என்று சொல்லும் வைசேஷிகர்கள் முதலியவர் களுக்கும், ஸாங்க்யாதிகள் ஈச்வரனை அங்கீகரிக்காததால் மோக்ஷம் ப்ரக்ருதிக்கோ அல்லது புருஷனுக்கோ என்பது ஸந்தேஹ மாதலால் அவர்களுக்கும், மாயாவாதிகள் மதத்தில வ்யவஹாரிக வாக்யமான்து பாரமார்த்திகமான அபேத ஜ்ஞானத்தையுண்டுபண்ணுகையால் அவர்களுக்கும் மோக்ஷத் தில ப்ரவ்ருத்தியே உண்டாகாது மோக்ஷத்தில ப்ரவ்ருத்தியை யுண்டாக்குகிற மதம் நம்முடைய மதம் ஒன்றே

இவ்விதமிருக்கும் மோக்ஷோபாயத்தை ஸ்வீகரித்து அனுஷ்டித்தவன் பிறகு நித்ய நைமித்திக பகவதாஜ்ஞானுஜ்ஞா காமங்களை பலத்திலாசையில்லாமல் ஸ்வயம் ப்ரயோஜநமாயச் செய்துகொண்டு, பகவானுடைய அபசாரமும், பாகவதா களுடைய அபசாரமும் நேரிடாதபடி நடந்து கொண்டு சரீர வியோக காலத்தில தான புண்யங்களை ஸுஹ்ருத்துக் களிடத்திலும், பாபங்களைத்தன் சத்ருக்களிடத்திலும் வைத்து விட்டுத் தன் ஹ்ருதயத்திலுள்ள பரமாத்மாவினிடத்தில இளைப் பாறி, முக்திக்கு த்வாரமாகிற ஸுஷும்நா நாடிவழியாய ப்ரஹ்ம ரந்த்ரத்தினின்றும் வெளிக்கிளம்பி, ஹார்த்தனான புருஷனோடு கூட அர்ச்சிராதி மார்க்கமாயச் சென்று, ப்ரக்ருதிக்கும் வைகுண்டத்திற்கும் எல்லையாகிற விரஜா நதியைத்தாண்டி ஸூக்ஷ்மசரீரத்தைவிட்டு, அப்ராக்ருத திவ்ய சரீரத்தையடைந்து சதுர்புஜனாய், பரஹ்மாலங்காரங்களால் அலங்கரிக்கப்பட்டு, வைகுண்டநகரத்தில ப்ரவேசித்து அங்கே திருமாமணி மண்டபத் தில நாகபர்யங்கத்தில வீற்றிருக்கும பகவானைத் தரிசித்து, அவரை அநுபவித்து, ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தை யிலும உசிதங்களான கைங்கர்யங்களைச செய்வதில் ப்ரீதியுள்ள வனாய், குணாஷ்டகங்களை யடைந்து, ஜகத்வ்யாபாராதிகளைத்தவிர ஜ்ஞானாநந்த போகாதிகளில் பகவானுக்கும் தனக்குமயாதொரு தாரதம்யமுமில்லாமல் ஆநந்தாநுபவம செய்துகொண்டு மறு படியும ஸம்ஸாரத்திற்குத் திரும்பிவாராமல், பகவானைக்காட்டி லும என்றைக்கும் வேறாகவே இருந்துகொண்டு நித்யர்களுடன் நித்ய ஸுகத்தை அநுபவித்துக் கொண்டிருப்பான்.

இதைத்தான் மோக்ஷமென்றும், பரமபுருஷார்த்தமென்றும், ஸாயுஜ்யம் என்றும் சொல்வது. ஸாயுஜ்யமாவது, ஸயுக்கினுடைய தன்மை ஸயுக்காவது ஒரு போக்கியத்திலே போக்தாவாயக்கொண்டு கூட அன்வயிக்குமவன் இங்கு ஸபரகார பாஹ்மமாகிற போக்யத்திலே பாஹ்மமும் முக்தனும் கூட போக்தாக்களாய் அன்வயிக்கையாலே முக்தனை ஸயுக் என்கிறது ऱामरस्यं हि सायुज्यं वदन्ति ब्रह्मवादिन (ஸாயுஜ்யமென்றால ஸமானரஸத்தை அனுபவித்தல என்று ப்ரஹ்மவாதிகள் சொல்லுகிறார்கள்) என்று சாகடாயனர் சொல்லுகிறார். ஸாயுஜ்ய சப்தத்திறகு ஸ்ரீசங்கரர் முதலானவர்கள் சொல்லுகிறபபோல் ஐக்கியம அர்த்தம் சொல்லகூடாது அபபடி ஐக்கியம் அர்த்தம சொன்னால் வயாகரண சாஸ்திரத்திறகும், சப்த சக்திக்கும பேத சருதிகளுக்கும விரோதம வரும முக்தன பரமஸாம்யத்தை யடைகிறான் என்று சருதி சொலலுகிறதே யல்லாமல் பாஹ்மத்தோடு ஐக்யமாகிறான, 'ஒன்றாயப்போய விடுகிறான' என்று சொல்லவில்லை பகவானும கீதையில் मम साधर्म्यमागताः (என்னோடு ஒப்பை யடைந்தாாகள - எனககு ஸமான தாமத்தை யடைந்தாாகள்) என்று சொன்னாரே தவிர என்னுடன் ஐக்யம அடைந்தார்கள் என்று சொல்லவில்லை. ஆகையால் ஸாயுஜ்ய சப்தத்திறகு ஐக்யம அர்த்தமல்ல.

முடிவுரை:

ஸமஸ்த வேதாந்தங்களிலும ப்ரதிபாதிக்கப்பட்ட தத்வஹித புருஷார்த்தங்கள இவ்விதம நிரூபிக்கப்பட்டன. சிதசித விசிஷ்டனை ஸ்ரீமந் நாராயணன் தான் அத்வைதான தத்வம; பக்திப்ரபத்திகள் ஹிதங்கள்; அதாவது அவனையடைய உபாயங்கள், அப்ராக்ருத லோகத்தில் அவனுக்கு நித்யகைங்கர்யம செய்து கொண்டு அவனை அனுபவிபபதுதான் புருஷார்த்தம. இஙகுசொன்ன அர்த்தங்களெல்லாம இப்படி ஒரு ச்லோகத்தால் ஸங்க்ரஹிக்கப்படுகின்றன —

विष्णु सर्वोत्तम· श्रीपतिरखिलतनु नित्यमुक्तैकलभ्य·
भक्तिन्यासैकलभ्यो निखिलजगदुपादानहेतुर्निमित्तम् ।
भेदस्सत्योपवर्ग निरवधिकसुखं किंकरा शंकराद्या.
इत्थं त्रय्यन्त सिद्धं यतिपति कथितं ताड्यतां जैत्रभेरी ॥ என்று

अंगी कुर्वन्त्वकलुषधियो नित्यम यात्म विद्या
आद्यो धर्म. स्पृशतु वसुधामाशिषः पारवर्ती ।
देव· श्रीमान्निरवधिदयासिन्धुरस्मिन् प्रबन्धे
वक्ता श्रोता वचनविषयः प्रीयतां वासुदेव. ॥

இஃது சென்ற துந்துபி ௵ மார்கழி ௴ (1922, டிஸம்பர்) சென்னையில் நடைபெற்ற ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்த ஸபையின் பன்னிரண்டாவது வார்ஷிக மஹோத்ஸவத்தில் செய்யப்பட்ட உபந்யாஸம்.

ஸ்ரீ:

# குருபக்தி.

---

உலகத்தில் ஒவ்வொருவரும் தம்தமக்கு ஸுகமே வேண்டும், துக்கம் வேண்டாம் என்று நினைத்து ஸுகப்ராப்திக்கும் துக்கநிவ்ருத்திக்கும் ஸாதநமென்று தாங்கள் கருதிய கார்யங்களில் ப்ரவர்த்திக்கிறார்கள். ஆனால் அஜ்ஞானத்தினால் மிகவும் அல்பமானதும் அழிவுள்ளதுமான ஸுகத்தையே மேலான ஸுகமென்று ப்ரமித்து அதையடையும் உபாயத்தையே தேடுகிறார்கள். வாஸ்தவத்தில் மேலான ஸுகமே யாவராலும் விரும்பத்தக்கது. ஸுகம் என்றால் என்ன? அதற்கு என்ன லக்ஷணம்? (Definition) என்றால் இதற்கு சாஸ்த்ரகாரர்கள் லக்ஷணம் கூறியிருக்கிறார்கள். "इतरेच्छाऽनधीनेच्छाविषयत्वं" ஸுகத்துக்கு லக்ஷணம் என்று சொல்லுகிறார்கள். அதாவது மற்றொரு இச்சைக்கு அதீநமல்லாத இச்சைக்கு விஷயமாயிருப்பது ஸுகம் என்று. இதை விவரிப்போம். ஒருவன் நல்ல பன்னிரண்டு மணி வெய்யிலில் வேகமாய் ஓடுகிறான்; அவனுக்கு வேகமாய் ஓடுவதில் இச்சையிருக்கிறது. ஏனென்றால் அவனுக்கு 12 மணிக்குள் ஆபீஸுக்குப் போய்ச்சேரவேண்டுமென்கிற இச்சையிருப்பதால், அந்த இச்சைக்கு அதீநமாக, வெய்யிலில் ஓடுவது ஸ்வத: ச்ரமமாயிருந்தாலும் ஓடுவதில் இச்சை உண்டாகிறது. பன்னிரண்டு மணிக்குள் ஆபீஸுக்குப் போய்ச்சேரவேண்டுமென்கிற இச்சையானது, அதிகாரியைத் திருப்தி செய்யவேண்டுமென்கிற இச்சைக்கு அதீநமாயிருக்கிறது. அதிகாரியைத் த்ருப்திசெய்வது ச்ரமமாயிருந்தாலும், அவரை த்ருப்தி செய்யவேண்டுமென்கிற இச்சையானது, தன் உத்தியோகத்தைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டுமென்கிற இச்சைக்கு அதீநமாயிருக்கிறது. உத்தியோகத

தைக்காப்பாற்றிக்கொள்ளவேண்டும் என்கிற இச்சையானது ஒவ்வொரு மாஸமும் குறைவற சம்பளத்தையும் க்ரமேண பரமோக்ஷத்தையும் அடையவேண்டுமென்கிற இச்சைக்கு அதீனமாக உண்டாகிறது. சம்பளத்தைப் பெறவேண்டுமென்கிற இச்சையானது அரிசி முதலிய உணவுபொருள்களையடையவேண்டுமென்கிற இச்சையைச் சார்ந்திருக்கிறது. உணவுபொருள்களையடையவேண்டுமென்கிற இச்சையானது, சமையல்செய்து சாப்பிடவேண்டுமென்கிற இச்சைக்கு அதீனமாக உண்டாகிறது. சாப்பிடவேண்டுமென்கிற இச்சையானது பசியாகிற அநிஷ்டத்தைப் போக்கி சுகப்படவேண்டுமென்கிற இச்சைக்கு அதீனமாக உண்டாகிறது. சுகப்படவேண்டுமென்கிற இச்சையோவென்றால் அதற்கு மேற்பட்ட ஒரு இச்சைக்கு அதீனமன்று. அதுவே பரம உத்தேசயம். (Happiness is the final goal, not a means to any end). த்ரவ்யம் முதலியவைபோலன்றிக்கே மற்றொருப்ரயோஜனத்துக்கு ஸாதனமல்லாமல் ஸ்வயம்ப்ரயோஜனமாய் (end in itself) இருப்பதால் ஸுகம் என்பது பரமஉத்தேசயம். இந்த ஸுகமானது எல்லோராலும் விரும்பப்படுவதால் இச்சைக்கு விஷயமாயும் மற்றொரு இச்சைக்கு அதீனமல்லாததால் इतरेच्छानधीनेच्छाविषयமாயுமிருக்கிறது. இந்த ஸுகம் அநுகூலமாயே இருக்கும். அநுகூலமாகவே அறியப்படும். सदैव हि सुखं वस्तु स्वभावं सुखानुकूलं भवति। என்று பூமாதிகரணத்தில் ஸ்ரீபாஷ்யகாரர் அநுக்ரஹித்திருக்கிறார். இந்த ஸுகம் புருஷனால் ப்ரார்த்திக்கப்படுவதால் புருஷார்த்தமென்று சொல்லப்படுகிறது. இப்படிப்பட்ட புருஷார்த்தம் ஐச்வர்யமென்றும், கைவல்யமென்றும், பகவல்லாபமென்றும் மூன்றுவகைப்பட்டிருக்கும். அவரவர்களின் ஸுக்ருதவிசேஷமடியாக ருசிபேதத்தால் அந்தந்த தாழ்ந்த புருஷார்த்தத்தில் இச்சையுடையவர்கள் பலர் இருக்கின்றனர். ஆனால் "स महात्मा सुदुर्लभः" "ज्ञानी त्वात्मैव मे मतम्" "அந்த மஹாத்மா கிடைப்பது மிகவும் அரிது. அந்த ஞானி என்னுடைய உயிர்நிலை" என்று பகவானாலே கொண்டாடப்பட்டவனும், பகவதநுபவமாகிற ஸர்வோத்க்ருஷ்டமான மேலான

ஸ்லோகத்தில் விருப்பமுள்ளவனுமான சேதனன் மிகவும் துர்லபம். இந்த மேலான ஸ்லோகத்தையே விரும்பி அதற்குத தக்க ஸாத னத்தையனுஷ்டித்து அந்த ஸ்லோகத்தை எல்லோரும் அடைய வேண்டுமென்பது பகவானுடையவும், ஸர்வவேதங்களுடையவும், புராணங்களுடையவும், ஆழ்வார்களுடையவும், ஆசார்யர்களுடை யவும் கருத்தென்று விளங்குகிறது.

(1) பகவான் கீதையில் "अन्तवत्तु फलं तेषां तद्भवत्यल्पमेधसां" (கீதை7–13) यान्ति मद्याजिनोऽपि मां मद्भक्ता यान्ति मामपि (9–25) இதர தேவர்களையுபாஸிக்கிறவர்களும், அதனுல் புத்திக் குறைவுள்ளவர்களுமான ஜனங்களுக்குக் கிடைக்கும் பலம் மிக வும் அல்பமும் அழிவுள்ளதாயுமிருக்கும். அந்த அல்பமான பலத்தையும் நானே தான் கொடுக்கிறேன். ஆனால் என்னையே விரும்பி என்னை உபாஸிக்கிறவர்கள் அழிவற்றதும் அளவற்றது மான்பலமாகிற என்னையடைகிறார்கள். "मामेवैष्यसि सत्यं ते प्रतिजाने" (18-65) "உண்மையில் என்னையடைவாய் இது ஸத்யம், என்று பிரதிக்ஞை செய்கிறேன்" என்றும் இது முதலான அநேக இடங்களில் பகவத்ப்ராப்தியானது மேலான ஸ்லோகமென்றும் அதை ஒரு விவேகியானவன் விரும்பவேண்டுமென்றும் முறை யிடுகிறார்.

மேலும் "मामुपेत्य पुनर्जन्म दुःखालयमशाश्वतम् । नाप्नुवन्ति महात्मानः संसिद्धिं परमां गताः ॥ आब्रह्मभुवनाल्लोकाः पुनरावर्तिनोऽर्जुन । मामुपेत्य तु कौन्तेय पुनर्जन्म न विद्यते ॥" 8-15,16 என்னையடைந்தபிறகு மறுபடியும் எல்லா துக்கங்களுக்கும் இருப்பிடமான அழிவுள்ள பிறப்பை யடைகிறதில்லை. ஏனெனில இந்த மஹாத்மாக்களையுடையவர்கள் என்னை உள்ளபடியறிந்து, என்பேரில் மிகவும் அதிகமான அன்பி னால என்னைவிட்டு க்ஷணகாலமும் தரிக்கமுடியாமல் என்னையே மன தில த்யானம செயதுகொண்டு என்னை உபாஸிதது மேலான ஸித் தியாகிற என்னையடைகிறாகள். ப்ரஹ்மலோகபர்யந்தமான எல்லா உலகங்களும் அழிவுள்ளவை. ஆனதால அந்த லோகங்களிலுள்ள போக ஐஶ்வர்யங்களும் அவைகளோடு அழிகின்றன. என்னை யடைந்தவர்களுக்கோவென்றால, அழிவுக்குக்காரணமில்லாததால்

மறுபிறப்பில்லை என்பதால் இந்த மேலான ஸுகத்துக்கு அழிவு இல்லையென்றும் கூறுகிறார்.

(2) தைத்திரீய யஜுர் ப்ராஹ்மணத்தில் அசசிதரத்தில் '**यस्यास्मि नतमंतरेमि योहमस्मि ससन् यजे**' 'யாதொரு பகவானுக்கு அடியனாக இருக்கிறேனோ அந்தப்பகவானைவிட்டு நீங்கமாட்டேன், நான் இயற்கையான அடிமையினால் யாவனாக இருக்கிறேனோ அவனாகவே இருந்துகொண்டு அந்த பகவானை ஞானமாகிற யாகங்களால் ஆராதிக்கிறேன்' என்றும், சாந்தோக்யத்தில் '**ब्रह्मलोक-मभिसंपद्यते न च पुनरावर्तते न च पुनरावर्तते**' 'மேலான ஸுகமாகிற ப்ரஹ்மத்தையடைந்து பிறகு திரும்புவதில்லை' என்றும் வேதங்களில் சொல்லுவதால் பகவத்ப்ராப்தியே பரமபுருஷார்த்தமென்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது.

(3) புராணரத்னமாகிய ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் கடைசியில் ஸ்ரீ பராசரபகவானும '**स दिशतुभगवानशेषपुंसां हरिरपजन्मजरादिकां समृद्धिं**' ஸர்வேச்வரனை பகவான் எல்லா ஆத்மாக்களுக்கும் ஜன்மமரணமாகிற அநிஷ்டத்தைப்போக்கி மேலான ஸுகமாகிற மோக்ஷஸுகத்தைக் கொடுக்கட்டும் என்று பரார்த்திக்கிறார்.

(4) ஆழ்வார்களில் தலைவரான நம்மாழ்வாரும பகவானுடைய ஜகத் ஸ்ருஷ்டியின் கருத்தை விளக்கிக் காட்டுகிறார். "நின்று நின்று பல நாளுய்க்கும் இவ்வுடல் நீங்கிப்போய் சென்று சென்றாகிலுங்கண்டு சன்மம் கழிப்பானெண்ணி ஒன்றியொன்றி யுலகம் படைத்தான்" (3—9—10) என்று அநேககாலம் இருந்து சேதனனைத் தன்வசத்திலேயாக்கித் துன்பங்களுக்கு ஆளாக்குமதான இந்த சரீரத்தைவிட்டொழிந்துபோய, இப்படியே பலபல ஜன்மங்கள் மரணங்கள் நடந்தபின்பாகிலும் ஏதேனும் ஒரு காலத்தில் தன்னைக் கண்டு பிறவியைக்கழிக்கக்கூடுமென்று எண்ணி ஒரு காலத்திலும் சோம்பிக்கைவிடாமல், மேலமேலும் ஊக்கம் கொண்டு, எம் பெருமான உலகங்களைப் படைத்து வருகின்றான. உலகில் க்ருஷி செய்பவன், தான் செய்த க்ருஷி பழுதுபட்டாலும் இன்னமொரு

தடவை செய்து வைப்போம் என்று விடாமுயற்சியுடன் மீண்டும் மீண்டும் ஆசையாலே க்ருஷியையே செய்து பார்ப்பான். அது போல எம்பெருமானும் "பத்தி யுழவன்" என்று திருமழிசை யாழ்வார் அருளிச்செய்தபடி பத்தியுழவன் ஆனதால் பக்தி க்ருஷி செய்வதற்காக, எத்தனை தடவைகளில் முடடுப்பட்டாலும இன்னொரு தடவையிலாவது பலிககமாட்டாதோவென்று கொண்டு திரும்பவும் பரபஞ்ச ஸ்ருஷ்டியைச் செய்து வருகிறான் என்று அருளிச்செய்தார். இதையடியொற்றியே ஸ்ரீ தேசிகனும தயா ஶதகததில் "शरणागतसस्यमालिनीयं वृषशैलेशकृषीवलं धिनोति" பக்தியால தன்னைச சரணமடைந்த ஆத்மஸமூகமாகிற பயிர்க்கூட்டம நிறம்பிய பூமியானது "கடல் வண்ணன் பூதங்கள் மண்மேல் மலியப் புகுந்ததாய்" திருவேங்கடமுடையானாகிற வேளாண்மைக் காரனை (cultivator) ஸந்தோஷப்படுத்துகிறதென்றருளிச்செய்தார். மேலும் "பொருளென்று இவ்வுலகம் படைத்தவன்" (2-10-11) என்றார். ஆழ்வார் எம்பெருமான் ஜகதஸ்ருஷ்டியைப பண்ணுவதாவது இறகொடிநத பறவைபோல சரீர இநதிரியஙகளை இழந்திருககும ஆதமாககளுககு அவற்றைககொடுககை. அப்படி எத்தனை தடவை ஸ்ருஷ்டிததாலும் என்றேனும ஒரு நாள பயன் படுமெனறு அதாவது இவவுலகம சீர் அடைந்து அனபு தன்பால வைதது பக்திசெய்து ஸுகமடையககூடுமெனறு கருதி மேன மேலும ஸ்ருஷ்டிகளைச செயகிறவன, எனறும, "வாழ்த்துவாா பலராக நின்னுள்ளே நான்முகனை மூழ்ததநீா உலகெலலாம் படையென்று முதல் படைத்தாய்" (3-1-7) தனனைத துதிப்பவர்கள பலா உணடாவதற்காக, காரணஜலமான ஏகாாணவத்துககுளளே உலகஙகளை ஸருஷடிபபாயாக எனறு சொல்லி உனனுடைய ஸஙகலபததிலே சதுாமுகபரஹமாவை முதலில ஸருஷடிததவனே எனறும், தாம்பாலாப்புண்டாலும் அத்தாம்புதான் இளக பாம்பாலாப்புண்டு பாடற்றலும்— சோம்பாது இப்பல்லுருவையெல்லாம் படாவித்தவித்தா (பெரியதிருவந-18) அனுகூலையான யசோதையினால தாம்புககயிறுகொணடு கட்டி அடிககப்

பெற்றாலும், அத்தாம்பினால் கட்டியதாலுண்டான காய்ப்பு அல்ப்பம் என்னும்படி பிரதிகூலனான காளியன் எனகிற பாம்பினால கட்டப்பட்டும், இப்படி அநுகூலரோடும் பிரதிகூலரோடும் வாசியற கஷ்டங்களையடைந்தாலும் சிறிதும் திருவுள்ளம் வருந்தாமல் ஜகத்ஸ்ருஷ்டியில் சோம்பல்படாமல், என்றைக்காவது ஒருநாள் இவ்வுலகம் சீர்படடு பக்திசெய்து தன்னையடைந்து ஸுகத்தைப் பெறக்கூடுமென்று திருவுள்ளம்பற்றி, ப்ரஜைகளைப்படைக்கிறான் எம்பெருமான் என்றும் அருளிச்செயதார்.

(5) ஸ்ரீ பராசரபட்டரும் ஸ்ரீரங்கவிமானத்துக்கும் வேதத்துக்கும் ஸாம்யம் அருளிச்செய்யும் ஶ்லோகததில் —

अनाद्याम्नातत्वात् पुरुषरचनादोषरहितं
जने तांस्तान्कामान् विदधदपि सायुज्यहृदयम् ।
असन्देहाध्यासं भगवदुपलंभस्थलममी
प्रतीमः श्रीरङ्गं श्रुतिशतसमानधिशरणम् ॥

ஸ்வயம் வ்யகதமாக ஓதப்படடிருப்பதால், மனிதர்கள் நிர்மாணம் செயதால் ஸமபவிககககூடிய தோஷமொனறுமிலலாதது ம, ஜனங்களிடததில பலவகைபபடட ஆசைகளை உணடு பண்ணுகினறதாயிருந்தாலும் — பலவகைப்படட புருஷார்த்தங்களைக் கொடுப்பதாயிருந்தாலும், மோக்ஷத்திலேயே கருத்தை யுடையதும், ஸம்ஶயமும் விபர்யயமுமறறதான எம்பெருமான் விளங்குமிடமாயிருப்பதும, (உள்ன் சுடர்மிகு சுருதியுள்) எனறபடி ஆனதுபறறியே அநேகவேதஙகளோடொதத அதிசயததை யுடையதுமான ரங்கவிமானததை இவவடியோஙகள புகலிடமாக எணணுகிறோம் (விஶ்வஸிககிறோம)— எனறு சொனனதால ஸகலவேதங்களுடைய உளகருததாவது எலலோ நம மோக்ஷஸுகததை விருமபியடையவேணடியதெனறு ஆசார்யர்களும கூறுகினறனர்.

கோடிக்கணககான ஜீவாதமாககள இநத ஸமஸாரததில படும துககத்தைககணடு விசாலமான மனதோடு எலலோருககும துககம் நீஙகவேணடுமென்று முறையிடடுக கதறின மஹாபுருஷா

களில முககியமானவர்கள் நாலவர். (1) ரந்திதேவமஹாராஜர் (2) புததேதவர் (3) நமமாழ்வார் (4) உடையவர் ஆகிய இந்நால்வரும்.

**न कामयेऽहं गतिमीश्वरात् परामष्टर्द्धियुक्तामपुनर्भवं वा**
**आर्तिं प्रपद्येऽखिलदेहभाजामन्तःस्थितो येन भवन्त्यदुःखाः ॥**

(ஸ்ரீபாகவதம் 9—21—12)

அணிமா முதலான ஐஶ்வர்யததையுடைய சதுர்முகபரஹமாதிகளி னுடைய ப்ராப்தியை நான விருமபவில்லை. திரும்புதலில்லாத மோக்ஷஸுகததையும் நான விரும்பவில்லை. ஆனால் எல்லா ஜீவாதமாககளுடைய துககங்கள யாவற்றையும சேர்த்து நான அடைய விருமபுகிறேன். ஏனென்றால அவர்கள துககங்கள் அனைத்தையும் நான் அனுபவிப்பதால் எல்லா ஜீவர்களும் தமதம் துககங்களிலிருநது விடுபடுவார்களலலவா? என்று மறறவர் களின துக்கத்தைபபாரதது ஸஹிககமுடியாதவராய் ரந்திதேவர் கதறினார்.

(2) அவ்விதமே புத்ததேவரும் தநதரவார்ததிகததில சொல லியபடி **कलिकलुषकृतानि यानि लोके मयि निपतन्तु विमुच्यतां हि लोकः** கலியின் கொடிய பாவஙகள யாவும எனபேரில மட்டுமே விழட்டும். உலகம் யாவும் அககொடுமையில நின்றும் விடுபடட்டும் என்றார் பரானர்த்தம் பொறாமல்.

(3) ஞானிகளுககுள் தலைவரான நம்மாழ்வாரும திருவிருத் தம் முதல பாசுரத்தில—"பொயமைநிலைபெற்ற அறிவும், தீய நடத்தையும, அசுத்தங்களோடு கூடிய சரீரமும், ஆகிய இவற் றோடுகூடி இவவண்ணமான இயல்பை அதாவது பிறவிதுன் பத்தை இனிமேல நாங்கள் அடையாதபடி உனது அடியவனாகிய நான சொலலும் உணமையான விக்ஞாபனத்தை நீ கேட்டருள வேணும. இப்போது தேவரீர முனனிலையில் நின்று விணணப பம செயபவன அடியேன ஒருவனேயாகிலும, என ஒருவ னுடைய அநர்ததத்தைப் பரிஹரித்துக் கொளவதறகாக மாத்தி ரம அடியேன விணணபபம பணணுகிறேனலலேன். அடியே

னுடன்கூட இவ்விருள்தருமாஞாலத்தில் துவள்கின்ற மற்றும் பலபல ஸம்ஸாரிகளின அநர்த்தமும நீங்கவேணடுமெனறு அனே வர்களும் பரதிநிதியாய் அடியேன் விண்ணப்பம செயகிறேன என்று பராநர்த்தம் நெஞ்சிலபடுகையால கூட்டாருககாகத் தாம மன்ருடுகிருர்.

(4) உடையவருக்குத திருககோட்டியூர் நமபி திருமநதரார்த் தத்தை உபதேசிபபதற்கு முன 18 தடவைகளில வரசசொலலி அலககழித்துப பரீக்ஷைசெயது, பிறகு உடையவருடைய ஆர்த் தியைக்கண்டு உபதேசித்தபோது, இவ்வாத்தத்தை மறறொரு வர்கருசசொல்லாதே கொளளும என்று நியமித்துத தம்முடைய கிருபையாலே உபதேசித்தார். உடையவரும கருதார்த்தராய, மறுநாள் அவவூர் எமபெருமானை தெற்காழவார திருமுனபே எடுத்துக்கைகூட்டின அநேகம் ஸ்ரீவைஷ்ணவாகளுககு அந்த பரம ரஹஸ்யார்த்தத்தை உபதேசித்தார. இதைக கேட்டுத திருக கோட்டியூர்நமபி, உடையவரையழைத்துக கேட்டதில், உடைய வா “ தேவர் திருவடிகளை முனனிட்டுககொணடு அடியேன சொன் னது வாஸ்தவமதான ”—என்று விணணபபம் செயய, நமபியும, நம ஆககைனயை நீர் மீறிசசொனனதறகு பலம எதெனறு? கேட் டருள, உடையவரும், “ ஆசார்யநியமனத்தை மறுத்துசசொன்ன அடியேனுக்கு நரகமே பலம” என்று சொலல, “ அதையறிந் திருந்தும் அபபடி ஏன் மீறிசசொன்னீா ”—எனறு நமபி கேடக, உடையவரும் “ அடியேன் ஒருவன் அனறோ நரகம் புகுவது; தேவரீர் திருவடிகளை முன்னிட்டுச சொலலுகையாலே இவ வாத்மகோடிகள் எல்லாரும், தேவரீர் திருவடிஸமபந்தத்தாலே உஜ்ஜீவித்து மோக்ஷமடைவார்கள் என்று நினைத்துச சொன் னேன ”—எனறு விண்ணபபம் செயய, நமபியும, “ இநத பரஸம் ருத்தி (परसमृद्धि) நமககுக் கூடிற்றில்லையே ” என்று உடையவ ருடைய பரஸம்ருத்திககும விசாலஹ்ருதயத்திறகும மெசசி மிக வும் உகந்து ‘ எம்பெருமானரே, இந்த நம்முடைய தாசனம பரம

வைதிக ஸித்தாந்தமென்றிருந்தது. இன்று முதல் எம்பெருமானார் தாசனம் என்று சொல்லுங்கள' என்று எல்லாருக்கும் அருளிச செய்தார. ஆகையால விவேகியானவன் துககநிவருத்திக்கும் ஸுகப்ராபதிக்கும் உபாயத்தைப்பெறறவேண்டும். பகவானுடைய ஜாயமானகாலகடாக்ஷத்தாலே, சேதனன் பரமஸத்வநிஷ்டனாய மோக்ஷஸுகத்தில ஆசைபிறநதபோது, அந்த மோக்ஷஸுக மானது அனுஷ்டானபாயநதமான அர்த்தபஞ்சகஞானத்தாலே கிடைககுமாதலாலும், அந்த ஞானமில்லாதபோது மீண்டும் மீண டும ஜன்மமரணமாகிற ஸமஸார துககமே மேலிட்டு உஜ்ஜீவிகக வழியில்லையாதலாலும, வேதத்தில சொல்லுகிறபடி அந்த முமுக்ஷுவான சேதனன், அந்த ஞானத்தைப்பெறுவதறகாக சுச்ரூஷுவாய குருவுக்குப் பணிவிடை செயவதில் ஆசையுடன் வேதவேதாநத ஸாரார்த்தத்தை நனகு அறிநதவரும, பகவானைத் தவிர்ந்த விஷயஙகளில வைராக்யபூர்வகமாக ப்ரஹ்மாநுபவநிஷ்டரு மான ஸதாசார்யனையாசரயிககவேண்டும. சிஷ்யர்கள செய்யும் பணி விடையால ஆசார்யர்கள மிகவும அதிகமான ப்ரீதியையடைந்து அனுக்ரஹம செயவார்களாகில சிஷ்யர்களுககு எல்லா வித்யை களும ப்ரகாசிக்கும. இதறகு ப்ரமாணம் பாரதம ஆதிபர்வாவில தௌம்யருடைய மூன்று சிஷ்யர்களான (1) உபமன்யு (2) ஆருணி (3) பைதா இவர்கள் சரித்ததிலிருநது காணலாம. தௌம் யர் முதல் சிஷ்யனான உபமன்யுவைப்பார்த்து "நீ வயலுககுத் தண்ணீர கட்டிவிட்டுவா" என்று சொல்லியனுபப, அவன்போய்த் தண்ணீர கட்டக்கட்ட தண்ணீர் வயலிலிருநது வெளியேபோக, அதை அடைககவேறு வழியிலலாமல தண்ணீர வெளியே போகா மல தண்ணீர் தவாரத்தில தானே படுத்துக கொணடான. பிறகு தண்ணீர வெளியே போகவிலலை. வெகு நாழி கழிதததும சிஷ்யன வராததால தௌமயர் மறற சிஷ்யர் களுடயன் வயலுககுப் போய்பபார்கக, அவன படுத்துக்கொணடு தன சரீரத்தால நீரைத்தேக்கி வைத்திருநதான். குருவும ஸந் தோஷமடைநது "सर्वे च ते वेदा प्रतिभास्यन्ति सर्वाणि च धर्मशास्त्राणि"

"உனக்கு எல்லா வேதங்களும் சாஸ்த்ரங்களும் பிரகாசிக்க கடவன" என்று அநுக்ரஹித்தார். அப்படியே அவனுக்கு எல்லா ஞானமும் உண்டாயிற்று. இரண்டாவது சிஷ்யனான ஆருணியைப்பார்த்து க்ரமமாக நீ பிக்ஷையெடுத்துக் கொண்டுவரும் எல்லா அன்னத்தையும் எனக்கே கொடுத்துவிடவேண்டுமென்றும், குருவுக்குக் கொடுத்துவிட்டு மறுபடியும் பிக்ஷைக்குப்போய்க் கொண்டு ஜீவித்துவந்தவனை மறுபடி பிக்ஷைக்குப் போகக்கூடா தென்றும், பசுக்களின் பாலைச்சாப்பிட்டு ஜீவித்துவந்தவனை பாலைச் சாப்பிடக்கூடாதென்றும், கன்றுக்குட்டிகளின் வாயிலுள்ள நுரைகளை சாப்பிட்டு ஜீவனம் செய்துவந்தவனை அதுவும் செய்யக்கூடா தென்றும், இம்மாதிரி உத்தரவு செய்ததால், அவன் வேறு கதியில்லாமல் காட்டிலுள்ள எருக்கம் இலைகளைத் தின்றுகொண்டு வந்து ஜீவித்துவந்து, நாளடைவில் கண்கள் பொட்டையாய் ஒரு நாள் கால்தவறி ஒரு பாழும் கிணற்றில் விழுந்தான். அவன் வழக்கம்போல் வீட்டுக்கு வராததால், குருவும் அவனைத்தேடிப் போய் பாழும்கிணற்றில் கண்டு ஸங்கதிகளைத்தெரிந்து அவனது குருபக்திக்கு மெச்சிக் கண்கள் வருவதற்காக அச்விநீ தேவதைகளை ஸ்தோத்திரம் செய்யக் கற்பித்துக் கொடுத்து, பிறகு கண்கள் வந்தவுடன் உபமன்யுவை அநுக்ரஹித்த பிரகாரம் அநுக்ரஹிக்க, அவனும் எல்லாவேதசாஸ்திரங்களிலும் பாகாசத்தையடைந்தான். மூன்றுவது சிஷ்யனான பைதனை எருது ஸ்தானத்தில் வண்டியிலும், கலப்பையிலும் கட்டி பாரத்தை இழுக்கும் படி செய்ததில், அவன் வெய்யில் மழை, குளிர், பசி, தாஹம், யாவற்றையும் ஸஹித்துக்கொண்டு குருவுக்கு மிகவும் அனுகூலமாய சுச்ரூஷை செய்துவந்ததால், குருவும் மிகவும் ப்ரீதியடைந்து அவனை அநுக்ரஹிக்க அவனும் ஸர்வஜ்ஞனாக ஆய்விட்டான். எல்லா நன்மைகளையுமடைந்தான். ஆகையால் குருவின் ப்ரீதிக்கு குருசுச்ரூஷையே காரணமாகும் என்று ஏற்படுகிறது. **गुरुमेवाभिगच्छेत्, आचार्याद्धैव विद्याविदिता साधिष्ठं प्रापत्** என்று ஒரு சேதனன் குருவையாச்ரயித்தே வித்யைகளை, விசேஷித்து ப்ரஹ்மவித்யையை

யைப் பெறத்தக்கவன் என்றும், குருமுகமாக அடையப்பட்ட வித்யைதான் இவனுக்கு கார்யகரமாமென்றும் சுருதிகள் முறையிடுவதால், குருவை உபஸர்ப்பணம் செய்து வித்யையை க்ரஹிப்பது நியமவிதியென்று சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. இந்த நியமத்தைத் தவறாமல் ஸ்ரீராமனும் க்ருஷ்ணனுமவதரித்த பகவான் வஸிஷ்டவிஸ்வாமித்ர ஸாந்தீபன்யாதிகளையும் ஆச்ரயித்து வித்யாக்ரஹணம் செய்ததாக இதிஹாஸபுராணங்கள் கூறுகின்றன. வஸிஷ்டபுலஸ்த்ய மஹரிஷிகளுடைய வரபலத்தால் ஸ்ரீபராசரபகவானுக்கு பரதேவதாபாரமார்த்ய ஞானம் உண்டாயிற்று. மந்த்ர ப்ரதிபாத்யனான பகவானிடத்தில் போல், மந்த்ரப்ரதனான ஆசார்யனிடத்தில் மேலான பக்தியுண்டானால்தான் ஆசார்யன் உபதேசித்த அர்த்தங்கள் சிஷ்யனுக்கு ப்ரகாசிக்குமென்று 'यस्य देवे परा भक्तिः यथा देवे तथा गुरौ । तस्यैते कथिताह्यर्थाः प्रकाशन्ते महात्मनः ॥' என்று சுருதிகள் உத்கோஷிக்கின்றன.

பகவத்பக்தியில்லாமல் பகவத்விஷயகசாஸ்த்ரங்களின் ஞானம் உண்டாகமாட்டாது. இவ்வர்த்தத்தை நம்மாழ்வார் பெரியதிருவந்தாதியில் விளக்குகிறார்.

"உணர ஒருவர்க்கு எளியனே? செவ்வே இணரும் துழாயலங்கல் எந்தை—உணரத்தனக்கு எளியரெவ்வளவர் அவ்வளவனல் எனக்கு எளியன் எம்பெருமான் இங்கு"—

திருமேனியின் ஸம்பந்தத்தாலே மேன்மேலும் தழைத்து ஓங்குகின்ற திருத்துழாயமாலையையுடைய எம்பெருமான் தானுக்கவே முயற்சி செய்பவர்களில் ஒருவர்க்காவது நேராக அறியக்கூடியவனோ? இல்லை. அப்படி ஒருவர்க்கும் அறியக்கூடியவன் அல்லனாயினும், தனக்கு அடிமைப்பட்டவர்கள் தன்மேல் எவ்வளவு அன்புள்ளவர்களோ அவ்வளவன—அவர்களுக்குத்தானும் தன்னை அவ்வளவு காட்டிக்கொடுப்பன் திருமால். ஆனதால் புத்திசாதுர்யத்தாலே மற்ற சாஸ்த்ரங்களையெல்லாம் கற்றுணர்ந்தவர்களுக்கும் பகவத்பக்தியில்லாவிட்டால் ப்ரஹ்மஞானம் உண்டாகமாட்டாது.

அதுமாத்திரமல்ல. குருபக்தியும் அந்த ஞானத்திற்குக் காரணம். சிஷ்யர்களுடைய ஞானதாரதம்யத்தைக்கொண்டு அவர்களின் குருபக்திதாரதம்யத்தை அறியலாம் என்று ஆசார்யர்கள் கூறுகின்றனர். "आचार्यदेवो भव" என்று தைவத்தைப் போல ஆசார்யரைப் பூஜிக்க வேண்டுமென்று வேதம் சொல்லுகிறது. ஆசார்யஸமாச்ரயணத்திற்கு முன்பு ஒரு சேதனன் மஹாபாபியாயிருந்தபோதிலும், அவனை ஆசார்யன் சுத்தனாக்குகிறான். எவ்வளவு புண்யவானாயிருந்தபோதிலும் ஆசார்யஸமாச்ரயணமில்லாவிடில் உஜ்ஜீவிக்கவழியில்லை. "अच्छेद्यच्छेद्येऽपि शरीरिवर्गे श्रेयस्करी सद्गुरुपादसेवा । समित्पशुच्छेदकशस्त्रयुग्मे रसेन हेमीकरणं समानम् ॥" ஸமித்துக்களை தேவகார்யங்களுக்காக வெட்டிக்கொண்டுவருவதால் நல்லகார்யத்தில் ப்ரவ்ருத்தித்துவரும் ஒருகத்தியையும், கசாப்புக்கடையில் தினமும் ஆடு முதலிய பிராணிகளை வெட்டிக்கொண்டு வருவதால் கெட்ட கார்யத்திலேயே ப்ரவ்ருத்தித்துவரும் மற்றொரு கத்தியையும் யாதொரு வித்யாஸமில்லாமல் ஒரு ரஸகுளிகையானது (philosopher's stone) பொன் ஆக்குமாப்போலே, புண்யபுருஷ பாபபுருஷ வித்யாஸமில்லாமல் ஸதாசார்யஸம்பந்தமானது உத்தாரகமாகிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆசார்யஸமாச்ரயணத்திற்கு முன்பு கொடியபாபங்களையே செய்துபோந்த க்ஷத்ரபந்து என்கிற க்ஷத்ரியக்கேட்டனுக்கு 'ஆசார்யஸம்பந்தத்தால் முக்தி கிடைத்தது. அவன் பண்ணிய பாபங்கள் மோக்ஷத்திற்கு இடையூறாக நிற்கவில்லை. ஆசார்யஸமாச்ரயணத்திற்கு முன்பு புண்ணியங்களையே செய்துபோந்த புண்டரீகன் என்னும் ப்ராஹ்மணோத்தமனுக்கு அவன் புண்ணியங்கள் ஒன்றும் மோக்ஷத்திற்குக் காரணமாகவில்லை. ஆசார்யஸம்பந்தமட்டுமே காரணமாயிற்று. ஆகையால் ஒரு முமுக்ஷுசேதனன் பக்தியுடன் ஆசார்யனை உபாஸிக்கவேண்டியது.

சிஷ்யன் ஆசார்யனை உபாஸிக்கவேண்டிய ப்ரகாரத்தை ஸ்ரீ தேசிகன், ஆசார்யனுக்கும் பகவானுக்குமுள்ள ஸாம்யத்தை

ஒற்றுமையைக் காட்டி உபதேசிக்கிறார்.

(1) "अज्ञानध्वान्तरोधात्" ததவஹித புருஷார்த்த விஷயகமான அஞ்ஞானமாகிற இருளை பகவானும் ஆசாரயனும இருவரும நீககுகிறாகள். "तेषामेवानुकंपार्थमह-मज्ञानजं तमः। नाशयाम्यात्मभावस्थः ज्ञानदीपेन भास्वता ॥" (கீ-10-11) என்னிடததில் எபபோதும ஸததயோகத்தைவிரும்புகிறவர்களை அனுகரஹிககவேணடி அவர்களுடைய மனோவ்ருத்திககு விஷயமாய் நான் இருந்துகொண்டு, என்னுடைய கல்யாணகுணகணங்களை அவர்களுக்குக் காண்பித்துக்கொண்டு, என் விஷயமான ஞானமாகிற விளக்கினால், ஞானவிரோதியானதும் "अविद्याकर्मसंज्ञान्या" என்று சொல்லப்பட்ட முன் கர்மமாகிற அஞ்ஞானத்தினாலுண்டானதுமான விஷயப்ராவண்யம் விஷயப் பற்று என்கிற இருளைப்போக்குகிறேன் என்று சொன்னபடி பகவான் அஞ்ஞானமாகிற இருளைபபோக்குகிறான். குருவும் சிஷயனுடைய அஞ்ஞானததைப் போககுகிறான. गु என்றால் இருட்டு, रु என்றால அதை நீககுகிறவர். என்று குருசப்தத்திறகு நிர்வசனம செய்யபபட்டிருககிறது.

"என்னைப்பெற்ற அத்தாயாயததந்தையாய அறியாதன அறிவித்த அத்தா" (2—3—2) தாயாகியும தநதையாகியும ஆசார்யனாயும உபகாரகன் ஆனவனே, நீ செய்த உபகாரததை நான் அளவிட்டு அறியமாட்டேன என்றார நம்மாழவார். எம்பெருமானுடைய காலக்ஷேபகோஷ்டியில இநத பாசுரம வநதவளவிலே இவவாதமாவுககு முதல குரு யார என்று விசாரமுணடாயிறறு. ஆசாரயன என்று சிலர் சொனனாகள. வேறு சிலர் ஆசாரயனுடைய ஸ்ரீபாததகிலே கொணடுசோதத ஸ்ரீ வைஷ்ணவன முதலகுரு எனறாகள. முடிவில எமபார அருளிசசெயததாவது— "இசைவிததென்னை உன்தாளிணைககீழ இருததுமம்மானே" (5—8—9) என்று அருளிசசெய்கையாலே, என உளளததிலே யிருநது இசைவிதத ஸர்வேசுவரனே முதல் குரு. ஆசாரயன அழைத்தாலும ஒரு ஸ்ரீ வைஷ்ணவன அழைததாலும, இவன

மாட்டேன் என்று சொல்லிவிட்டால் செய்யலாவது ஒன்றுமில்லை. அப்படிச் சொல்லாமல் இசைவித்தது ஸர்வேச்வரனுடைய கருத்யமே என்பது எம்பாருடைய திருவுள்ளம். ஆகையால் அஜ்ஞான இருளை இருவரும் போக்குகிறார்கள்.

(2) "**अघपरिहरणात्**" பாபங்களைப் போக்குவதில் இருவருக்கும் ஸாம்யம். "**हरिर्हरतिपापानि दुष्टचित्तैरपिस्मृतः। यदृच्छयापि संस्पृष्टः किन्न दहति पावकः॥**" கெட்டமனதையுடையவர்கள், தன்னை நினைத்தாலும் ஹரியானவர் அவர்கள் பாபங்களைப் போக்குகிறார். தற்செயலாய் மிதிக்கப்பட்ட தீயானது நம்மைச்சுடுகிறதல்லவா? "சேர்ந்தார் தீவினைகட்கு அருநஞ்சை" (2—3—6) பக்தர்களின் கொடிய பாபங்களுக்கு ஆற்றவரிதான விஷயமாயிருப்பன் எம்பெருமான், என்றிவை முதலிய ப்ரமாணங்களால் பகவானுக்கு பாபஹரத்வம் ஸ்பஷ்டம். பாபிஷ்டனான க்ஷத்ரபந்துவுக்கும் ஆசார்யஸமாச்ரயணத்தால் மோக்ஷம் கிடைத்ததால், ஆசார்யனுக்கும் சிஷ்யபாபஹரத்வம் ஸித்தம்.

(3) "**आत्मसाम्यावहत्वात्**" ஞானாதிகளாலே தனக்குச் சமமாக ஆக்குகை இருவர்க்கும் துல்யம். "**निरंजन. परमं साम्यमुपैति**" "**मम साधर्म्यमागताः**" (கீ 14–2) **आत्मभावं नयत्येवं तद्ब्रह्मध्यायिनं मुने**" "தம்மையே நாளும் வணங்கித்தொழுவாரைக்கு தம்மையேயொக்க அருள் செய்வா" (பெரியதிருமொழி 11—3—5) என்கிறபடியே தேவதாந்தரபஜனத்தை நெஞ்சிலும் நினையாதவர்களாய், ப்ரயோஜநாந்தரத்தையும் சிந்தையில் கொள்ளாதவர்களாய் ஆச்ரயிக்கின்ற பக்தர்களுக்கு தன்னோடு பரமஸாம்யாபத்தியைத் தந்தருள்பவன் எம்பெருமான். ஏனென்றால் தன்னை அநுபவிப்பாரையும் தன்னைப் போலேயாக்கி உஜ்ஜீவிப்பிக்கும் ஸ்வபாவமுடையவன் அவன். முக்தி தசையில் பரமஸாம்யம். இங்கும் யதோசிதஸாம்யத்தைக் கொடுப்பவன். ஸ்ரீராமாயணத்தில் (அயோ-கா. 12-105) "**अहं पुनर्देवकुमाररूपमलंकृतं तं सुतमाव्रजन्तम्। नन्दामि पश्यन्नपि दर्शनेन भवामि दृष्ट्वा पुनर्युवेव॥**" தசரதன் இராமனைப்

பற்றி கைகேயினிடம் சொல்லும்போது "இயற்கையில் அழகுள்ளவனும், அலங்காரங்களால் அதிக அழகையுடையவனும், யானைபோல் நடந்துவருபவனுமான இராமனை மனதால் நினைத்த மாத்திரத்தால் நான் களிக்கிறேன். நேரில் கண்டவுடன் மறுபடி யௌவனத்தை யடைந்தவன்போல, அதாவது "युवासुवासाः" என்று நித்யயுவாவான பகவானுடைய யௌவனம் போன்ற யௌவனத்தையடைந்தவன்போல உடம்பெல்லாம் பூரித்துக் களிக்கின்றேன்"—என்றார். வஸுதேவரும் தன் புத்ரனுடைய முகதர்சனமாகிற மஹோத்ஸவத்தைப் பெறுவதினால், தனக்குவந்த கிழத்தனத்தைவிட்டுவிட்டு வாலிபனாகவே ஆனார் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. "युवैव महोत्सवमिवासाद्य पुत्राननविलोकनम् । वसुदेवोभूद्विहायाभ्यागतां जराम् ॥"

(4) जन्मप्रध्वं सजन्मप्रदत्वमतया ஸம்ஸாரஜன்மத்தைப் போக்கி ஞானரூபஜன்மத்தைக் கொடுக்கும் மாஹாத்ம்யம் இருவர்க்கும் ஸமானம். "அன்றுநான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன்" பகவான் என்னைப்பெறுகைக்காகத் திருப்பதிகளிலே நிற்பது, இருப்பது, கிடப்பதாக நிற்க அக்காலத்தில் நான் ஞானஸ்வரூபமான ஜன்மத்தையுடையனாகப் பெற்றிலேன். அந்தஜன்மமுண்டான பின்பு அவனை ஒருக்காலும் மறந்திலேன்" என்றும், "இன்று என்னைப்பொருளாக்கித் தன்னை யென்னுள் வைத்தான்" (10—8—9) "பொருளல்லாத என்னைப்பொருளாக்கி" (5—1—3) "என்னைப்புவியிலொரு பொருளாக்கி" (இரா-நூற்ற 4) "वस्तु तामुपयातोहं" என்றும் ஆழ்வார்களும் ஆசார்யர்களும் சொல்லியபடி தன் விஷயீகாரத்துக்கு முன்பு 'असन्नेव भवति' என்று அஸத் ஸமனாயிருந்தவனை सन्तमेनं என்று ஞான்ரூபஜன்மத்தைக்கொடுப்பது இருவர்க்கும் துல்யம். 'सहि विद्यातः तं जनयति तत् श्रेष्ठंजन्म' வித்யையைத் தாயாகப்பெற்று ஆசார்யனால்கொடுக்கப்பட்ட ஜன்மம் மிகவும் சிறந்தது என்று சாஸ்த்ரம் கூறுகிறது.

(5) दिव्यदेहिमावात् பகவானுடைய ஜாயமானகாலகடாக்ஷத்தாலே ஸத்வகுணம்மேலிட்டு மோக்ஷருசி பிறந்து மோக்ஷ

ஸாதனத்தைத் தேடி சேதனன் உஜ்ஜீவிக்கிறான். அதுபோல் ஆசார்யனுடைய கடாக்ஷத்தாலே, ஸ்தாவரம், பசு, பக்ஷி, மனுஷ்யன், பாலர்கள், ஊமைகள், ஜடர்கள், குருடர்கள் சபபாணிகள், செவிடர்கள் எல்லோரும் உஜ்ஜீவிக்கிறார்கள் என்று சாஸ்த்ரம் கூறுகிறது. முன்பு ஒரு காலத்தில் நம்பிள்ளை என்கிற ஆசார்யர் காஞ்சீபுரத்திலிருந்து ஸ்ரீரங்கத்திற்கு எழுந்தருளும்போது நெடுந்தூரம் நடந்து வெய்யிலால் தபிக்கப்பட்டு வரும்போது ஒரு ஆலமரம் நன்றாய்ப்பணைத்துத் தழைத்து நிழலோடுகூடியிருந்ததால் அதன் கீழே ஆசார்யரும் சிஷ்யர்களும் தங்கி இளைப்பாறி, அங்கே பெருமாளுக்கு அமுதுசெய்யப்பண்ணி தாமும் சிஷ்யர்களும் அமுதுசெய்து, அன்றிரவு அங்கேயே படுத்திருந்து, மறுநாள் பயணம் புறப்படும்போது, நம்பிள்ளை சிஷ்யர்களைப் பார்த்து, இது நமக்கு எல்லோருக்கும் பசி, தாஹம், தாபம் யாவற்றையும் போக்கிற்றல்லவா? இதற்கு நாம் என்ன செய்தோம், என்றும், '**गच्छलोकाननुत्तमान्**' என்று சொல்லி ஸ்ரீராமன் ஜடாயுஸ்ஸை அனுக்ரஹித்தார்போலே "மேலான வைகுண்ட லோகத்துக்குச் செல்லக்கடவாய" என்று விசேஷகடாக்ஷம் பண்ணி இரண்டு திருக்கைகளாலும் தடவிவிட்டுப்போகும்போது, ஸமீபக்ராமவாஸியான ஒரு ப்ராஹ்மணன் கண்டு பரிஹாஸம் செய்துவிட்டுப்போனான். நம்பிள்ளை முதலானவர்கள் பிறகு ஸ்ரீரங்கத்தை நோக்கிப் போனார்கள். அன்று இரவில் "சூழ் விசும்பணிமுகில்" (10—9—1) நம்மாழ்வார் அனுபவித்தபடி பெரிய மஹோத்ஸவகோஷம் பிறந்தது ப்ராஹ்மணனும், அவ்வூரிலுள்ள எல்லோரும் காணவந்துநிற்க, ஆகாசத்தில் திவ்ய தேஜஸ் ஒன்று தோன்றிற்று. அதை எல்லாரும் கண்டு ஆச்சர்யப்பட்டுக்கொண்டிருந்தபோது அந்த வ்ருக்ஷம் இரண்டு கூறாய்ப் பிளந்து போயிற்று பெரிய சப்தத்தோடே அந்த திவ்யதேஜஸ் ஸான்று புறப்பட்டு ஆகாசத்தின்மேலேபோய ஸூர்யனுடைய தேஜஸ்ஸிலே கலந்துபோனபடியைக்கண்டு, காணவந்தவர்கள் பெரிய ஆச்சர்யத்துடனும் குழப்பத்துடனும் இது என்னவென்று

விசாரிக்க, பரிஹஸித்த பராஹ்மணன், அந்த விருக்ஷத்தை நம்பிள்ளை கடாக்ஷித்தபடியைச் சொன்னான். எல்லோரும் கேட்டு விஸ்மிதராய்ப் போனார்கள். மறுநாள் இந்த ஸம்பவத்தைக் கேட்டு, நம்பிள்ளையும், எண்ணெய்க்காப்பு, ஸ்ரீசூர்ணபரிபாலனம் பண்ணி, திருவத்யயனத்தை நடத்திப் போனார் என்று ஐதிஹ்யம். ஆகையால் இருவருடைய கடாக்ஷமும் உத்தாரகம்.

(6) निष्प्रत्यूहानृशंस्यात् — தடையற்ற தயையானது பகவானுக்கும் ஆசார்யனுக்கும் ஸமம். தயை தடையற்றிருப்பதாவது, அறிவுள்ளவன் அறிவில்லாதவன், தேவன் மனுஷ்யன் அஸுரன், மிருகம் பக்ஷி, அபராதி நிரபராதி, முதலான விஷயவிபாகமில்லாமல் எங்கும் ஸ்வரஸமாகப் பெருகுவது "वधार्हमपि काकुत्स्थः कृपया पर्यपालयत्" கொல்லத்தக்க காகாஸுரனையும் பகவான் கிருபையால் ரக்ஷித்தான். தயை அவனுக்கு ஸ்வபாவகுணம். பிரிவாற்றாமையாலே வருந்திய பிராட்டியானவள், தன் ஆற்றாமைக்கு உதவவந்த பெருமாள் முகம் காட்டப்பெறாது வருந்தத்திலே "ख्यातः प्राज्ञः कृतज्ञश्च सानुक्रोशश्च राघवः। सद्वृत्तो निरनुक्रोशश्शंके मद्भाग्यसंक्षयात्॥" என்று பெருமாளை தயையற்றவராக சங்கித்துச்சொல்லுகிற அவஸ்தையிலும், அவ்விதம் சங்கிக்கைக்கு அடி தன்னுடைய பாக்யஹானி என்கையாலே சங்கா காரணத்தை ஸ்வகதமாக தன்னிடத்திலேயிருப்பதாகச் சொன்னாள். ஆசார்யனும் 'தத்பரவசனாய், ஞானானுஷ்டான - உபதேசயோக்யதை யில்லாதவர்களுக்காகத் தாமே பகவானை சரணவரணம் பண்ணி, ஔஷதசேவைக்கு யோக்யதையில்லாத ஸ்தனந்தய சிசுவுக்கு வ்யாதியுண்டானால், தான் ஔஷதசேவைபண்ணித் தன்னுடைய ஸ்தன்யபானத்தாலே சிசுவின் ரோகத்தை நிவர்த்தி செய்யும் மாதாவைப்போலே, இச்சேதனர்களைத் தாம் அபிமானித்து, தம்முடைய நிர்ஹேதுக ஸௌஹார்த்தத்தாலே இவர்களின் ஸம்ஸாரமாகிற ரோகத்தை நிவ்ருத்தி செய்வித்து மோக்ஷத்தை அடைவிப்பிக்கிறான். ஒரு ஊமையானவன் ஆர்த்தனாயிருக்கிறபடியைக் கண்டு ஒரு நாள் எம்பெருமானார்

தயாபரராய தமமுடைய திருவடிகளைக்காட்டி, கையாலே ஜாடை செயது, இததிருவடிகளை ஹ்ருதயத்திலே வைத்துக கொள ளெனறு அவன தலையிலே திருவடிகளை வைக்க அதை கூரத் தாழவான் கணடு 'ஐயோ நாம் கூ ர கு ல த தி லே பிறநது சாஸதராப்யாஸம பணணிக் கெட்டோம, நாமும் ஒரு ஊமையாயப் பிறநதிருநதால பாதஸவீகாரம் லபிககுமே எனறு பரிதபிக தாராம. ஆகையால தயாபரவசதவம இருவாககும ஸமானம.

(7) **नियतरसतया** நிரதிசயாநநதரூபதவம இருவாககும துல யம. "**रसो वै सः**" "**आनन्दो ब्रह्म**" "அபபொழுதைககபபொழுது என் ஆராவமுதே" எனறு பகவானை நிரதிசயபோகயமாக சாஸ தரஙகள கூறுகினறன. "தென்குருகூர நம்பி என்றககால அண் ணிககும் அமுது ஊறும் என நாவுககே" "நாவினால நவிறறு இன்பம எயதினேன"—நமமாழவார எனகிற சொலலைச சொன ஞல பரம போககியமாயிருககும என ஒருவனுடைய நாவுககே அமருதம ஊறுகிறககும எனறு மதுரகவியாழவார சொனனபடி ஆசார்யனும போககியமாயிருககும.

(8) **नित्यशेषित्वयोगात्** நிருபாதிகஸவாமிதவம இருவாககும துலயம.

இபபடி கீழசசொனன எட்டு குணஙகளாலே, ஆசாரயனை ஸசசிஷயாகளாலே ஸாவேசுவரனபோலே உபாஸிககத தககவன எனறு ஸ்ரீ தேசிகன *ஸ்ரீ நயாஸவிமசதியில அருளிசசெயதார.

* இநதககலியுகததில ஆசாரயனுடைய பரபாவததை வெளி யிட்ட ஸ்ரீ மதுரகவிகள விஷயமாய,

'இன்பத்தில் இறைஞசுதலில இசையும் பேற்றில
இகழாத பல்லுரவில் இராகம் மாறறில
தன்பறறில் வினைவிலககில் தகவோககததில்
தததுவததை உணாததுதலில் தன்மையாககில்
அன்பாக்கே அவதரிககும் ஆயன் நிற்க
அருமறைகள தமிழசெயதான் தாளேகோணடு
துன்பறற மதுரகவி தோன்றக காட்டும்
தொல்வழியே நல்வழிகள துணிவாாகட்கே'

என்று அருளிசசெயதிருககும பாட்டிலும இவ்வாததம ப்ரதிபாதிககப்பட்டிருககிறது.

ஆசார்யன் பகவானோடு துல்யன் என்பது மட்டுமல்ல. சில அம்சங்களில் உயர்ந்தவன் என்றே சொல்லலாம். பகவானை ஆச்ர யிப்பது மிகவும் துர்லபம். ஆசார்யனை ஆச்ரயிப்பது ஸுலபம் ஏனென்றால் பகவானை சாஸ்த்ரத்தினால் மட்டுமே அறிய முடியும். ஆசார்யனைக் கண்களால் கண்டு பற்றலாம். பகவானை அர்ச்சாரூபேண ஸ்ரீரங்காதி ஸ்தலங்களில் கண்டாலும் வாய்திறந்து ஒரு வார்த்தையருளிச்செய்யமாட்டான். மேலும், சேதனன் தன்னுடைய துர்வாஸனையாலே விஷயங்களில் மண்டிக் கெட்டவழியில் ப்ரவருத்தித்தபோதிலும், இவன் ருசியைப் பார்த்து அனுமதிதானம் பண்ணி கர்மத்துக்குத் தக்கவாறு பலனை யடைவிப்பான். ஆசார்யன் அவ்விதம் செய்யாமல் சிஷ் யனை நிர்பந்தித்துத் திருத்தி பகவானுக்கு இஷ்டவினியோக யோக்யனாக ஆக்குவான். இவ்வார்த்தையை "இடுமே இனிமே சுவர்க்கத்தில்" என்கிற பாட்டிலே "எம்பெருமானாரை 'சரணம்' என்று சொல்லிவிட்டால் நம்மை ஸன்மார்க்கத்தில் திருத்தி, சில நாளிருந்து ஸுகம் அனுபவித்துப் பிறகு மீள்வதற்கு உறுப்பான ஸ்வர்க்கத்திலாவது, துன்பங்களையே அனுபவிப்பதற்கு இட மான நரகத்திலாவது, இன்பதுன்பங்களை மாறிமாறி அனுபவிப் பதற்கிடமான இந்த ஸம்ஸாரத்திலாவது வைக்காமல், தம்மு டைய பாதங்களில் சேரும்படி தாமே அங்கீகரிப்பார்" என்று அமுதனார் சொன்னார்.

இவ்வித ஆசார்யஸம்பந்தத்தைப் பெறுவதுமட்டும் போறாது பெற்றஸம்பந்தம் நீங்காமலிருக்கவேண்டும். ஆசார்யஸம்பந்தம் குலையாதேயிருந்தால், ஆத்மாவுக்கு அலங்காரங்களான தத்வ ஞானம், அநுசிதவிஷயவைராக்யம், உசிதவிஷயபக்தி இவை யாகிய ஆத்மகுணங்கள் இல்லையாகிலும், அந்த ஆசார்யனுடைய அனுக்ரஹாதிகளாலே க்ரமேண உண்டாக்கிக்கொள்ளலாம். ஸர்வ மங்களஹேதுவான ஆசார்யஸம்பந்தம் குலைந்தால், ஞானம் முத லிய குணங்கள் இவனுடைய பூர்வஸுக்ருதத்தால் சிறிது உண்டா னாலும், பகவதங்கீகாரஹேதுவாகாமையாலே நிஷ்ப்ரயோஜன

மாய்விடும். பதிவ்ரதையான ஒரு ஸ்திரீக்கு, பதிசம்பந்தசூசகமான தாலி (திருமங்கல்யம்) ஒன்று போகாமல் கிடந்தால், மற்ற ஆபரணங்கள் இல்லாவிட்டாலும், கையில் பணம் கிடைத்த போது பண்ணிப்போட்டுக்கொள்ளலாம். இத்தனை ஆபரணங்கள் இருக்கின்றனவேயென்று நினைத்துத்தாலியை வாங்கிப்போட்டால் விதவாலங்காரஸமமாகையாலே அணிந்த ஆபரணங்களெல்லாம் குற்றமாகும். '**नारायणोपि विकृतिं याति गुरोः प्रच्युतस्य दुर्बुद्धेः । अमलं जलादपेतं शोषयति रविर्नतोषयति ॥**' தாமரையை அலர்த்தக்கடவனான ஸூர்யன், தானே, தாமரை நீரைவிட்டுப் பிரிந்தால் அதை உலர்த்துகிறது போல், சேதனனுக்கு ஸ்வரூபவிகாஸத்தைப் பண்ணும் ஈசுவரன் தானே ஆசார்யஸம்பந்தம் குலைந்தால் அதை வாடப்பண்ணுவான். "தன் குருவின் தாளிணைகள் தன்னில் அன்பொன்றில்லாதார், அன்புதன்பால் செய்தாலும் அம்புயைகோன், இன்பமிகுவிண்ணாடு தானளிக்கவேண்டியிரான், ஆதலால் நண்ணார் அவர்கள் திருநாடு" —என்று மாமுனிகள் அருளிச் செய்தார். ஆகையால் ஆசார்யஸம்பந்தத்தையொழிய பகவத்ஸம்பந்தம் கிடைக்காததால் ஆத்மோஜ்ஜீவனத்துக்கு இரண்டும் அவசியம் என்பது திரண்டபொருள்.

---

இஃது டில்லி ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்த ஸபையின்

மூன்றாவது வார்ஷிக மஹோத்ஸவத்தில்

படிக்கப்பட்டது.

ஸ்ரீ:

# ச்ருதி ப்ராமாண்யம்.

## அவதாரிகை.

அவாப்தஸமஸ்தகாமனாய், ஸகலகல்யாணகுணாத்மகனாயிருக்கும் ச்ரிய:பதியான ஸர்வேச்வரன் ஸ்ரீவைகுண்டம் என்கிற திவ்ய லோகத்தில் திருமாமணிமண்டபத்தில் ஸ்ரீ பூமி நீளா ஸமேதனாய் ரத்நஸிம்ஹாஸனத்தில் வீற்றிருந்து நித்யர்களாலும் முக்தர்களாலும் இடைவிடாமல் கைங்கர்யம் செய்யப்பெற்று, அநவரதம் பரிசரிக்கப்பட்ட தாமரைத்தாள்களை யுடையவனாய், அவர்கள் போலவே தம் பாதபத்மஸேவைக்கு அர்ஹர்களாயிருந்தும் அதை இழந்து, ப்ரளயகாலத்தில் உரைமெழுகில் பதிந்த ஸ்வர்ண கணம் போல, ப்ரக்ருதியில் லயித்து ஞானம் குன்றியிருக்கும் ஜீவர்களைப் பார்த்துக் கிருபை கூர்ந்து, மஹத், முதலிய ஸ்ருஷ்டி க்ரமத்தில் அவர்களுக்குத் தன் பாதாரவிந்த ஸமாச்ரயணத்திற்கு உசிதங்களான கரணகளேபரங்களைக் கொடுத்தும், அவைகளைக் கொண்டு அவர்கள் உஜ்ஜீவிக்காமல் நதியைத் தாண்டுவதற்காகக் கொடுக்கப்பட்ட ஓடங்கள் மீதேறி நதிவேகம் போன போக்கிலேயே சென்று கடக்கமுடியாத மஹாஸமுத்ரத்தை யடைவார்போல அந்தக் கரணகளேபரங்களைக்கொண்டே விஷயஸுகங்களில் மேன் மேலும் பற்றுதல் வைத்து அவற்றையே அனுபவித்துக்கொண்டு இந்த ஸம்ஸாரஸாகரத்தில் மூழ்கியிருக்கும் சேதனர்களை உஜ்ஜீவிப்பிக்கவேண்டி அவர்கள் நன்மைதீமைகளை யறியும்பொருட்டு ஆதியும் அந்தமுமில்லாததாயும் விச்சேதமற்ற பாடஸம்ப்ரதாய முள்ளதாயும் ப்ரமாதம் முதலிய தோஷலேச கந்தமுமில்லாததாயுமிருக்கும் வேதமென்னும் சாஸ்த்ரத்தை ப்ரவர்த்திப்பித்தான்.

அந்த சாஸ்த்ரமானது, பரமபுருஷாராதனம் என்கிற புண்ய கர்மாவைச் செய்தால் அவனுடைய அநுக்ரஹத்தால் ஸ்வரூப

பலம கிடைககுமெனறும, அதற்கு விதயாஸமாயப பாபரூபமான காமாவைச செயதால அவனுடைய நிகரஹததால துககரூப பலம கிடைககுமெனறும சொலலுகிறது. வேதம காமகாணடமென றும பரஹமகாணடமென்றும இரணடு பாகததோடு கூடியது. ஆராதந ரூபமான காமததை பரதிபாதிபபது பூாவகாணடம. ஆராதிககபபடும பரஹமததை பரதிபாதிபபது உததரகாணடம.

## ஶ்ருதி முதலிய பதங்களின் அாததம்.

இவவிதம இரணடு பாகஙகளான காமபரஹம காணடங களோடு கூடியதாய அதனால ஒரே சாஸதிரமாயிருககும ஶ்ருதி யெனறும, நிகமமெனறும, ஆகமமெனறும, ஆமநாயமெனறும, ஸமாமநாயமெனறும, சநதஸஸெனறும, ஸவாதயாயமெனறும, அநுஶ்ரவமெனறும, தரயீ என்றும சொலலபபடட அக்ஷரராசி ரூபமான சாஸ்தரமானது இனனாரால இககாலததில செயயப படடதெனறு சொலலமுடியாததும, நமது ஆாயமததிறகும, தாமாநுஷடானஙகளுககும, சடடததிறகும, ததவநிாணயததிற கும மூலமாய நெடுஙகாலமாய வழஙகிவருகிறதெனபதும ஆஸதி காகளனைவருககும தெரிநத விஷயம. **श्रूयते नित्यं इति श्रुतिः** என றைககும கேடகபபடுவதால ஶ்ருதி எனறு பெயா. **विद्यन्ते ज्ञायन्ते लभ्यन्ते वा धर्मादि पुरुषार्थाः इति वेदाः** (தாமம முதலிய புருஷாாததங கள கிடைபபதால வேதமெனறு பெயா) **प्रत्यक्षेणानुमित्यावायस्तूपायो नवुध्यते । एतं विदन्ति वेदेन तस्माद्वेदस्य वेदता ॥** பரதயக்ஷாநுமானங களால அறியமுடியாத உபாயததைத தெரிவிபபதால வேத மெனறு பெயா. இவை மூலமாயககொணடதால ஸமருதிகளுக கும சாஸதரமெனறு பெயா. **शिष्यते उपदिश्यते अनेन इति, शासनात् शास्त्रं** பரவருததி தாமஙகளையோ அலலது நிவருததிதாமங களையோ எது உபதேசிககினறதோ, அது நிதயமானாலும உண டானதாயிருநதாலும அதறகுச சாஸதிரமெனறு பெயா. **प्रवृत्तिर्वा निवृत्तिर्वा नित्येन कृतकेनवा । पुंसां येनोपदिश्येत तच्छास्त्रमभिधीयते ॥**

## வேதத்தின் ரூபங்கள்.

வேதம் மந்த்ர ரூபமாயும் ப்ராஹ்மண ரூபமாயு மிருக்கிறது. அவைகளில் மந்த்ரம் என்பது ப்ரயோககாலத்தில் அவச்யம் அறியவேண்டிய காமத்தின் ஞானத்தை உண்டாக்குவது. **आपो हिष्ठा मयो भुव** என்கிற மந்த்ரமானது ஜலப்ரோக்ஷணத்தை ஜ்ஞாபிக்கின்றது. ப்ராஹ்மணம் என்பது விதி, நிஷேதம், அர்த்த வாதம் என மூன்றுவகைப் பட்டது. அவற்றில் விதி என்பது **सत्यं वद धर्मं चर** (ஸத்யத்தைச் சொல் தர்மத்தைச் செய்) என்பது போன்ற கட்டளை. நிஷேதம் என்பது **नकलंजं भक्षयेत् न सुरां पिबेत्** (களஞ்சபக்ஷணம் செய்யாதே-ஸுராபானம்செய்யாதே) என்றிவை போன்ற விலக்கான ஆஜ்ஞை அர்த்தவாதங்கள் என்பவை விதியையோ அல்லது விலக்கையோ நன்றாய எடுத்துக்காட்டி நாம் ப்ரவ்ருத்திப்பதற்கோ அல்லது நிவ்ருத்திப்பதற்கோ நமக்கு ருசியை உண்டுபண்ணவேண்டி, த்ருஷ்டாந்தரூபமான கதைகள்போல உள்ளவை. உதாரணமாய, **वर्म वा एतद्यज्ञस्य क्रियते यत्प्रयाजानु याजाइज्यं ते** ப்ரயாஜாநுயாஜங்கள் தர்சபூர்ணமாஸ யாகத்திற்குக் கவசம் போன்றவை என்பதால் ப்ரயாஜாதிகளைச் செய்யவேண்டும் என்பதில் ருசியை உண்டுபண்ணுகின்றன.

## வேதத்தின் நான்கு சாகைகள்

இப்படி, மந்த்ர, ப்ராஹ்மண ரூபமான வேதமானது ரிக் யஜுஸ் - ஸாம அதர்வணம் என்கிற நான்கு சாகைகளையுடைய ஒரு வ்ருக்ஷம். அந்த சாகைகளில் ரிகவேதம் என்பது பாத அமைப்போடுகூடின ஸ்தோத்ரரூபமான ரிக்குகளின் ஸமூஹம். யஜுஸ் என்பது யாகம் முதலியவைகளின் ஸ்வரூபம் முதலியவற்றைப் போதிப்பது ஸாமம் என்பது கானம் செய்யக்கூடிய மந்த்ரஸமூஹம் அதர்வணம் என்பது சாந்தி ப்ரதிஷ்டை முதலிய கிரியைகளுக்கும், மாரணம், உச்சாடனம், ஸ்தம்பனம், மோஹனம், ஆபிசாரிகம் முதலிய கிரியைகளுக்கும், ஆக்நேய வாயவ்யாதி அஸ்த்ர ப்ரயோகங்களுக்கும் உபயுக்தமான மந்த்ரங்களை விசேஷ

மாயுடையதாயும், இன்னும் சில ஸௌம்ய மந்த்ரங்களும் ப்ராஹ்மணங்களும் அடங்கியது.

இவ்விதம் மந்த்ர ப்ராஹ்மணரூபமான நான்கு வேதங்களும் ஐஹிக ஆமுஷ்மிகங்களையும், அவைகளின் ஸாதனங்களையும் (யதா பூதவாதிகளாய்) உள்ளது உள்ளபடியே சொல்லிக்கொண்டு அந்தந்த அதிகாரிகளுக்கு வேண்டிய விஷயங்களைப் போதிக்கின்றன. அதில் அந்தந்த அதிகாரி தனக்கு வேண்டிய அம்சத்தை 'எங்கும் ஜலம் நிறைந்த குளம் முதலியவற்றில் நமக்குத் தேவையான அளவு ஜலத்தை நாம் ஸ்வீகரிப்பதுபோல், எடுத்துக்கொள்ள வேண்டு' மென்று முமுக்ஷுவான அதிகாரியைப்பற்றி **यावानर्थ उद्पाने** என்கிற ச்லோகத்தில் ஸ்ரீகீதாசார்யன் அருளிச்செய்தார்.

## வேதமும் மற்ற வித்யைகளும்.

வேதத்தில் ஸர்வவித்யைகளும் அடங்கியிருக்கின்றன. அநேக தர்சன வாதங்கள் ஸங்க்ரஹமாயும் விஸ்தாரமாயும் சொல்லப்பட்டிருக்கின்றன. உதாஹரணமாய் ச்வேதாச்வதரோபநிஷத்தில் **कालः स्वभावः नियतिर्यदृच्छा भूतानि योनिः पुरुष इति चिन्त्य । संयोग एषां न त्वात्मभावात् आत्माप्यनीशः सुखदुःखहेतो ॥** ஸர்வஜகத்திற்கும் காரணம் எது என்றால்.

(1) காலம் தான் காரணமென்று காலஜ்ஞர்களும்,

(2) ஸ்வபாவமே காரணம் என்று லோகாயதிகர்களும்,

(3) நியதி என்கிற புண்யாபுண்ய ரூபமான கர்மமே காரணமென்று மீமாம்ஸகர்களும்,

(4) தற்செயலால் உண்டாயிற்றென்று நிரீச்வர வாதிகளும்,

(5) பூதங்கள் தான் காரணமென்று ஜகத்து நித்யமென்னும் வாதிகளும்,

(6) ப்ரக்ருதிதான் காரணமென்று ப்ரக்ருதி வாதிகளும்,

(7) மற்றும் சிலர் புருஷன் காரணமென்றும் சொல்லுகிறார்கள்.

கீழ்க்கூறியவை அநேக தோஷங்களையுடையவை யாகையால் காரண மாகமாட்டா. ஏனெனில், அசேதநமோ அல்லது சேதநமோ தனித்தனியாக ஜகத்காரணமாகாது. இவைகளைச் சோப்பதற்கு ஆத்மா இருப்பதால் சோக்கைகூடும் என்று சொல்லவொண்ணாது ஆத்மாவுக்கு ஸ்வாதந்த்ர்யம் இருக்குமானால் ஸுகத்தையே அனுபவிக்கும்; துக்கத்தை அனுபவிக்கவேமாட்டாது என்று இவ்வகையான தாசனங்கள் கூறப்பட்டிருக்கின்றன.

மேலும் ஸாஹித்ய சாஸ்திரத்தைச் சோந்த அலங்காரங்களும் ரஸம் முதலிய மற்றவிஷயங்களும் அலங்கார பரியையும் ரஸிகையுமான ப்ருக்ருதிதேவியினிடத்தில் காணப்படுகின்றன

(1) अभ्रातेव पुंस एति प्रतीची गर्ता रुगिव सनये धनानां । जायेव पत्य उशती सुवासा उषाहस्र वनिरिणीते अप्सः

ரிக்வேதம் அக்நியிலிருந்தும், யஜுர்வேதம் வாயுவினிடமிருந்தும், ஸாமவேதம் ஆதித்யனிடமிருந்தும் உண்டாயின என்றிவை முதலிய வாக்யங்களால் கர்மாதீனமான சரீரத்தையுடைய அக்நி முதலிய ஜீவர்களிடமிருந்து வேதங்கள் உண்டாயின என்று ஏற்படுகிறது. ஆகையால் வேதத்திற்குச் சரியான லக்ஷணம் சொல்லமுடியாது.

அது போலவே இதர ப்ரமாணத்தால் வேதத்தை அறிய முடியாது. குடம் வஸ்திரம் முதலிய வஸ்துக்களை, அவைகளைக் காட்டிலும் வேறான வெளிச்சம் முதலியவற்றாலேயே அறிகிறோம். ஒருவஸ்து தன்னைக்குறித்துத்தானே ப்ரமாணம் ஆகாது ஒருவன் தன்னுடைய தோளின்மேல் தானே ஏறி உட்காரமுடியுமா? முடியாது. அதுபோல வேதம் தன்னைக் குறித்துத் தானே ப்ரமாணம் ஆகாது. அதற்கு வேறு ப்ரமாணமுமில்லை. ஆதலால் வேதம் என்பதற்கு லக்ஷணமும் ப்ரமாணமும் இல்லாததால் வேதம் என்பதே கிடையாது - என்று

இதற்கு ஸமாதானம்.

மந்த்ர ப்ராஹ்மண ரூபமாயிருப்பது வேதம் என்று லக்ஷணம் சொல்லலில் யாதொரு தோஷமும் வருவதில்லை. ஆபஸ்தம்பரும்

**मन्त्रब्राह्मणयोर्वेद नामधेयं ।** (மந்த்ர ப்ராஹ்மணங்களுக்கு வேதம் என்று பெயர்) என்னும் ஸூத்ரத்தினால் வேதஸ்வரூபத்தைத் தெரிவித்தார்.

வேதம் என்னும் பதார்த்தம் உண்டென்பதற்குச் சுருதி ஸ்ம்ருதி லோக ப்ரஸித்தி இவைகள் ப்ரமாணங்கள். சுருதி மூலமாய ஸ்ம்ருதியும் அவ்விரண்டு மூலமாய லோகப்ரஸித்தியும் ப்ரமாணங்கள் அவைகளில் சுருதி ஸ்வயமாய்த் தானே ப்ரமாணம். ஸூர்யன் சந்திரன் முதலியவைகள் மற்ற வஸ்துக்களையும் தங்களையும் எவ்விதம் காட்டிக்கொடுக்கின்றனவோ, அவ்விதம் சுருதியும் தன்னைக்காட்டிலும் வேறான வஸ்துக்களைப் பிரகாசிப்பித்துக்கொண்டு தன்னையும் பிரகாசிப்பிக்கின்றது. ச்ருதிக்குத் தடங்கலற்ற சக்தியுண்டு. அது நடந்தது, நடக்கப்போகிறது, தூரத்திலிருப்பது, பக்கத்திலிருப்பது முதலிய வெகு அர்த்தங்களைப் போதிக்கும். ஆகையால் சுருதி ஸ்வத:ப்ரமாணம். இவ்விதம் லக்ஷண ப்ரமாண ஸித்தமான வேதத்தை ஆக்ஷேபிக்க முடியாததலால் வேதம் என்கிற பதார்த்தம் உண்டு என்று சொல்லத் தட்டில்லை.

மந்த்ரங்களின் மேல் ஆக்ஷேபம்.

லக்ஷண ப்ரமாணங்களால் வேதம் என்கிற வஸ்து ஒன்று இருப்பதாக ஏற்பட்டாலும் அது மற்ற விஷயங்களைப்பற்றி ப்ரமாணமல்ல. ஏனெனில் "நல்ல அறிவுக்கு ஸாதனம், அல்லது அறியப்படாத அர்த்தத்தை அறிவிப்பது ப்ரமாணம்" என்று ப்ரமாணத்திற்கு லக்ஷணம் சொல்வதுண்டு. அவ்வித லக்ஷணம் மந்த்ர ப்ராஹ்மணங்களில் இல்லை.

(1) **सृण्येव जर्भरी तुर्फरी** முதலிய மந்த்ரங்கள் யாதொரு அர்த்தத்தையும் அறிவிப்பதில்லையே ?

(2) **अध स्विदासीत् उपरिस्विदासीत्** என்னும் மந்த்ரத்திற்கு கீழேயுள்ளதா அல்லது மேலேயுள்ளதா என்று அர்த்தம். இந்த மந்த்ரத்தால் ஸந்தேஹம் உண்டாகிறதே யல்லாமல் நிச்சய ஜ்ஞானம் ஏற்படுகிறதில்லையே ?

(3) **एको रुद्रो न द्वितीयायतस्थे**(ஒரே ருத்ரன இரணடாவதிலலே.) **सहस्राणि सहस्रशो ये रुद्राः अधिभूम्याँ** (இநதப பூமியில அநேகமாயி ரம ருதராகள இருககிறாகள) எனறு இமமநதரஙகள பரஸபர விரோதமான அாத்தஙகளாயிருககினறனவே ?

(4) சில மநதரஙகள அஸமபவமான அாததஙகளைச சொலலு கினறன. உதாஹரணம-**चत्वारि शृंगाः त्रयोस्य पादाः द्वे शीर्षे सप्त हस्ता सोस्य त्रिधाबद्धः वृषभोरोरवीति महोदेवमर्त्यांगं आविवेश** (நானகு கொமபுகளும மூனறு காலகளும இரண்டு தலைகளும ஏழு கைகளும உள்ள ஒரு எருது மூனறாகப பிரிககபபடடு சபதிககினறது. அது மனிதர்களைப பிரவேசிததது) எனறு இவவிதமான எருது லோகததில இலலையே ?

(5) **ओषधे त्रायस्वैनं** (ஓஷதியே இவரை ரக்ஷிககவேண்டும.) **शृणोतु ग्रावाणः** (கறகளே கேளுஙகள),

எனறிவை முதலிய மநதரஙகளில அசேதனமான வஸதுக களைபராாததிததல சொலலபபடுகினறதே ?

இவை யெலலாம எபபடி பரமாணமாககககூடும? என்று ஆக்ஷேபம உணடாகினறது.

ஸமாதானம்.

(1) **जर्भरीतुर्फरीतु** முதலிய மநதரஙகளின அா்ததம பாயா லோசனை செயயாதவாகளுககுத தெரியாததுதான. இததகைய மநதரஙகளின அாததம யாஸக மஹா்ஷியால செயயபபடட நிருக்த மெனனும வேதாஙகணடுவைக கொணடும வயாகரண சாஸ்தரத தைககொணடும அறியததககது. இமமநதரம ஆஶ்விநிக ஸூக ததில உளளது, அஶ்விநீ தேவதைகளைச சொலலுகிறது. ஜாசசரீ எனபது தவிவசனமாக (இருமையாக) இருககிறது. ஜாசசரீ எனறால பரணம செயகிறவாகள **भर्तारावित्यर्थ** துாபபரீ எனறால கொலலுகிறவர்கள் **हन्तारावित्यर्थः** ஆகையால இமமநதரம பரமாண மாககுறையிலலை. இதை ஜைமினீ **सतःपरमविज्ञानं** எனகிற ஸூத ரததில சொனனா். **विद्यमानोऽप्यर्थः प्रमादालस्यादिभि· नोपलभ्यते निगम**

**निरुक्तव्याकरणवशेन धातुत अर्थतः कल्पयितव्यः** (இருக்கும் அர்த்தமே புத்தி மாறுபட்டதாலாவது சோம்பலினாலாவது புலப்படுகிற தில்லை, வேதத்தின் நிருக்தம் வ்யாகரணம் இவற்றின் உதவியி னால் வினைப்பகுதியிலிருந்து அர்த்தம் கற்பிக்கப்படவேண்டும்) என்று சபரஸ்வாமி இதற்கு வ்யாக்யானம் பண்ணினார்.

(2) கீழேயுள்ளதா அல்லது மேலேயுள்ளதா என்னும் மந்த்ரம் ஸந்தேஹத்தை உண்டுபண்ண ப்ரவ்ருத்திக்கவில்லை, ஜகத் காரணமான வஸ்துவின் மிகுந்த காம்பீர்யத்தை நிச்சயிப்பதற் காக ப்ரவ்ருத்தித்தது அங்கு இங்கு எனும்படி யெங்கும் பிர காசமாய் விளங்கும் பரவஸ்துவை அளவிடமுடியாதென்பதைக் காட்டி அதன் மஹிமையைப் போதிக்க வந்ததால் இம்மந்த்ரம் ஸம்சய ஹேதுவாகாது

(3) ருத்ரன் ஒருவனே இருந்தாலும் தன்னுடைய ஐச்வர்ய யோகப்ரபாவத்தால் அநேகமாயிரம் சரீரங்களை ஸ்வீகரிக்கக்கூடும். **आत्मनो वै शरीराणि बहूनि भरतर्षभ। योगीकुर्याद्बलं प्राप्य तैश्च सर्वैं महीं चरेत् ॥ प्राप्नुयात विषयान् कैश्चित् उग्रं तपश्चरेत्। संक्षिपेच्च पुनस्तानि सूर्यो रश्मिगणानिव ॥** (ஓ! பரதஸ்ரேஷ்டனே ஒரு யோகியானவன் தன் யோக மஹிமையினால் அநேக சரீரங்களை ஸ்வீகரித்துக்கொள் வான். அந்த சரீரங்களால் லோகமெங்கும் ஸஞ்சரிப்பான். சில சரீரங்களால் விஷயங்களை அனுபவிப்பான், மற்றவைகளால் உக்ரமான தபஸ்ஸைச் செய்வான். அவைகள் யாவற்றையும், சூர்யன் தனக்குள் தன் கிரணங்களை அடக்கிக்கொள்வதுபோல் ஒடுக்கிக்கொள்வான்) என்று மஹாபாரதத்தில் சொல்லப் பட்டிருப்பதுபோல் ஸர்வஜ்ஞன் ருத்ரன் அநேக சரீரங்களை ஸ்வீகரிக்கமுடியுமாதலால் இந்த மந்த்ரங்களும் ப்ரமாணங்களே யாம்.

(4) '**चत्वारि शृंगाः**' எனும் மந்த்ரத்தால் பரமாத்மா வ்ருஷப ரூபமாய் ரூபகப்படுத்திச் சொல்லப்பட்டிருக்கிறது அதாவது நான்கு கொம்புகள் என்பதினால் நான்கு வேதங்களையும் மூன்று

பாதங்கள் என்பதால் நித்ய முக்த பத்தர்களென்கிற மூன்றுவித சேதனர்களையும், இரண்டு தலைகள் என்பதினால் ப்ரக்ருதி சுத்த ஸத்வம் என்கிற உபயவிபூதிகளையும், ஏழு கைகள் என்பதினால் மஹத் முதலிய ப்ரக்ருதியின் விக்ருதிகளையும் உடையவனாயும், மூன்றாய்ப் பிரிக்கப்பட்டு என்பதினால் ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்தர்கள் என்கிற மூன்று வ்யூஹங்களாக வகுக்கப்பட்டவருமான வ்ருஷப: ச்ரேஷ்டமான வாஸுதேவன் சப்திக்கிறான்—அதாவது நாமரூபங்களையுடையதாய்ச் செய்கிறான். மஹோ தேவ:-தேவர்களுக்கெல்லாம் தேவனான வாஸுதேவன் சேதனாசேதனரூபங்களான பதார்த்தங்கள் யாவற்றிலும் அந்தராத்மாவாய் ப்ரவேசித்தான்" என்று அர்த்தம். இங்கு யாகம் வ்ருஷபரூபமாய் வர்ணிக்கப்பட்டிருப்பதென்பது குமாரிலபட்டருடைய அர்த்தம். ஆகையால் இம்மந்த்ரம் அஸம்பவமான அர்த்தத்தைச் சொல்லவில்லை.

(5) 'யாகத்தில் உபயோகப்படும் அசேதனமான ஓஷதியும் ரக்ஷிக்குமானால் அந்த யாகம் மனிதர்களை ரக்ஷிக்கும் என்பதற்குக் கேட்பானேன்? அப்படியே பாராதானுவாகங்களைக் கற்கள் கேட்கின்றனவென்றால் வித்வான்களான ப்ராஹ்மணர்களும் கேட்கவேண்டுமென்பதைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமா'? என்று அர்த்தமாதலால் இத்தகைய மந்திரங்களும் ப்ரமாணமாகக் குறையில்லை.

ப்ராம்மணங்கள்மேல் ஆக்ஷேபங்கள்.

ப்ராம்மணம், விதி என்றும் அர்த்தவாதம் என்றும், இருவகையென்று சொல்லப்பட்டது. அவைகளில்

விதிவிஷயமான ஆக்ஷேபம்.

(1) '**उदितो जुहोति**' (ஸூர்யோதயத்திற்குப் பிறகு ஹோமம் செய்யவேண்டும்), '**अनुदितो जुहोति**' (ஸூர்யோதயத்திற்கு முன் ஹோமம் செய்யவேண்டும்),

(2) '**सदेव सोम्येदमग्रमासीत्**' (இது முதலில் ஸத்தாகவே இருந்தது) '**असदेवेदमग्रमासीत्**' (இது முதலில் அஸத்தாயிருந்தது) என்று

இருந்தது இல்லாமலிருந்தது என்றிவை முதலிய பரஸ்பர விரோதமான வாக்யங்கள் காணப்படுகின்றன.

(3) தவிர 'श्येनेनाभिचरन् यजेत' (சத்ரு ஸம்ஹாரம் செய்வதற்காக ச்யேந யாகத்தைச் செய்) என்கிற விதியானது ஒருவனைக் கொல்லும்படியாகக் கெட்டகார்யத்தில் ஏவுகின்றதே!

(4) மேலும் 'ஜ்யோதிஷ்டோமாதி யாகம் செய்தால் ஸ்வர்க்கம் கிடைக்குமாதலால் அவைகளைச் செய்' என்று விதிக்கின்ற வாக்யங்களை நம்பி நாம் இஷ்டி யாகங்களைச் செய்தவுடன் நமக்கு ஸ்வர்க்கம் கிடைப்பதில்லையே. பசியடங்க வல்லவோ போஜனம் செய்கிறோம். போஜனம் செய்தபிறகும் பசியடங்காமற் போவதுண்டா? யாகம் செய்தவுடன் ஸ்வர்க்கம் கிடைக்காதேனும்! இவையெல்லாம் ப்ரமாணமாவதெப்படி?'

ஸமாதானம்.

(1) 'உதயத்துக்குமுன் ஹோமம் செய்', 'உதயத்திற்குப் பின் ஹோமம் செய்' என்கிற வாக்யங்கள் விகல்பங்களானதால் விரோதமில்லை, ஒரு வாக்கியம் மற்றொன்றைப் பாதிக்காது.

(2) 'இதுஸத்தாக இருந்தது' என்கிற வாக்யத்தில் 'அஸத்' என்னும் சப்தத்திற்கு 'துச்சம்' (ஒன்றுமேயில்லை என்பது) அர்த்தமில்லை அஸத் என்பதற்குச் சூன்யம் அர்த்தமென்றால் 'சூன்யம் இருந்தது' என்றதாயிற்று, அதாவது 'ஒன்றுமில்லை இருந்தது' என்று ஸ்வவசன விரோதமாகிறது ஒன்றுமில்லாதது இருக்கமுடியாது ஆகையால் அஸத் என்றால் சூன்யம் என்று அர்த்தமில்லை ஆனால் பூர்வகாலத்தில் அதாவது ப்ரளய காலத்தில் இந்தக் கார்யரூபமான ஜகத்தானது வேறு நாமத்தோடு கூடியிருந்தது, அதாவது வேறொரு அவயவ அமைப்போடு கூடியிருந்தது என்று அர்த்தம். த்ரவ்யத்திற்கு ஸத்வம் (இருப்பு) அஸத்வம் (இல்லாமை) என்று இரண்டு நாமங்களுண்டு ஸத்வ நாமத்தைக் காட்டிலும் அஸத்வம் என்கிற நாமம் வேறானது. இது என்று சொல்லப்பட்ட ஜகத்துக்கு ஸத்வ நாமமாவது நாம ரூபங்கள். அஸத்வ நாமமாவது அதற்கு விரோத

மான ஸூக்ஷ்மாவஸ்தை. ஆகையால் நாமரூபத்தோடு கூடிய ஜகத்துக்கு அதற்கு விரோதமான ஸூக்ஷ்ம தசையை அடைவது தான் அஸத்வம் என்று ஏற்படுகிறது. ‘ஸத் ஒன்றேதான் இருந்தது’ என்பதற்கு ஸூக்ஷ்ம சித்சித்விசிஷ்டமாய், ஸத் என்றும் ஆத்மா என்றும், நாராயணன் என்றும், சொல்லப்பட்ட பரப்ரஹ்மமானது இருந்தது, என்று அர்த்தமாதலால் யாதொரு விரோதமுமில்லை.

(3) ஶ்யேந யாகத்தை விதித்தது எதற்கென்றால்—அத்ருஷ்டமான ஸ்வர்க்க மோக்ஷங்கள், அவற்றுக்கு ஸாதந விஷயங்கள் முதலியவற்றில் நம்பிக்கையில்லாதவர்களுக்கு அவைகளில் நம்பிக்கையுண்டாவதற்காக, த்ருஷ்ட பல விஷயங்களில் மனுஷ்யன் புத்திக்கு எட்டாத சில ஸாதனங்களைச் சொன்னால் அதை அனுஷ்டிப்பதில் பலம் கண்டால், அந்த அம்சத்தில் அவர்களுக்கு நம்பிக்கை ஏற்பட்டு அது மூலமாய் அத்ருஷ்ட விஷயங்களிலும் நம்பிக்கை பிறக்குமாதலால், ஶ்யேந யாகம் முதலிய ஆபிசார ப்ரயோகங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன.

(4) ஸ்வர்க்கம் அடைவதற்குச் சொன்ன பசி போஜந த்ருஷ்டாந்தம் அநுசிதம். யாகம் செய்து முடிந்த அடுத்த க்ஷணத்தில் ஸ்வர்க்கம் கிடைக்குமென்று ச்ருதி சொல்லவில்லை. இந்த யாக கர்மாவினால் ஆராதிக்கப்பட்ட யஜ்ஞபுருஷனான பகவான், கர்த்தாவின் சரீரம் அழிந்த பின் அந்த ஜீவனுக்கு ஸ்வர்க்கத்தைக் கொடுக்கின்றான் என்பதில் யாதொரு விரோதமுமில்லை.

ஆததவாதங்களின் விஷயமான ஆக்ஷேபம்.

(1) “तस्मात् धूमएवाग्ने दिवाददृशे नार्चिः
तस्मादर्चिरेवाग्नेः नक्तं ददृशे न धूमः”

(பகலில் அக்னியின் ஜ்வாலை காணப்படவில்லை, புகைமட்டும் தான் காணப்படுகிறது ராத்ரியில் புகை காணப்படுகிறதில்லை ஜ்வாலைமட்டிலும் காணப்படுகிறது) என்றிவை முதலியவை ப்ரத்யக்ஷ விரோதமான வாக்யங்கள்.

(2) மேலும் சூர்யோதயத்துக்கு முந்தி ஹோமம் செய்ய வேண்டியதென்றும், ஸூர்யோதயத்திற்குப் பிறகு ஹோமம் செய்யவேண்டியதென்றும் விகல்பமாக ஹோமத்தைவிதித்தபிறகு, '**प्रातः प्रातरनृतं ते वदन्ति पुरोदयाज्जुह्वनियेग्निहोत्रं**' என்கிற வாக்யங்கள் சூர்யோதயத்திற்குமுன் அக்நி ஹோத்ர ஹோமம் செய்வதைப் பலவாறு நிந்திக்கின்றன. அப்படியே **यदुदिते सूर्ये प्रातर्जुहुयाद्यथाति-थ्ये** என்கிற வாக்யமும் சூர்யோதயத்திற்குப் பின்பு செய்யும் ஹோமத்தையும் அவ்வாறே நிந்திக்கின்றது. ஓரிடத்தில் செய்ய வேண்டியதென்று சொன்னதையே செய்யக்கூடாதென்று நிந்தித்தால் அந்த வாக்யங்கள் ப்ரமாணமாகுமா?

ஸமாதானம்.

(1) '**अग्निर्ज्योतिः ज्योतिरग्निः स्वाहा**' என்று சொல்லி ஸாயங்காலத்திலும் '**सूर्येज्योतिः ज्योति सूर्यःस्वाहा**' என்று சொல்லிக் காலையிலும், ஹோமம் செய்யவேண்டியது என்கிற இந்த இரண்டு விதிகளை ஸ்தோத்ரம் செய்வதற்காக 'இரவில் புகை காணப்படவில்லை ஜ்வாலைதான் காணப்படுகிறது; பகலில் ஜ்வாலை காணப்படவில்லை, புகைதான் காணப்படுகிறது' என்கிற இரண்டு அர்த்தவாத வாக்யங்கள் புறப்பட்டன. பகலில் அக்நி ஜ்வாலை அதிக தூரத்தில் நன்றாய்த் தெரியாததலால் காலையில் ஸூர்ய மந்த்ரத்தையே சொல்லவேண்டும்; இரவில் ஸூர்யன் அக்நியில் ப்ரவேசிப்பதால் அக்நி ஜ்வாலையானது அதிக தூரத்தில் காணப்படுகிறது. ஆகையால் அக்நிமந்த்ரத்தை இரவில் ப்ரயோகம் செய்ய வேண்டியது, என்று மேற்படி விதிகளை ஸ்தோத்ரம் செய்வதில் அர்த்தவாதங்களுக்குத் தாத்பர்யமாதலால் யாதொரு விரோதமுமில்லை.

(2) ஸூர்யோதயத்துக்குப்பின் செய்யும் ஹோமத்தையும் முன் செய்யும் ஹோமத்தையும் முறையே நிந்திப்பதாய்த் தோன்றும் வாக்யங்கள் அவைகளை நிந்திக்கப் ப்ரவ்ருத்திக்கவில்லை. ஆனால் மற்றொன்றை ஸ்துதிக்க ஏற்பட்டன, லோகத்தில் ஒரு

மனுஷ்யனைப் பார்த்து 'இவன் தான் மனுஷ்யன், மற்றவர்கள் பசுக்கள்' என்று சொன்னால் அவ்வாக்யம் மற்றவர்கள் மிருகங்கள் என்று சொல்லி அவர்களை நிந்திக்காமல் இவ்விதம் ப்ரஸ்தாப மனுஷ்யனை ஸ்தோத்ரம் செய்வதாக ஆகிறதோ: 'நான் எல்லா வேதங்களையும் எல்லா வித்தைகளையும் அத்யயனம் செய்தும் கேவலம் மந்த்ரத்தை மட்டும் அறிந்தவனாகிறேனே தவிர ஆத்மாவை அறியவில்லை' என்கிற நாரதருடைய வாக்யமானது இதர வேத பாகத்தை நிந்திக்கக் கருதாமல் அங்கு சொல்லப்படும் பூமவித்யையை மட்டும் ப்ரசம்ஸிப்பதற்கு எவ்வாறு புறப்பட்டதோ; 'ஸாங்கமான வேதாத்யயனம் செய்தும் நிஷ்டையடையாமல் சாண்டில்யர் பாஞ்சராத்ரத்தை அத்யயனம் செய்தார்' என்கிற வாக்யமானது வேதத்தை நிந்திக்க ப்ரவ்ருத்திக்காமல் கேவலம் பாஞ்சராத்ரத்தை ஸ்தோத்ரம் செய்யப் புறப்பட்டதோ, அவ்விதமே அந்தந்த ஹோமத்தை ச்லாகிப்பதற்காக கீழ்க்கூறிய அர்த்தவாத வாக்யங்கள் புறப்பட்டன. இதை 'நஹி நிந்தா ந்யாயம்' என்று சொல்லுவார்கள். இந்த ந்யாயத்தைக் கவனிக்காமல் ஸ்ரீசங்கராசார்யர் ப்ரம்ஹ ஸூத்ரத்தில் உத்பத்யஸம்பவாதிகரணத்தில் '**विप्रतिषेधाच्च**' என்கிற ஸூத்ர வ்யாக்யாநாவஸரத்தில் 'நான்கு வேதங்களிலும் நிஷ்டையடையாமல் சாண்டில்யர் இந்தப் பாஞ்சராத்ர சாஸ்த்ரத்தை அத்யயனம் செய்தார் என்று வேதத்தை நிந்திப்பதால் இந்தக் கற்பனை அஸங்கதம்' என்று எழுதியிருக்கிறார். ஆகையால் இந்த ந்யாயத்தைக் கவனித்து நிந்தை தோன்றும் இடங்களில் ஸமாதானம் செய்து கொள்ளவேண்டும். ஆதலால் யாதொரு விரோதமும் இல்லை.

இதனால் மந்த்ர ப்ராம்மண ரூபமான வேத பாகங்கள் யாவையும் ப்ரமாணம் என்று ஸித்தித்தது.

### 'த்ரயீ' என்றால் மூன்று வேதமா ? நான்கு வேதமா ?

இவ்விதம் ப்ரமாணங்களாக நிரூபிக்கப்பட்ட மந்த்ர ப்ராஹ்மணரூபங்களான வேதங்கள் நான்காயிருக்க 'த்ரயீ' என்று

வேதங்களுக்கு எப்படிப் பெயர் வந்தது என்றால்—'த்ரயீ' என்று சொல்வதற்குக் காரணம் வேதமந்த்ரங்களில் மூன்றுவிதமான ரசனைகள் இருப்பதுபற்றியென்றே சொல்லவேண்டும். அதாவது பத்யம் (செய்யுள்) என்று ஓர் ரசனையுள்ளது; அதைத்தான் 'ரிக்' என்று சொல்லுகிறோம். 'கத்யம்' (வசனநடை) என்று ஓர் ரசனை அதைத்தான் 'யஜுஸ்' என்று சொல்வது. 'கானம்' (பாட்டு) என்று ஓர் ரசனை அதை 'ஸாம' என்று சொல்வது. கத்ய பத்யகானங்களைத் தவிர வேறு ரசனாப்ரகாரமானது ரிக்ஸம்ஹிதையிலாவது யஜுஸ்ஸம்ஹிதையிலாவது ஸாமஸம்ஹிதையிலாவது அதர்வஸம்ஹிதையிலாவது இல்லை. இதை ஜைமினீ '**तेषां ऋक् यत्रार्थवशेन पादव्यवस्था गीतिषु सामाख्याशेषे यजुश्शब्दः**' என்று சொன்னார்.

அதர்வணம் வேதமா? அல்லவா?

இவ்விடத்தில் சிலர் ஆக்ஷேபிப்பதாவது —

'த்ரயீ' என்றால் மூன்று வேதங்கள் என்றுதான் அர்த்தம். அதாவது முன்காலத்தில் ரிக், யஜுஸ், ஸாம, என்று மூன்றே வேதங்கள் இருந்தன. அதர்வண வேதம் முதலில் இல்லை. அதனாலன்றோ வேதங்களுக்கு த்ரயீ என்று பெயர்வந்தது ஆகையால் மிகவும் பழைய க்ரந்தங்களில் த்ரயீ என்ற பெயர் வேதங்களுக்கு வழங்கிவந்தது '**अग्ने ऋचः वायो यजूंषि सामान्यादित्यात्**' (அக்நியிலிருந்து ரிக்வேதமும் வாயுவிலிருந்து யஜுர்வேதமும் ஆதித்யனிடமிருந்து ஸாமவேதமும் உண்டாயின) '**स एतां विद्यां त्रयीमभ्यतपत्**' என்று சாந்தோக்ய ப்ராம்மணத்திலும்,

**अग्निवायुरविभ्यस्तु त्रयंब्रह्म सनातनम् ।**
**दुदोहयज्ञसिद्ध्यर्थं ऋग्यजुस्सामलक्षणम् ॥**

(ரிக் யஜுஸ் ஸாம என்கிற புராதனமான வேதங்களை முறையே அக்நி வாயு ஸூர்யன் இவர்களிடமிருந்து கறந்தார்) என்று மநுஸம்ஹிதையிலும், ஆகிய இது முதலிய பழைய க்ரந்தங்களில் த்ரயீ என்ற பெயர் வேதத்திற்கு வழங்கிவந்தது. ஆனால் சாந்தோக்யாதிகளுக்குப் பிறகு ஏற்பட்ட நவீந க்ரந்தங்களிலோ

வென்றால் வேதங்கள் நான்கு என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஏனெனில் அப்போது அதர்வ வேதம் உத்பத்தியாய்விட்டது. உதாஹரணமாய 'अरे अस्य महतो भूतस्य ऋग्वेदः यजुर्वेदस्सामवेदः अथर्वा गिरसः' என்று ப்ருஹதாரண்யகத்திலும் 'एकतश्चतुरोवेदान् भारतं चैतदेकतः । पुराकिलसुरैस्सर्वैः समेत्य तुलयाधृतम् ॥ चतुर्भ्यस्सरहस्येभ्यः वेदेभ्योह्यधिकं यथा । तदा प्रभृति लोकेऽस्मिन् महाभारतमुच्यते ॥' (முன்பு ஒரு காலத்தில் தேவர்களனைவரும் சேர்ந்து நான்கு வேதங்களை ஒரு தராசுத் தட்டிலும் பாரதத்தை மற்றொரு தட்டிலும் வைத்து நிறுத்துப் பார்த்ததில் ரஹஸ்யங்களோடு கூடிய நான்கு வேதங்களைக்காட்டிலும் பாரதம் அதிகமாயிருந்ததால் அதற்கு மஹாபாரதம் என்று பெயர் வந்தது) என்றும்,

योविद्याच्चतुरोवेदान् साङ्गोपनिषदो द्विज ।
नचाख्यानमिदं विद्यान्नैवसस्याद्विचक्षण ॥

(அங்கங்களோடும் உபநிஷத்தோடும் கூடியதாயிருக்கும் நான்கு வேதங்களை அறிந்தும் இந்த மஹாபாரதத்தை எவன் அறியவில்லையோ அவன் தெளியக்கற்றவன் அல்லன்) என்று பாரதத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆகையால் த்ரயீ என்னும் சப்தத்தினால் ரிக் யஜுஸ் ஸாமங்களைத்தான் சொல்லவேண்டும். அதர்வ வேதம் பிற்பாடு ஏற்பட்டதால் அது உபசாரமாக வேதம் என்று சொல்லப்படுவதேயல்லாமல் வாஸ்தவத்தில் அது வேதத்தில் சேரவில்லை என்று.

இந்த வாதம் அஸமஞ்ஜஸமாயும் நிர்மூலமாயுமிருக்கிறது. த்ரயீ என்கிற பெயரே 'வேதங்கள் மூன்றுதான் இருந்தன' என்று சொல்வதற்குக் காரணமாகாது. ஏனெனில் கீழ்க்கூறியபடி மூன்று வித ரசனைகளோடு கூடியதால் த்ரயீ என்ற பெயர் வழங்கிவந்தது என்கிற காரணம் எப்போதும் ஸித்தமாயிருக்கிறது. ஆகையால் நான்கு வேதங்களையும் த்ரயீ என்று சொல்லத்தட்டில்லை. ஆனது பற்றியே ஸாமவேதத்தில் ரிக்குக்களுடையவும் யஜுஸ்ஸுக்களுடையவும் பாடங்கள் காணப்படு

கின்றன. அவ்விதமே யஜுஸ்ஸுக்களிலும் ரிக்குக்களின் பாடங்கள் காணப்படுகின்றன. இதை ஸர்வாநுக்ரமணீ வ்ருத்தியில் ‘विनियोक्तव्यरूपश्च त्रिविधस्संप्रदर्श्यते । ऋग्यजुस्सामरूपेण मन्त्रोवेदचतुष्टये । ऋक्पादबद्धागीतं तु सामगद्यं यजुर्मन्त्र । चतुर्ष्वपि वेदेषु त्रिधैव विनियुज्यते ॥’ என்று சொல்லுகிறார். மேலும் சாந்தோக்யம் முதலிய ப்ராசீன க்ரந்தங்களில் மட்டுமே த்ரயீ என்கிற வ்யவஹாரம். அவைகளுக்குப் பிறகு உண்டான ப்ருஹதாரண்யகாதிகளில் அப்படியில்லை என்று சொன்னதும் சரியல்ல. ஏனென்றால் —சாந்தோக்யத்திலேயே ‘ऋग्वेदं विजानाति यजुर्वेदं सामवेदमाथर्वणं चतुर्थम्’ என்றும், மனுஸ்ம்ருதியில் ‘अभिचारेषु’ ‘कृत्यासु’ என்றும், சதபத ப்ராஹ்மணத்தில் ‘त्रयोवेदा अजायन्त’ என்றும், மஹாபாரதத்தில் ‘अग्निहोत्रं त्रयीविद्या’ ‘कच्चिद्धर्मे त्रयी मूले’ ‘नसामऋग्यजुर्वर्णा’ என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் எந்த க்ரந்தத்தில் வேதங்கள் நான்கு என்று சொல்லப்பட்டிருக்கிறதோ அவ்விடத்திலேயே த்ரயீ என்றும், எங்கே த்ரயீ என்று காணப்படுகிறதோ அங்கே வேதங்கள் நான்கு என்றும் சொல்லியிருப்பதால் பூர்வ பக்ஷியின் வாதம் ஸரியல்ல. ஆனதுபற்றி வாஸ்தவத்தில் ஒன்றாயிருக்கும் வேதமானது மூன்றுவித ரசனையுடையதாயிருப்பதால் த்ரயீ என்று ப்ரஸித்தியடைந்து கொண்டு, ரிக்ஸம்ஹிதை, யஜுஸ்ஸம்ஹிதை, ஸாமஸம்ஹிதை, அதர்வஸம்ஹிதை, என்கிற நான்கு ஸம்ஹிதைகளால் நான்கு என்று சொல்லப்படுகிறது.

### சுருதி நித்யமும் அபௌருஷேயமுமானது.

இவ்விதம் ப்ரமாணங்களாக நிரூபிக்கப்பட்ட த்ரயீ என்கிற நான்கு வேதங்களும் நித்யஸித்தங்களாய அபௌருஷேயங்களாயிருக்கின்றன. ஏனென்றால் சப்தத்திற்கும் (பதத்துக்கும்) அர்த்தத்திற்கும் சம்பந்தம் ஸ்வபாவத்தில் ஏற்பட்டது. அக்நி, ஜலம் முதலியவைகளுக்கு சூடு, குளிர்ச்சி முதலிய சக்திகளின் ஸம்பந்தம் எப்படி ஸ்வபாவமோ, கண் முதலிய இந்திரியங்களுக்கு

ஜ்ஞான விசேஷத்தை உண்டாக்கும் சக்தியானது எப்படி ஸ்வபா வமோ, அப்படியே சப்தத்திற்கும் அர்த்தத்தைப் போதிக்கும் சக்தி ஸ்வபாவத்தில் ஏற்பட்டது. சப்தத்தை உச்சரித்த மாத்தி ரத்தினால் அதின் அர்த்தம் அறியப்படுகிறது. அர்த்தத்தை விட்டுத் தனியாக சப்தம் நிற்காது. சப்தத்திற்கு ஆதாரம் ஆகாசம். சப்தத்திற்கு ஸூக்ஷ்ம ஸ்திதியென்றும் ஸ்தூலஸ்திதி யென்றும் ஆக இரண்டு நிலைகளுண்டு. உலகத்திலுள்ள எல்லா வஸ்துக்களுக்கும் ஸ்தூல ஸூக்ஷ்ம நிலைகளுண்டு. அவ்வாறே சப்தமும் இரண்டு அவஸ்தையோடு கூடியது. ஸ்தூலாவஸ்தை யாவது நாம் காதால் கேட்கும்போது அபிவ்யக்தமாயிருக்கும் (வெளிப்படும்) அவஸ்தை. நாம் பேசும்போது இல்லாத சப்தத்தைப் புதிதாய் உண்டாக்குவதில்லை. ஏற்கனவே இருக்கும் சப்தத்தை வெளியாக்குகிறோம். அப்படி நாம் வெளியாக்குவதற்கு முன் சப்தமானது ஸூக்ஷ்மரூபமாய் ஆகாசத்திலிருக்கிறது. வெயிற் காலத்தில் மிகவும் ஸூக்ஷ்மமாயிருக்கும் வாயுவை, விசிறி முத லிய கருவியை அசைப்பதால் ஸ்தூலமாக்குவது போல, ஆகாசத் தில் ஸூக்ஷ்மமாயிருக்கும் சப்தத்தை நாம் நமது வாக்கு இந்திரிய மாகிய கருவியால் அபிவ்யக்தமாக்குகிறோம். நவீன யந்திரமான (Phonograph) போனோகிராப் கருவியால், சப்தத்திற்கு ஸூக்ஷ் மாவஸ்தை உண்டென்பது நன்கு விளங்கும். மேல் நாட்டவர் கள் புதியதாய்க் கண்டுபிடித்ததாகச் சொல்லி வரும் ஒவ்வொரு விஷயங்களும் நமது பூர்விகர்கள் வேதத்திலிருந்து சொல்லியிருக் கும் விஷயங்களை த்ருடமாய் ஸ்தாபிக்கின்றன வென்பதற்கு இந்த சப்தானுகரண யந்த்ரம் நமக்கு ஓர் திருஷ்டாந்தம். இந் தப் போனோகிராப் யந்திரத்தின் உருளையில் ஸூக்ஷ்ம ரூபமாய் அடங்கியிருக்கும் நாதமே, உருளை சுற்றிவரும்போது நமது காதுக்குக் கேட்கும்படியான ஸ்தூலநிலைமையடைகிறது. அதா வது ஆகாசத்தில் ஸூக்ஷ்மமாயிருக்கும் நாதத்தை இந்தக் கருவி யானது வாகிந்திரியஸ்தானத்திலிருந்துகொண்டு வ்யக்தமாக்கு கிறது. ஆகையால் லோகத்திலுண்டாகும் வ்யக்தமான சப்தங் களெல்லாம் உச்சாரணம் செய்து ஓய்ந்த பிறகு ஆகாசத்திலேயே ஸூக்ஷ்மமாய் ஒடுங்கியிருக்கின்றன. இப்படி நாம் ஆராய்ச்சி

செய்தால் நமது காதுக்குப் புலப்படாததாக ஸூக்ஷ்ம ஸ்திதியில்
கோடிக் கணக்காய் சப்தங்கள் ஆகாசத்திலிருக்கின்றன வென்று
ஏற்படுகிறது. அக்ஷர ரூபமான சப்தங்கள், அக்ஷரங்களின்
முன் பின் க்ரமத்தை அனுஸரித்து ஸூக்ஷ்மரூபமாகப் பதிந்
திருக்கின்றன. அதனால் சப்தத்தின் அக்ஷர க்ரமப்படியே இருக்
கின்றன. ஆனால் அந்த சப்தங்களை யாவரும் கேட்பதற்கு
நமக்குச் சக்தியில்லை. சக்தியில்லாத காரணத்தினாலேயே அந்த
சப்தங்கள் ஒன்றுமில்லையென்றும், ஆகாசம் சூன்யமாயிருக்கிற
தென்றும் சொல்லக்கூடாது. சக்தி விசேஷத்தாலும், அப்யாஸ
பாடவத்தாலும் அந்த ஸூக்ஷ்மமான சப்தங்களை ஸ்தூல சப்தங்
களைப் போல் திவ்ய யோக சக்தியடைந்த மஹர்ஷிகள் க்ரஹித்
திருக்கிறார்கள். அநேகமாயிரம் தூரத்திற்கப்பால் மற்றவர்கள்
பேசிக்கொண்ட ஸம்பாஷணைகளை யோக ப்ரபாவத்தால் அறிந்து
சொல்லியிருக்கிறார்கள். அதாவது ஸர்வ வியாபியான ஆகாசத்
தில் ஸூக்ஷ்மமாயிருந்ததையே அறிந்து சொல்லியிருக்கிறார்கள்.
இவ்விதம் ஏகாக்ர சித்தர்களாக்க காதுக்கும் ஆகாசத்துக்கு
முள்ள ஸம்பந்தத்திலேயே புத்தியை நாட்டி அப்படியே ஆவ்
ருத்தி செய்து அப்யாஸ மஹிமையினால் பெறும் சக்தியை திவ்ய
ச்ரோத்ரம் என்பார்கள். இதைத்தான் பதஞ்சலி மஹர்ஷியான
வர், 'श्रोत्राकाशयोःसंबन्धसंयमाद्दिव्यंश्रोत्रं' என்று யோகஸூத்ரத்
தில் கூறியிருக்கிறார். இத்தகைய திவ்ய யோக ப்ரபாவத்தால்
மஹர்ஷிகள் அநாதியான வேதங்களை அபிவ்யக்தமாக்கியிருக்
கிறார்கள். இதையே ஸ்ரீ வேதவ்யாஸரும், 'युगांते अन्तर्हितान्
वेदान् सेतिहासान् महर्षयः । लेभिरे तपसा पूर्वमनुज्ञाताः स्वयंभुवा' (முன்பு
யுகாந்தத்தில் ஸூக்ஷ்மமாய்ப் பதிந்திருந்த வேதங்களை ப்ரஹ்மா
வின் அநுமதியால் மஹர்ஷிகள் தபோமஹிமையினால் கண்டுபிடித்
தார்கள்) என்று சொன்னார். ஸ்ரீ பாஷ்யகாரரும் வேதார்த்த ஸங்
க்ரஹத்தில், 'वेदानामनन्तत्वात् दुरवगाहत्वाच्च परमपुरुषनियुक्ताः परमर्ष-
यः कल्पे कल्पे निखिलजगदुपकारार्थं वेदार्थं स्मृत्वा स्मृत्वा विध्यर्थवादमन्त्रमूलानि
धर्मशास्त्राणि इतिहास पुराणानि च चक्रुः' (வேதங்கள் அநந்தங்களான
தாலும் எளிதில் அறியமுடியாததாலும் ஸமஸ்த ஜகத்துக்கும்
உபகாரார்த்தமாய்ப் பரமபுருஷனால் ஏவப்பட்ட மஹர்ஷிகள் ஒவ்

வொரு கல்பத்திலும் வேதார்த்தங்களை நினைத்து நினைத்துத் தர்ம சாஸ்திரங்களையும் இதிஹாஸ புராணங்களையும் செய்தார்கள்) என்று அருளிச்செய்தார்.

ப்ரளயகாலத்தில் சப்தத்திற்கு ஆதாரமான ஆகாசமும் தனது காரணமாகிய ப்ரக்ருதியில் லயித்திருக்கும்போது, இன்னும் அதிக ஸூக்ஷ்மமாயுள்ள வேதமானது இன்னும் அதிக ஸூக்ஷ்மமான காரணாவஸ்தையையடைந்து ப்ரக்ருதியில் சேவ்ஸம லீனமாய (அடங்கி) இருந்தபடியால், அந்தக் காலத்தில் பரம ஸூக்ஷ்மாவஸ்தையைப் பெற்ற வேதத்தை மற்றவர்கள் காணமுடியாது. ஜகத் காரணனும் புருஷோத்தமனுமான ஸ்ரீமந் நாராயணன் ப்ராக்ருத ப்ரளயத்தின் முடிவில் அதற்கு முன்னிருந்த ஜகத்தின் அமைப்பை ஸ்மரித்து, **बहुस्यां** (பலவாக ஆகக்கடவேன்) என்று ஸங்கல்பித்துத் தன்னிடத்தில் ஸூக்ஷ்மாவஸ்தாவிசேஷமாய் லயித்திருக்கும் (அசேதனங்கள் சேதனங்கள்) யாவற்றையும் பிரித்து, மஹத் தத்வம் தொடக்கமான பரமாண்டத்தை ஹிரண்யகர்ப்பன் வரையில் முன்போலவே ஸ்ருஷ்டித்து, பூர்வபூர்வமான ஆநுபூர்வி விசேஷத்துடன் (வரிசைக்ரமத்துடன்) முன்பின் கிரமத்துடனிருக்கும் வேதங்களை வெளியாக்கி ஹிரண்யகர்ப்பனுக்கு உபதேசம் பண்ணி, முன்போலவே தேவாதி ஆகாரங்களோடு கூடிய ஜகத்தின் ஸ்ருஷ்டியில் அவரை நியமித்துத் தானும் அவருக்கு அந்தராத்மாவாக இருந்தார். இதைத்தான் **'योब्रह्माणं विदधाति पूर्वं योवै वेदांश्च प्रहिणोति तस्मै'** **'अस्यमहतोभूतस्य निश्वसितमेतत् ऋग्वेदो यजुर्वेद स्सामवेदोथर्वांगिरसः'** என்கிற ச்ருதிகளும் ஸ்ம்ருதி வசனங்களும் சொல்லுகின்றன.

இப்படி ஸ்ரீமந் நாராயணனிடமிருந்து உபதேசம்பெற்ற ப்ரஹ்மா, அவரால் ஏவப்பட்டு லோகங்களையும் ப்ரஜைகளையும் மற்ற எல்லா வஸ்துக்களையும் வேதசப்தங்களைக்கொண்டே ஸ்ருஷ்டித்தார். **'वेदेनरूपे व्याकरोत्सतासती प्रजापति'** (ப்ரஜாபதியானவர் ஸத் அஸத் ரூபங்களை வேத சப்தங்களைக் கொண்டு நாநாவிதங்களாகச் செய்தார்) **'सभूरिति व्याहरत् सभूमिमसृजत; सभुवइति व्याहरत् सोन्तरिक्षमसृजत'** (அவர் பூ: என்று சொல்லிப் பூமியை

ஸ்ருஷ்டித்தார், புவ: என்று சொல்லி அந்தரிக்ஷத்தை ஸ்ருஷ்டித்தார்) **'एत इति वै प्रजापति. देवानसृजत, असृग्रमिति मनुष्यान्, इन्दवइति पितॄन्, तिर पवित्रमिति ग्रहान् आशव इति स्तोत्रं विश्वानिति शस्त्रं, अभि सौभगेत्यन्याः प्रजा'** (ஏதே என்பதினால் இந்திரன் முதலியவர்களின் ஆக்ருதிகளை ஸ்மரித்து அவர்களையும், அஸ்ருக்ரம் என்னும் பதத்தைக்கொண்டு மனுஷ்யர்களையும், இந்தவ என்னும் பதத்தைக் கொண்டு பித்ருக்களையும், திரப்பவித்ரம் என்பதைக் கொண்டு க்ரஹங்களையும் ஆசு சப்தத்தைக்கொண்டு கீதி ரூபங்களான ஸ்தோத்ரங்களையும், விச்வ சப்தத்தைக்கொண்டு சஸ்த்ரங்களையும் அபிஸௌபக என்னும் சப்தத்தினால் மற்ற ஸௌபாக்யங்களையுடைய ப்ரஜைகளையும் ஸ்ருஷ்டித்தார்). **'समनसावाचं मिथुनं समभवत्'** (அவர் வேதத்தால் ப்ரகாசிக்கப்பட்ட ஸ்ருஷ்டியை மனதால் நினைத்தார்) என்கிற ச்ருதி வாக்யங்களாலும், **'अनादि निधनाह्येषा वागु'त्सृष्टास्वयंभुवा । आदौ वेदमयीदिव्यायतस्सर्वाः प्रसूतयः ॥ सर्वेषां तु सनामानि कर्माणि च पृथक्पृथक् । वेदशब्देभ्य एवादौ पृथक् संस्थाश्च निर्ममे॥ नामरूप च भूतानां कृत्यानां च प्रपंचन । वेदशब्देभ्य एवादौ देवादीनां चकार सः'** என்றிவை முதலிய மனு பராசராதி வசனங்களாலும், வேத சப்தங்களைக் கொண்டே ஜகத் ஸ்ருஷ்டிக்கப்பட்டதென்று ஏற்படுகிறது. லௌகிக சப்தங்கள் யாவற்றும் வேதராசியிலிருந்து ஏற்பட்டு அந்தந்த அர்த்தத்தைப் போதிக்கும்படியாய் முன்போலவே ப்ரயோகிக்கப்பட்டுப் பரம்பரையாக வழங்கிவருகின்றன. ஆனால் எல்லா சப்தங்களும் வைதிக சப்தங்களாமாயின் **'छन्दस्येवं भाषायामेवं'** (வேதத்தில் இந்த சப்த ஸ்வரூபம் இவ்விதம், லௌகிக பாஷையில் இவ்விதம்) என்று தனித்தனியாக லக்ஷணம் சொல்லப்பட்டிருப்பது எதனால் என்றால்? அந்த வைதிக சப்தங்களுக்கே ச்ருதியிலிருக்கும் முன்பின் க்ரமத்தில் ஆனுபூர்வியிலிருப்பவைகளுக்கு வைதிக சப்த லக்ஷணம் என்றும், இல்லாவிடில் லௌகிக சப்த லக்ஷணம் என்றும் தாத்பர்யம்.

ஆகையால் ப்ரளயகாலத்தில் ஸூக்ஷ்ம ரூபமாய்ப் பரமாத்மாவினிடத்தில் வேதமானது இருக்கிறது, பிறகு முன் கல்பத்திலிருந்தபடியே அபிவ்யக்தமாகிறது என்று ஏற்பட்டது. ஒவ்வொரு கல்பத்திலும் இந்த மாதிரியாக இருந்தது. ஒவ்வொரு

கல்பாரம்பத்திலும் அதற்கு முன்னிருந்த அக்ஷர க்ரமத்தோடு ஸூக்ஷ்மரூபமாயிருந்த வேதத்தைப் பகவான் உபதேசத்தால் அபிவ்யக்தமாக்குகிறார். ஆகையால் வேதத்திற்கு ஆதியில்லையென்று ஸித்தமாயிற்று. இம்மேல் வரப்போகிற பாகங்களிலும் ஸூக்ஷ்மரூபத்தையடைந்து பிறப்பட்ட ஸ்தூல ரூபத்தையடையப் போவதால் அந்தமுமில்லையென்பதாயிற்று. ஆகையாலன்றோ ஆதியந்தமில்லாத ஸர்வேச்வரனைப் போல் நித்யமென்று சொல்வது அநாதி ஸந்ததி நித்யமேயல்லாமல் அநித்யமல்ல. ஒருவராலும் உண்டாக்கப்படாததால் அபௌருஷேயமென்றதாயிற்று.

## வேதம் அபௌருஷேயம்.

கீழ்க்கூறிய ப்ரமாணங்களால் வேதம் அநாதி நித்யமென்பது ஸித்தித்தாலும், சில பண்டைப்பார்த்து 'வேதம் மனிதனால் ஏற்பட்டதல்ல என்பதை ஸ்வதந்த்ரமாகவே நீங்கள் நிரூபப்படுத்துங்கள்' என்று கேட்கிறார்கள். இப்படிக் கேட்பது சரியல்ல, நாகரிகமுள்ள எந்த ராஜாங்கத்திலும், ந்யாயஸ்தலங்களிலும் இம்மாதிரியான வாதம் செல்லாது. 'நான் யாதொரு குற்றமும் செய்யவில்லை, யாதொரு கடனும் வாங்கவில்லை" என்று ஒருவன் சொன்னால், அவன் குற்றம் செய்ததாயும், கடன் வாங்கியதாயும் யார் நிரூபிக்கவேண்டியது? குற்றம் சாட்டுகிறவனும் கடன் கொடுத்ததாகச் சொல்லுகிறவனுமல்லவோ நிரூபிக்கவேண்டும்? அப்படிக்கில்லாமல் "நீ குற்றம் செய்யவில்லையென்றும் கடன் வாங்கவில்லையென்றும் நீதான் நிரூபிக்கவேண்டும்" என்று சொல்லக்கூடாது. அது போல வேதம் மனிதரால் உண்டாக்கப்பட்டது என்று சொல்லுகிறவர்கள், எக்காலத்தில் எந்த மனிதரால் உண்டாக்கப்பட்டதென்பதை நிரூபிக்கவேண்டிய பாரத்தை ஏற்றுக்கொள்ளவேண்டியவர்கள். அப்படி அவர்கள் நிரூபிக்காமற்போனால் வேதத்தின் அபௌருஷேயத்வம் த்ருடமாயிற்று. இதுவரையில் ஒருவரும் வேதபௌருஷேயத்வத்தை நிரூபிக்கவில்லை.

## வேதம் பௌருஷேயம் என்னும் வாதம்.

வேதம் மனிதரால் ஏற்படுத்தப்பட்டதென்று வேதவாக்யங்

களைக்கொண்டே ஸாதிக்க முடியும்.

(1) சில வேதமந்திரங்களுக்கு ரிஷி - சந்தஸ - தேவதை இவைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. 'इमं मेवरुण' என்கிற யஜுர் மந்த்ரத்திற்கு சுநச்சேபர் ரிஷி என்றும், இதுபோல மற்ற ஒவ்வொரு மந்திரங்களுக்கும் ரிஷியின் பெயர் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் அந்தந்த மந்திரங்கள் அந்தந்த ரிஷிகளால் செய்யப்பட்டிருக்கவேண்டும்

(2) காடகம், காடகம், தைத்திரீயம், என்று வேதபாகங்களின் பெயர்கள் வழங்கப்பட்டுவருகின்றன. (கடரால் சொல்லப்பட்டது காடகமென்றும், தித்திரியால் சொல்லப்பட்டது) தைத்திரீயமென்றும். 'तेन प्रोक्तं' என்கிற பாணினி ஸூத்ரத்தால் தத்திதந என்னும் உருபின் ஆக்கம் ஏற்படுகிறது தித்திரியால் சொல்லப்பட்டதை அத்யயனம் செய்கின்றவரோ அல்லது அறிகின்றவர்களோ தைத்திரீயர்கள் என்று சொல்லப்படுகிறார்கள் அதுபோல காடகம், தைத்திரீயம், கௌதுமம் முதலிய ஸகல வேதபாகங்களும், 'व्यासेन प्रोक्तं वैयासिकं' (வ்யாஸரால் சொல்லப்பட்டது, வ்யாஸபுத்ரரால் சொல்லப்பட்டது) என்பதுபோல அந்தந்த மனிதர்களால் செய்யப்பட்டன. காளிதாஸன் முதலியவர்களால் செய்யப்பட்ட வாக்யங்கள் போல அவைகளும் வாக்கியங்களானதால் அவைகள் புருஷநிர்மிதங்கள்.

(3) மேலும் ஸ்ருதியில் கண்டோக்தமாய் (மறைபொருளின்றி நேராய்) 'मन्त्रकृतो वृणीते' (மந்திரஞ்செய்தவர்களை வரிக்கிறான்) 'नमऋषिभ्यो मन्त्रकृद्भ्यः' (மந்திரங்களைச்செய்த ரிஷிகளுக்கு நமஸ்காரம்) 'अयं सोऽग्निरिति विश्वामित्रस्य सूक्तं भवति' (இது விச்வாமித்ரருடைய ஸூக்தம்) என்றிவை முதலிய வாக்யங்களால் ரிஷிகள் மந்த்ரங்களைச் செய்தவர்களென்றும், காண்டங்களைச் செய்தவர்களென்றும் ஸூக்தங்களைச் செய்தவர்கள் என்றும் வ்யக்தமாய்த் தெரிவதால் அவைகளெல்லாம் மனிதர்களால் செய்யப்பட்டன என்று,

## வேத பௌருஷேயத்வ வாத கண்டனம்.

(1) ஒவ்வொரு மந்த்ரத்தின் அனுஷ்டானகாலத்தில் அந

தந்த ரிஷிகளின் பெயரைச் சொல்லுகிறோமென்பதின்றேயே அந்த மந்திரங்களைப் புதிதாய்ச் செய்தார்கள் என்கிற அர்த்தம் ஏற்படாது. அந்த மந்திரங்களை அவர்கள் முறை தவறாமல் அப்யாஸம் செய்து ஸித்திபெற்றார்கள் என்றேற்பட்டதே தாத்பர்ய மாதலால் அவர்கள் அவைகளைப் புதிதாய்ச் செய்தவர்களல்ல. ஆனால் அவர்களின் பெயர்களைச் சொல்லுவது, அந்தந்த மந்த்ரங்களுக்கு மிகுந்த ப்ரபாவம் இருக்கிறதென்றும் அந்தந்த மந்த்ர ஸித்தியைப்பெற்று அவரவர்கள் மஹிமையையடைந்தார்களானதால் அந்தப் படியே பிறரும் மந்த்ரத்தை அப்யஸித்துப் பெருமையையடையவேண்டுமென்ற எண்ணத்துடனும் அவர்களின் நாமத்தைச் சொல்லும்படி விதிக்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீமத்ராமாயணம் முதலியவற்றில் ப்ரஸித்தரான சுநச்சேபர், ஒரு ராஜா செய்த யாகத்தில் நரபசுவாக அகப்பட்டுக்கொண்டு விச்வாமித்ரர் உபதேசித்த மந்த்ரத்தால் வருணனை உபாஸித்து அதனால் தனக்கு வந்திருந்த ஆபத்தினின்றும் விடுபட்டார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. தவிர, ரிஷி ஜ்ஞானபூர்வகமாக மந்த்ராநுஷ்டானம் செய்யவேண்டுமென்றும் அப்படிச் செய்யாவிடில் தோஷம் உண்டு என்றும் ச்ருதியே சொல்லுகிறது. 'यो ह वा अविदितार्षेयच्छन्दो दैवतेन मन्त्रेण यजति याजयति वा अध्यापयति व स्थाणुं वर्छति गर्तं वापद्यते प्रवामीयते पापीयान् भवति यातयामान्यस्य छन्दांसि भवन्ति । अथ यो मन्त्रे मन्त्रे वेद, स सर्वमायुरेति श्रेयांश्च भवति अयातयामान्यस्य छन्दांसि भवन्ति तस्मादेतानि मन्त्रे विद्यात्'। (மந்திரங்களின் ரிஷி சந்தஸ் தேவதை இவைகளை யறியாமல் ஒருவன் தான் யாகம் செய்தாலும், பிறருக்குச் செய்வித்தாலும், பிறருக்கு அத்யயனம் செய்வித்தாலும், அவன் ஸ்தாணுவாக (கட்டையாக) ஆகிறான். அல்லது படுகுழியில் விழுகிறான் நாசத்தையடைகிறான் மஹாபாபியாகிறான். அவன் செய்த அத்யயனம் பயனற்றதாக யாதயாமமாகிறதல்லவோ. ஆனால் எவனொருவன் ஒவ்வொரு மந்த்ரத்திலும் அவைகளை அறிந்து செய்கிறானோ அவன் தீர்க்காயுளைப் பெருமை பெற்று, அத்யயனத்தின் பயனைப்பெறுகிறான் ஆகையால் மந்த்ரங்களின் ரிஷி சந்தஸ் தேவதைகளை அறிந்து அநுஷ்டானம் செய்யவேண்டும்) என்று சொல்லப்பட

இருக்கிறது.

(2) மேலும் ‘**तेन प्रोक्तं**’ என்பதற்கு அவர்களால் புதிதாய் உண்டாக்கப்பட்டது என்று அர்த்தமல்ல. ஆனால் ப்ர—உக்த என்று சிஷ்யர்களின் புத்தியில் நன்றாய்ப் பதியும்படியாக உபதேசித்து ப்ரவசனஞ்செய்யப்பட்டது என்றே அர்த்தமாதலால் விரோதமில்லை. காளிதாஸன் முதலியவர்களின் க்ரந்தங்களின் அந்தந்த பாகத்தின் முடிவில் கிரந்தகர்த்தாக்களின் பெயர்கள் காணப்படுகின்றன அதுபோலவே வேதமும் புருஷநிர்மிதமாயிருக்கும் பக்ஷத்தில் கர்த்தாவின் பெயர் காணப்படவேண்டாமா? அப்படிக் காணப்படுகிறதில்லையே? ஆகையாலும் வேதம் மனுஷ்ய நிர்மிதமல்லவென்று ஏற்படுகிறது.

(3) மந்த்ரக்ருத்துக்கள், ஸூக்தக் கர்த்தாக்கள், (மந்த்ரஞ் செய்தவர்கள், ஸூக்தஞ் செய்தவர்கள்) என்று ரிஷிகளைப் பற்றிச் சொல்லியிருப்பதற்குத் தாத்பர்யம் அறியப்படவேண்டும். அந்த ரிஷிகளுக்கு மந்த்ரக்ருத்வமாவது வேதாத்யயனம் செய்யாமலே க்ரமம், ஸ்வரம், வர்ணம் முதலியவைகளில் தவறுதலில்லாமல் மந்த்ரங்களை அறிவது என்பதுதான். உண்மை என்னவென்றால்— ப்ரஜாபதியானவர் பகவானால் ஏவப்பட்டு ‘**मन्त्रकृतो वृणीते**’ முதலிய வேத சப்தங்களைக் கொண்டே அந்தந்த மந்த்ரம் ஸூக்தம் இவைகளைப் பார்த்த முன்னிருந்த ரிஷிகளுடைய ஆக்ருதிகள் சக்திகள் இவைகளைப் பராமர்சித்து அந்தந்த வ்யக்திகளை அந்தந்த சக்தியுடையவர்களாக ஸ்ருஷ்டித்து, ஸ்ருஷ்டிக்கப்பட்ட ரிஷிகளை அந்தந்த மந்த்ரங்களைப் பார்ப்பதற்கு அநுகுணமான தபஸ்ஸுக்களைச் செய்யுங்களென்று ஏவினார். இவ்விதம் ப்ரஜாபதியால் தத்தந்மந்த்ர ஸ்ம்ருதி பூர்வகமாய் ஸ்ருஷ்டிக்கப்பட்டு அந்தந்த நாம ரூபங்களை யடைந்து ப்ரவாஹ பரம்பரையாக வந்திருக்கும் கடர், வஸிஷ்டர் முதலிய ரிஷிகள், ப்ரஜாபதியால் கொடுக்கப்பட்ட சக்தியையுடையவர்களாய்த் தபஸ்ஸைச் செய்து, நித்ய ஸித்தங்களாயும், பூர்வ பூர்வ வஸிஷ்டாதிகளால் பார்க்கப்பட்டவைகளுமான மந்த்ரம் முதலியவைகளைப் பூர்வகல்பத்தில் அத்யயனம் பண்ணப்பட்ட வேதமந்த்ர ஜ்ஞாநத்தை முன்னிட்டு,

அத்யயனம் செய்யாமலே அவரவர் புத்திகளால் தவறுதலின்றித் தரிசிக்கின்றார்கள். அப்படிப் பார்த்தவர்கள் மந்த்ரத்ரஷ்டா முதலியவர்களென்று சொல்லப்பட்டிருக்கிறது.

காடகம் முதலிய சப்தங்களுக்கும் கல்பாதியில் ரிஷிகள் தபஸினால் அடைந்த வேதபாகங்களைப் பிரவர்த்திப்பித்ததால் அப்பெயர்கள் வந்தனவென்று சொல்லவேண்டும். வேறுவிதமாகச் சொல்ல முடியாது. கடரால் முதலில் சொல்லப்பட்டதென்பது சரியல்ல. வேதபௌருஷேயத்வம் சொல்லுகிறவனும் அப்படியே சொல்லுகிறான். தவிர, சவரனால் சொல்லப்பட்டதென்பதற்கு விரோதம் வருகிறது. அல்லது கடாதிகள் பரவசனஞ் செய்ததால் காடகம் முதலிய பெயர்கள் வந்தனவென்றாலும் சரியல்ல. ஏனென்றால் இந்தக் காலத்தில் பரவசனம் செய்கிறவர்களின் பெயர்களும் அந்த வேதபாகங்களுக்கு வரக்கூடும். தவிர கடா முதலியவர்களுக்கு முன்பு பரவசனம் செய்தவர்களின் பெயர்களும் வந்திருக்கவேண்டும். ஆனால் அவ்விதம் வரவில்லை. கடருக்கு முன்னிருந்தவர்கள் அநேக சாகாத்யயனம் செய்தவர்கள். கடாதிகள் ஒரே சாகையைமட்டும் அத்யயனம் செய்தார்கள். ஆதலால் ஏகசாகாத்யயனம் செய்த கடாதிகள் பெயர் மட்டிலும் வழங்கிவருகிறது என்றும் சொல்ல முடியாது. ஏனெனில் கடாதிகளுக்கு முன்னிருந்தவர்கள் அநேக சாகாத்யயனம் செய்தார்களென்று நிர்ணயமாய்ச் சொல்வதற்குப் பிரமாணமில்லை. த்ருஷ்டத்திற்கு விரோதமாய்க் கற்பிப்பது அனுசிதம். அல்லது கல்பாதியில் கடா முதலியவர்கள் முதலில் பரவசனம் செய்தார்கள் என்கிற காரணத்தால் அந்தப் பெயர் வழங்கி வருகிறதென்றும் சொல்ல முடியாது. ஏனென்றால் அந்தக்காரணம் ஜகந்நித்யம் என்னும் பக்ஷத்திற்கு விரோதமானது. ஆதியான பரவசனம் என்பதே கிடையாது. ஆகையால் காடகம் முதலிய வேதபாகங்களின் பெயர் வந்ததற்குக் காரணம் வேறு சரியானபடி சொல்ல முடியாததால் கீழ்க்கூறியபடி கடா முதலிய மஹாரிஷிகள் தங்கள் தபஸால், நித்யஸித்தமான வேதபாகங்களை யறிந்தார்கள் என்கிற காரணத்தாலேயே காடகம் முதலிய பெயர்கள் வழங்கிவருகின்றன என்று சொல்லவேண்டும். எனவே ரிஷிகள்

மந்த்ரம் செய்தவர்கள் என்றும் வேதங்கள் நித்யங்கள் என்றும் சொல்வதில் யாதொரு விரோதமுமில்லையாதலால் வேதம் புருஷ நிர்மிதமல்ல.

மேலும் த்ருஷ்டமான சில பலங்களைப்பற்றியே அதற்கு ஸாதனமான உபாயங்கள் மனிதன் புத்திக்கு எட்டுவதில்லை. நினைத்தபோது மழையை வரவழைப்பதற்கு உபாயத்தை மனிதன் தன்னுடைய புத்திபலத்தால் மனதால்கூட நினைக்க முடியுமா? **'कारीर्या वृष्टिकामो यजेत'** (மழை வேண்டுவோன் காரீரி யாகம் செய்யவேண்டும்) என்பதை மனுஷ்ய புத்தியால் எப்படிக் கண்டு பிடிக்க முடியும்? விதிப்படி காரீரி யாகம் செய்தால் மழை நிச்சயமாய் வருவதென்பதைக் கண்டிருக்கிறார்கள். அதைப் பரம நாஸ்திகனும் மறுக்க முடியாது. த்ருஷ்டமான பல விஷயத்திலும் மனிதனால் சிந்திக்கமுடியாத ஸாதனத்தை வேதம் சொல்லுகிறது. அவ்விதமே அத்ருஷ்டமான ஸ்வர்க்கம் மோக்ஷம் இவைகளின் ஸ்வரூபங்களையும் அவைகளை யடைய உபாயங்களையும் வேதம் ப்ரதிபாதிக்கின்றது. வேதம் மனிதனால் செய்யப்பட்டதென்கிற பக்ஷத்தில் அதைச் செய்தவர் ஸ்வர்க்க மோக்ஷஸ்வரூபங்களையும் அவற்றின் ஸாதனங்களையும் எப்படி அறிந்தார்? ஒரு மனிதனால் அறியமுடியாததும் அடைய முடியாததுமான பலத்தையும் அதின் உபாயத்தையும் மற்றவர்களுக்கு உபதேசித்தான் என்றும், அதை மற்றவர்கள் நம்பி நடந்தார்கள் என்றும் சொல்வது மிகவும் பரிஹஸிக்கத்தக்கது. ஒரு பிறவிக்குருடன் வெளிச்சத்தின் ஸ்வரூபத்தையும் அதை யடைய உபாயத்தையும் உபதேசித்தான் என்று சொல்லும் வாக்யம்போல் இதுவும் வ்யவசன விரோதமாயும் அஸம்பாவ்யமாயு மிருக்கிறது.

அல்லது, பித்தன் பிதற்றுவதுபோல், அஸங்கதமாய் யாரோ ஒருவன் வேதத்தை எழுதிவைத்தான் என்று சொன்னால் அதுவும் சரியல்ல, ஏனென்றால் வேதங்களில் சொல்லியிருக்கும் விஷயங்களைப் பார்த்தால் அந்த வாதம் ஒரு க்ஷணமும் நிற்காது.

ஒவ்வொரு பல விஷயத்திலும் ஸாதய ஸாதக இதி கர்த்தவ்யதா (செய்யப்படவேண்டியது, செயபவன், அங்கம்) ரூபமாய அங்கோ பாங்கங்களோடு கூடிய மிகவும் அத்புதமான அநேக காரிய கலா பஙகளும், அவ்ற்றின் பலஙகளுமு, வாககு மனதுகளுக்குக் கோசரமல்லாத பரபரஹ்ம ஸ்வரூபாதிகளும், ஜகத ஸ்ருஷ்டி முதலியவைகளும், மயிர்க்கூச்சலுண்டாககுமபடியான அழகிய ஸ்தோத்ர வர்ணஙகளும் அதி விசித்ரமாகச் சொல்லப்படடிருக் கின்றன. வெகு ப்ரயாஸத்துடனேயே ஸாதிககததக்கதாயும், அநேக புருஷர்களாலே அனுஷ்டிக்கபபடவேணடியதாயும் ஒவ் வொரு சிறு விஷயங்களிலும் மந்த்ர தந்த்ர ஸ்வர வர்ணுதி விவ ரஙகளோடும் கூடிய ஜ்யோதிஷ்டோமம் என்றும் ஸோமமென்றும் இனனும் பலவிதங்களான யாகஙகள முதலியவற்றை ஒருபைத்தி யககாரன் விதித்தான என்றும், அதைப புத்திமான்கள் அநேகர் வெகுகாலமாய அந்த (குருட்டு) பரம்பரையாய அனுஷ்டித்துக் கொண்டு நெருப்பில நெயயைக் கொட்டித் தங்களுடைய சக்தி திரவ்யம் காலம் முதலியவைகளை வ்யர்த்தமாக்கினார்களென்றும் சொலவதை உன்மத்தன் தவிர வேறு எவன் நமபுவான் ?

அல்லது ஒரு புத்திமானுன மனிதன் மற்றவாகளை வஞ்சிப் பதற்காக இவ்விதம எழுதி வைததானெனறுமு, அதை நம்பிப் பின வந்தவாகள ஏமாந்து அனுஷ்டித்து வருகிறார்களென் றும சொல்லத்தகாது. ஏனெனறால முன்சொன்னபடி எவவளவு புத்திமானுக இருந்தாலும் அதருஷ்ட விஷயஙகளைப்பற்றி ஒரு மனிதன சொலலமுடியாது. அந்தப புருஷன் பிறரை வஞ்சிக்கக் காரணமுமு சொல்லமுடியாது. தவிர 'सत्यं वद' 'धर्मं चर' 'नहिंस्यात्सर्वे भूतानि' (உண்மை பேசு, தாமம செய, எந்த பராணியையும் ஹிமஸிக்காதே) எனபது முதலிய ஸாமாநய தர்மவிதி வாக்யங் களைப் பார்ததால ஸகல லோகததினுடைய நனமைக்காகவே ஸர்வ வேதங்களும் புறப்படடனவெனறு ஏற்படுமே தவிர, ஜனங்களை வஞ்சிககப புறப்படடனவென்று ஏற்படாது. காரீரி முதலிய வைகளால ஸாதயமான த்ருஷ்டமான மழை முதலியவற்றால்

அத்ருஷ்டமான ஸ்வர்க்க மோக்ஷாதிகளும் அவற்றின் ஸாதநங்களும் உண்மையென்றே சொல்லவேண்டுமாதலால், ஆயிரம் தாய் தந்தையர்களைக் காட்டிலும் அதிகவத்ஸலையான ச்ருதியானது உண்மையை உள்ளபடி உரைப்பதாய் ஸம்ஸ்த ஜகத்துக்கும் ஹிதத்தையே போதித்துக்கொண்டு அநாதி ஸித்தமாயும் அபௌருஷேயமாயுமிருக்கிறதென்பதில் யாதொரு ஸம்சயமுமில்லை.

இப்படி ஸர்வவித்யாஸ்தானங்களுக்கும் மூலபூதமாயும், ஸத்யமாயும், நித்யமாயும், உள்ளபடி உண்மையுரைக்குமதாயிருக்கும் வேதமானது ஸர்வப்ரகாரத்திலும் ஸர்வவிஷயங்களிலும் ப்ரமாணம் என்பதையும், நமது பூர்விகர்கள் அநாதிகாலமாக க்ரந்தமூலமாயும், அநுஷ்டான மூலமாயும், உபதேச மூலமாயும் தெரிவித்து, ஸத்யவிஷயங்களில் ப்ராமாண்யசங்கை மற்றவர்களுக்கு நேர்ந்தகாலத்தில் வேதத்தில் சொல்லப்பட்ட தப்தாயஃ பரசுபாயமாக (உலையில் காய்ச்சப்பட்ட இரும்பையும் கோடாலியையும் கையில் தரித்து) பந்தயங்களை நிர்வஹித்து ஸத்யத்தை நிலைநாட்டியிருக்கிறார்களென்பது பூர்விகர்களின் சரித்ரங்களால் தெரியவருகிறது. ச்ருதியைக் காட்டிலும், மேலான ப்ரமாணம் ஒன்றுமில்லையென்றும், அதனால் ப்ரதிபாதிக்கப்படும் கேசவனைக்காட்டிலும் பரதத்வமில்லையென்றும் ஸத்யம் பண்ணும் தீர்மானத்தோடுகூட இரண்டு கைகளையும் உயரத்தூக்கிக்கொண்டு அநேக வித்வான்களின் கூட்டத்தில் சபதஞ்செய்து 'सत्यं सत्यं पुनस्सत्य मुद्धृत्यभुजमुच्यते। वेदशास्त्रात्परं' என்று வஸிஷ்ட புலஸ்த்ய வரப்ரஸாதத்தால் பரதேவதா பாரமார்த்ய ஜ்ஞானம் பெற்ற பராசர குமாரரும் பஞ்சமவேத கர்த்தாவுமான ஸ்ரீவேதவ்யாஸ பகவான் சொன்னார்.

आम्नानाभाववन्तोऽपुरुषमतिकृताः सृष्टिहेतुश्च नित्याः
चत्वारस्संहिताभिः त्रिविधरचनया लब्धसंज्ञास्त्रयीति ।
वेदामन्त्रादिरूपा अनघगुणगणास्स्युः प्रमाणं स्वतस्ते
सत्यं सत्यं च सत्यं पुनरिति कथयन् डिंडिमस्ताड्यतां न. ॥

(ஆதியந்தமில்லாதவைகளாயும், புருஷபுத்தியினுல் செய்யப்பட்டதல்லவாயும், ஜகத்ஸ்ருஷ்டிக்குக் காரணமாயும், நித்யங்களாயும், நான்கு ஸம்ஹிதைகளுடனும் மூன்றுவித ரசனைகளுடனும் கூடியவையாயும், த்ரயீ என்று பெயர்பெற்றவையாயும், மந்த்ரம் ப்ராம்மணம் என்னும் ரூபங்களையுடையவையாயும், தோஷலேசமுமற்ற உயர்ந்த குணங்களையுடையவையாயும், பிறஉதவியின்றியே தாமே ஸ்வயமாகவே ப்ரமாணங்களாயிருக்கும் வேதங்கள், இது ஸத்யம் ஸத்யம், மேலும் ஸத்யம் என்று சொல்லிக்கொண்டே நமது ஜய பேரிகை முழங்கட்டும்).

---

இது வேதாந்த தீபிகையில்
வ்யாஸரூபமாக
வெளியிடப்பட்டது.

ஸ்ரீ:

# ஜீவபரஸம்பந்தம்.

---

ஸ்ரீபாஷ்யகாரர் வேதார்த்தஸங்க்ரஹத்தின் ஆரம்பத்தில், ஜீவாத்மபரமாத்மாவின் யதாவத்தான ஸ்வரூபஸ்வபாவஜ்ஞானத்துடன் வர்ணாச்ரமதர்மங்களை அங்கமாகவுடைய பரமபுருஷசரணயுகள த்யான அர்ச்சன ப்ரணாம ஸங்கீர்த்தனம் முதலிய மானஸ, வாசிக காயிகமான மூன்றுவித உபாஸனத்தை மிகவும் ப்ரீதியுடன் செய்வதற்கு பலம் பரமாத்ம ப்ராப்தியென்று அருளிச் செய்தார். எந்த கர்மம் செய்தாலும் ஜீவபரயாதாத்ம்ய ஜ்ஞானத்துடன், பலத்தில் ஆசையில்லாமல் செய்யவேண்டியதென்று கீதாசார்யன் கீதையில் முறையிடுகிறான். ஆகவே, ஜீவபரஸம்பந்தஜ்ஞானம் மிகவும் அவசியமென்று ஏற்படுகிறது. நம ஆசார்யர்கள் முதல் ரஹஸ்யமான திருமந்திரத்திலுடைய தாத்பர்யமானதும், ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்குமுள்ளதுமான நவவிதஸம்பந்தமும் ஸ்வரூபஜ்ஞானத்துக்கு நித்யம் அனுஸந்தேயமென்று, தாங்கள் அனுஸந்தித்தும் பிறருக்கு உபதேசித்தும் போருவார்கள். **'पिता च रक्षकः शेषी भर्ताज्ञेयो रमापतिः । स्वाम्याधारो ममात्माच भोक्ताचाद्यमनूदितः ॥'** என்று சொல்லப்பட்ட நவவித ஸம்பந்தங்களுள் முதலாவது.

(1) பித்ருபுத்ரஸம்பந்தம்

இதை ஜன்யஜனகஸம்பந்தம் என்றும் சொல்லுகிறது. ஸமஸ்த ஜீவாத்மாக்களுடைய ஸ்வரூபத்திற்கு பரமாத்மா காரணமானது பற்றி இந்த ஸம்பந்தத்தை பித்ருபுத்ரஸம்பந்தமென்றார்கள். **'यतो वा इमानि भूतानि जायन्ते'** — (போக்தாக்களான ஜீவாத்மாக்களும், போக்யவஸ்துக்களான அசேதனபதார்த்தங்களும் பரமாத்மாவினிடத்திலிருந்து உண்டாகின்றன) என்று ச்ருதியானது ஜீவாத்மாக்களுக்கு பரமாத்மா ஸ்ருஷ்டிகர்த்தா என்று சொல்லுகிறது. ஸ்வரூபமாவது - **'व्यवहारार्हत्वं मानसंबन्धार्हत्वं वा'** வ்யவஹாரத்துக்கு லாயக்காயிருப்பது அல்லது ப்ரமாணஸம்பந்தத்திற்கு லாயக்காயிருப்பது. என்று லக்ஷணம் கூறுகின்றனர்.

இவ்வர்த்தத்தை கீதையிலே பகவான் **न तदस्ति विना यत्स्यात् मया भूतं चराचरं** ஸர்வபூதங்களும், நான் அவைகளுக்கு ஆத்மாவாகநிற்காமற்போனால் இருக்கமாட்டா. எல்லா வஸ்துக்களும், எல்லா அவஸ்தைகளிலும் அவைகளுக்கு உயிர்நிலையான என்னோடே கூடியிருக்கின்றன என்று ஜீவஸ்வரூபத்திற்குத்தான் காரணமென்று சொன்னான். ஆழ்வார்களில் தலைவரான நம்மாழ்வாரும், “நாம் அவனிவனுவன் அவளிவளுவளெவள், தாமவரிவருவரதுவிதுவுதுவெது, வீமவையிவையுவை அவை நலம் தீங்கவை ஆமவையாயவை ஆய்நின்ற அவரே’ என்கிற பாட்டில், ஆண், பெண், அலி, சிறந்தபொருள்கள், அழியும்பொருள்கள், விலக்ஷணப்பொருள்கள், அவிலக்ஷணப்பொருள்கள், இறந்தகாலப்பொருள்கள், எதிர்காலப்பொருள்கள் என்று சில வகைகளாலே இந்த லீலாவிபூதியிலுள்ள ஸகலபதார்த்தங்களையும் நிர்தேசித்து, இவற்றின் ஸ்வரூபம் எம்பெருமான் அதீனமென்று அருளிச்செய்தார். இங்கு வீமவை என்று அழியக்கூடியபொருள்களைச் சொன்னது அழியாப்பொருள்களுக்கும் உபலக்ஷணமாகும். ஸ்வரூபேண நித்யங்களான வஸ்துக்களுக்கும் ஸ்வரூபம் பகவதாயத்தமாயிருக்குமென்று பாஷ்யத்திலே சொல்லப்பட்டிருக்கிறது. **नित्यतया शास्त्रावगतस्य वस्तुनः परमपुरुषनित्येच्छत्वा देव तथात्वमस्तीति शास्त्रादवगम्यते** - நித்யமென்று சாஸ்த்ரத்தாலே யறியப்பட்ட வஸ்துவினுடைய நித்யத்வம், பரமபுருஷனுக்கு நித்யேச்சாவிஷயமாகையாலே உண்டாயிற்று என்று அவனுடைய ஸர்வஸத்தாஹேதுத்வத்தைக்காட்டுகிற சாஸ்த்ரத்தாலே யறியப்படுகிறது,—என்று. இப்படியே ஆழ்வானும் ‘**इच्छात एव तव विश्व पदार्थसत्ता नित्यं, प्रियास्तव तु केचन ते हि नित्याः। नित्यं त्वदेकपरतन्त्रनिज-स्वरूपाः भावत्कमंगलगुणा हि निदर्शनं नः**’॥ சேதன அசேதனம் என்கிற எல்லா பதார்த்தங்களுடையவும் உத்பத்தியானது உன்னுடைய ஸங்கல்பத்தினாலே ஏற்படுகிறது. ஆனால் சில பதார்த்தங்கள் உனக்கு நித்யம் ப்ரியமாயிருக்கின்றன. அதாவது நித்யமாக இருக்கவேண்டுமென்று விரும்பப்படுகின்றன. அவைகள்தான் நித்யவஸ்துக்களென்று சொல்லப்படுகின்றன. இதற்கு

தாலே ஸர்வவாசகத்வம் சொல்லப்படுகிறது. அகாரத்துக்கு ஸமஸ்தசப்தமூலத்வம் ஸ்வபாவமானபடியாலும், ப்ரஹ்மத்துக்கு ஸர்வவாச்யமூலத்வம் ஸ்வபாவமானபடியாலும், இரண்டுக்கும் வாச்ய வாசகஸம்பந்தம் அர்த்தஸித்தமாய்த் தோற்றுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையாலேதான் "अकारोवैसर्ववाक्" என்கிற ஸாமானாதிகரண்யச்ருதியானது (co-ordination) காரணத்வத்தைப்பற்றியிருக்கிறது அதாவது 'எல்லா வாக்கும் அகாரம்' என்றால், அகாரம் எல்லா சப்தத்துக்கும் காரணம் என்று பொருளாயிற்று. அது எதுபோல என்றால் 'सर्वंखल्विदं ब्रह्म तज्जलानिति शांत उपासीत' இந்த ஜகத்தெல்லாம் ப்ரஹ்மம், தஜ்ஜமாய் அந்த ப்ரஹ்மத்தில் நின்றும் பிறக்கையாலும், தல்லமாய் அதிலே லயிக்கையாலும், தத்நமாய் அததாலே உயிர்பெற்று ரக்ஷிதமாகையாலும், அதுவாயிற்று என்று சொல்லுமாப்போலே, இங்கு ஸர்வசப்தகாரணம் அகாரமாயிற்று. "அகரமுதலஎழுத்தெல்லாம் ஆதிபகவன் முதற்றே உலகு" என்றார் திருவள்ளுவரும். 'अकारो वै विष्णुः'-'अकारो विष्णुवाचक'-'अक्षराणामकारोस्मि' என்றும் சொல்லியிருப்பதற்குக் காரணம், 'अ इति भगवतो नारायणस्य प्रथमाभिधानं' என்று சொன்னபடி, அகாரமானது பகவானுக்கு முதல் திருநாமம் என்பதைப்பற்றியேயாம். பரதேவதாபாரமார்த்யநிஷ்கர்ஷம் செய்த சுருதி ஸ்ம்ருதி இதிஹாஸபுராணங்களும் ஆழ்வார்களும் அகாரவாச்யமான பரப்ரஹ்மமானது ஸ்ரீமந்நாராயணன்தான் என்று உத்கோஷம் செய்கின்றனர் य पूर्व्याय वेधसे नवीयसे सुमज्जानयेविष्णवेददाशति - பூர்வமானவேதாவாய், இப்படி முன்பே ஸ்ரஷ்டாவாயுமிருக்கச்செய்தே மிகவும் புதியன் என்னும்படி நவீனனாய், ஸுமஜ்ஜாநியாய்—சோபனமான ஞானத்தையுடையவளாயும் சோபனமான ஆனந்தத்தையுடையவளாயுமுள்ள பத்நியையுடையவனாய், அல்லது ஸுமதியாய், சோபனவதியான ஜாயையையுடையவன் என்னுதல், இத்தால் ஞானாநந்தமயியாய், மங்களாவஹையான லக்ஷ்மியை பத்நியாகவுடையவன் என்றும், 'ह्रीश्चतेलक्ष्मीश्चपत्न्यौ' என்றும் சொல்லப்பட்ட ஸர்வேச்வரனுக்கு யாவன் ஒருவன் ஆத்மஸமர்ப்பணத்தைப்பண்ணுகிறானென்று சொல்லுகையாலே, காரணபூதனாயிருப்பவன் சரியபதி

என்றதாயிற்று. அகாரவாச்யனான பகவான் ஸமஸ்த சித்துக்களுக்கும் ஸமஸ்த அசித்துக்களுக்கும் காரணம் என்று சொன்னால், நித்யவஸ்துக்களும் கார்யங்கள் உண்டானவை என்று ஏற்படுகிறது. கார்யங்களாகில் அநித்யங்களாகவேண்டும். ஆகையால் நித்யவஸ்துக்கள் அநித்யங்களாய்விட்டனவே! என்கிற சங்கை தோன்றுகிறது இந்த சங்கைக்கு பரிஹாரம் விசேஷணவிசேஷ்ய ஸம்பந்தத்தால் செய்யப்படுகிறது. நித்யமான ப்ரஹ்மத்திற்கு கீழ்சொன்ன நித்யவஸ்துக்கள் விசேஷணம் (attributes) ஆகையாலே, அவைகளுக்கு அநித்யத்வம் சங்கிக்கமுடியாது. வஸ்த்ரத்துக்கு, அதனுடைய வெளுப்பு முதலிய நிறமானது வஸ்த்ரத்தை யாச்ரயித்தே நிற்குமேயல்லது வஸ்த்ரத்தை விட்டுத் தனியே நிற்காது. அதுபோல சித்துக்களும் அசித்துக்களும் பகவத்ஸ்வரூபத்தைப்பற்றியல்லது ஸத்தையற்றிருக்கும். ஆகையால் இந்த ஸம்பந்தம் நித்யகார்யாநாதித்வ ஸூசகமாயிற்று. ஆக திருமந்த்ரத்தில் ப்ரணவத்தின் முதலக்ஷரமான அகாரத்தாலே ஏற்படுகிற கார்யகாரணபாவவிசேஷணவிசேஷ்யஸம்பந்த ஞானம் பிறந்தால், பகவானைத் தவிர வேறுபொருள் இந்த ஜகத்துக்குக் காரணமாகுமோ என்கிற சங்கை வேருடன் அற்றுப் போகும்.

## (2) ரக்ஷ்யரக்ஷகஸம்பந்தம்.

இப்படி அக்ஷரஸ்வபாவத்தாலே உபாதான காரணத்தைச் சொல்லுகிற 'அ' என்கிற பதத்தினுடைய தாதுப்ரத்யயமுகத்தால் (by root and termination) உண்டான வ்யுத்பத்தியை ஆராய்ந்தவாறே இரண்டாவது ஸம்பந்தம் தோன்றுகிறது. **येन जातानि जीवन्ति**, ஸ்ருஷ்டிக்கப்பட்ட ஜீவாத்மாக்கள் ஸ்ருஷ்டிக்கும் பரமாத்மாவினால் ரக்ஷிக்கப்படுகின்றனர் என்கிற ப்ரஸித்தமான ரக்ஷ்யரக்ஷகஸ்வரூபத்தைக் காட்டுகிற இந்த இரண்டாவது ஸம்பந்தம் காரணத்வஸம்பந்தத்திற்கு அடுத்தபடியாகச் சொல்லப்படுகிறது "மூவாத்தனிமுதலாய் மூவுலகுங்காவலோன்"— என்று ஆழ்வார் அருளிச்செய்தபடி காரணவஸ்துவே ரக்ஷகனாக வேண்டும்.

அவ - ரக்ஷணே என்கிற தாதுவின் (root) மேலே '**अन्येभ्यो हि दृश्यते**' என்கிற க்விப் ப்ரத்யயத்தைப் பண்ணி, அதினுடைய அனுபந்தங்களை லோபித்து, '**लोपो व्योर्वलि**' என்று தாதுவினுடைய வகாரத்தையும், **वेरपृक्तस्य** என்று ப்ரத்யயவகாரத்தையும் லோபிக்கச் செய்வதால், 'அ' என்று ரூபமாய் அது ஸர்வரக்ஷகனான ஸர்வேச்வரனைச் சொல்லுகிறது. தாதுவின் அர்த்தம் ரக்ஷணமாகையாலே, ரக்ஷணமாகிற தர்மமானது ஆச்ரயத்தைவிட்டு நிற்காமல் ஸாச்ரயமாய் ஸாவிசேஷ்யமாயல்லது இராமையாலே, அதுக்கு ஆச்ரயமாக பகவத்ஸ்வரூபம் புகுந்தது. **नहि पालनसामर्थ्य मृते सर्वेश्वरं हरिम्**' என்கிறபடியே ரக்ஷணஸாமர்த்தியம் ஸர்வேச்வரனிடத்திலேயிருப்பதால் பகவத்ஸ்வரூபம் ப்ரஸக்தமாயிற்று. ப்ரதமாக்ஷரமான அகாரம் தாதுவிலே பதமாய் நிஷ்பன்னமாகையாலே ரக்ஷகனான ஈச்வரனுக்கு வாசகமாகும். இந்த ரக்ஷணத்தை ஸ்திதி என்றும் சொல்லுவதுண்டு. '**सत्तानुवृत्तिः स्थिति**' ஸத்தை தொடர்ந்து நிற்பது ஸ்திதியாகும். **स्वरूपस्य कालान्तरावच्छिन्नाकार-विरहः**— முற்கூறிய ஸ்வரூபமானது மற்றொரு காலத்தில் வேறு உருவை அடையாமல் நிற்பது ஸ்திதி எனப்படும். ஜீவாத்மாக்களை பரமாத்மா ரக்ஷிக்கிறான் என்கிற காரணத்தால் இந்த ஸம்பந்தம் சொல்லப்படுகிறது. பகவான் கீதையில் '**मयि सर्वमिदं प्रोतं सूत्रे मणिगणा इव**' (7-7) இந்த சேதனாசேதனவஸ்துக்களெல்லாம் காரியாவஸ்தையிலும் காரணாவஸ்தையிலும் எனக்கு சரீரமாகவே இருந்துகொண்டு ஒரு நூலில் மணிகளின் கூட்டம் போல ஆத்மாவாகிய என்னையாச்ரயித்து நிற்கின்றன என்கிற ச்லோகத்தால் அவைகளின் ஸ்திதியானது தனது அதீனமென்று சொன்னான். நம்மாழ்வாரும், "அவரவர் தமதமது அறிவறி வகைவகை அவரவர் இறையவர் என அடியடைவர்கள் அவரவர் இறையவர் குறைவிலர் இறையவர் அவரவர் விதிவழி அடையநின்றனரே" (1-1-5) என்கிற பாசுரத்தால், ஸகல பதார்த்தங்களினுடைய ஸ்திதி என்று சொல்லப்பட்ட ரக்ஷணமானது பரமாத்மாவினுடையது என்று நிச்சயிக்கிறார். உலகத்தில் நடக்கிற ரக்ஷணத்தொழில் யாவும் எம்பெருமானுடையதே. சிவன், பிரமன், இந்திரன், அக்னி, முதலிய இதர தெய்வங்களைக

குறித்து அந்தந்த சேதனர்கள் வழிபாடுசெய்து, தாம் தாம் கோலின பலன்களைப்பெறுவதாகக் கண்டாலும், அதுவும் எம்பெருமான் தானே அந்த தெய்வங்களுக்கு உள்ளீடாக இருந்து நடத்திவருகிற ரக்ஷணமேயன்றி, அந்த தெய்வங்களே ஸ்வதந்த்ரமாகச் செய்துவிடுகிற ரக்ஷணமன்று —என்று அனுசந்தித்தார். கீதாசார்யனும் कामैस्तैस्तैर्हृतज्ञानाः प्रपद्यन्तेऽन्यदेवताः । लभते च ततः कामान्मयैव विहितान् हि तान् (7-20, 22)—வெவ்வேறு ஆசைகளால் ஸ்வரூப ஞானமிழந்து மற்றோர் தெய்வங்களைச் சரணம் புகுகின்றனர். ஆனால் அவரவர்கள் கோலின அல்பபலன்களை, அத்தெய்வங்களுக்கு அந்தர்யாமியாய் நின்று நானே கொடுக்கிறேன்— என்று தான் அந்தர்யாமியாக நின்று ரக்ஷிக்கும் ப்ரகாரத்தை வெளியிட்டான். ஜீவர்களின் ஸ்வரூபமும் ஸ்திதியும் பகவத்தீனம் என்று சொன்னது ப்ரவ்ருத்திக்கும் உபலக்ஷணம். ஜீவாத்மாக்களின் ப்ரவ்ருத்தியும் பகவத்தீனம் என்றதாயிற்று. ப்ரவ்ருத்தியாவது - कार्योत्पत्त्यनुगुणव्यापार: கார்யம் உண்டாவதற்குத் தக்க வ்யாபாரம். இதை நம்மாழ்வார் "நின்றனர் இருந்தனர் கிடந்தனர் திரிந்தனர் நின்றிலர் இருந்திலர் கிடந்திலர் திரிந்திலர், என்றுமோரியல்வினர் எனநினைவரியவர், என்றுமோரியல்வொடு நின்றவெந்திடரே"—ஸகல ஜீவாத்மாக்களுடையவும் நிற்றல் இருத்தல் கிடத்தல் என்கிற ப்ரவ்ருத்தி ரூபமான கார்யங்களும் அதற்கு எதிர்த்தட்டான நிவ்ருத்திகளும் பகவத்தீனமே என்றருளிச் செய்தார். ப்ரவ்ருத்திரூபமான கார்யங்களெல்லாம் எம்பெருமானுடைய ஸங்கல்பாதீனமென்பதில் ஸம்சயமில்லை. நிவ்ருத்தியும் (cessation of activities) அவனுடைய அதீனம் என்று எதற்காக ஒப்புக்கொள்ள வேண்டும்? என்கிற சங்கை உதிக்கலாம். இதற்கு எம்பார் அருளிச்செய்த ஸமாதானமாவது—"ஸ்வர்க்கத்தில் நின்றும் விழுகிற த்ரிசங்குவை சக்திமான் நிற்கச்சொல்ல நிற்கவேண்டிற்றாகக் கண்டாயே, —அப்படியே நிவ்ருத்திக்கும் அவன் வேணும் காண்" என்று. இந்திரன் த்ரிசங்குவைப் பார்த்து "உன்னுடைய குருவின் சாபத்தினால் நீசனாகிய நீ இங்கு ஸ்வர்க்கத்திலிருக்க அர்ஹனல்லன். ஆகையால் நீ தலைகீழாக

விழக்கடவாய்" என்று சொன்னான். த்ரிசங்குவும் அப்படியே விழுகையில கதறினான். அது கேட்ட விசுவாமித்ரன 'நீ அங்கேயே நில்' என்று சொல்லித் தன்னுடைய தபோமஹிமையினால அவனை ஆகாயத்தில் தான பாாததவிடத்தில நிறுததினான. மேலேயிருந்து கீழேவிழுகிற த்ரிசங்குவுககு அநத வீழ்ச்சிக்கும் ஒரு தடை ஏற்பட்டதல்லவா? அது பகவத ஸங்கலபததாலே தான. ஆகையால பரவ்ருத்தியோடு நிவ்ருத்தியோடு வாசியற எல்லாம் பகவதஸங்கல்பாதீனம என்று சொல்லததட்டில்லை. வாஸ தவத்தில ஸ்ரீதேசிகன தத்வத்ரயாதிகாரததிலும் கதயபாஷ்யத திலும அருளிச்செய்தபடி பரவருததியாவது=பரவருததிநிவ் ருததிரூபமான வயாபாரம. '**निवृत्तिरपि अकरणसंकल्परूपप्रवृत्ति-विशेष**' நிவருததியாவது ஒனறும செயவதில்லையெனனும ஸங கலபமாகிய ஒருவகை பரவருததியேயாம. ஆகையால நிவ்ருத்தி யும் பரவ்ருததியிலடங்கிறது. இநத ப்ரவருததி விஷயமாக கீதா சார்யனும '**मत्तः सर्वं प्रवर्तते**' (10–8) சிததசித்வஸ்துககளெலலாம என்னால்தான பரவருததிககினறன — என்று சொனனான. ஸ்ரீபாஷ்யகாரரும், '**स्वाधीनत्रिविध चेतनाचेतनस्वरूपस्थितिभेदं**' — பக்தமுக்தநித்யர் எனகிற மூனறுவித சேதனாகளுடையவும், பர க்ருதி, காலம, சுத்தஸத்வம, எனகிற மூன்றுவித அசேதனங்க ளுடையவும ஸ்வரூபம--ஸ்திதி--பரவ்ருததி இவையெல்லாம பர மாத்மாவுககு அதீனம எனறு அருளிச்செய்தார். இனனாககு ரக்ஷகன எனறு ஸங்கோசிததுச சொல்லாமையால மூனறுவித ஜீவாத்மாககளும பரமாத்மாவால ரக்ஷிக்கப்படுகின்றனா எனறும அவன அவாகளுககு ரக்ஷகன எனறும சொல்லபபட்டது. ரக்ஷிக்கையாவது விரோதிகளைப் போக்குகையும, வேண்டியவற்றைக் கொடுக்கையும. இநத இஷ்டாநிஷ்டஙகள அநதநத அதிகாரி சேதனாகளுக்குத் தக்கபடி வேறுபட்டிருககும. ஸமஸாரி சேத னாசனான பக்தஜீவாகளுககு விரோதி சத்ருக்களால வரும பீடை கள். அவாகளுக்குத் தேவையானவை அன்னபானாதிகள். முமு க்ஷுக்களுககு விரோதி ஸம்ஸாரஸமபந்தம். அவாகளுக்குத

தேவையானது பரமபதப்ராப்தி. முக்தர்களுக்கும் நித்யர்களுக்கும் விரோதி பகவத்கைங்கர்யஹானி. அவர்களுக்குத் தேவையானது கைங்கர்யப்ரவ்ருத்தி. ஆகவே மூன்றுவித சேதனர்களின் அநிஷ்டங்களைப் போக்கி இஷ்டங்களைக் கொடுத்து அவர்களை பகவான் ரக்ஷிக்கையால் 'மூவுலகுங்காவலோன்' என்று சொல்லப்பட்டது. இன்ன தேசத்தில் ரக்ஷகன் என்று ஸங்கோசித்துச் சொல்லாமையாலே ஸர்வதேசரக்ஷகத்வம் சொல்லிற்று. இன்னகாலத்தில் ரக்ஷகன் என்று சங்கோசித்துச் சொல்லாமையாலே ஸர்வகாலத்திலும் ரக்ஷகன் என்று சொன்னதாயிற்று. இன்ன ப்ரகாரத்தில்தான் ரக்ஷகன் என்று ஸங்கோசியாததால ஸர்வப்ரகார ரக்ஷகத்வம் சொல்லிற்று.

இந்த ரக்ஷ்யரக்ஷகஜ்ஞானம் பிறக்கவே மற்ற தேவதாந்தரங்கள் ரக்ஷகர்களோ என்கிற சங்கையானது வேறற்றுப்போய்விடும். ஆக திருமந்த்ரத்தில் முதல் அக்ஷரமான அகாரத்தால் ப்ரக்ருத்யர்த்தமான காரணத்வமும், தாத்வர்த்தமான ரக்ஷகத்வமும் சொன்னதால் பித்ருபுத்ரஸம்பந்தமும் ரக்ஷ்யரக்ஷகஸம்பந்தமும் சொல்லப்பட்டது.

### (3) சேஷசேஷிஸம்பந்தம்.

இது விபக்தியினால் ஏற்பட்ட ஸம்பந்தம். ப்ரணவத்தில் 'அ' என்கிற பதமானது முதலில் 'ஆய' என்று நான்காம் வேற்றுமையையுடையதாய 'தாதர்த்யே' சதுர்த்யேகவசனமாய 'ஸுபாம் ஸுலுக்' இத்யாதி ஸூத்ரத்தாலே விபக்தியானது லோபத்தையடைந்திருக்கிறது. இது ப்ரத்யயாம்சத்தாலே தாதர்த்யரூபமான சேஷத்வத்தைச் சொல்லுகையாலே அதுக்கு ப்ரதிஸம்பந்தியான (relative) சேஷித்வமே, ப்ரக்ருத்யம்சமான அகாரத்துக்கு முக்யார்த்தமாகிறது. மற்ற வேற்றுமைகள் இருக்கும்போது இந்த அகாரத்தில் முதலில் சதுர்த்தீ விபக்தியானது ஏறி நின்றது என்று ஏன் சொல்லவேண்டும்? சதுர்த்தீவிபக்தியாலல்லவோ தாதர்த்யரூபமான சேஷத்வம் ஸித்திக்கும்?

என்கிற கேள்வி பிறக்கிறது. இதற்கு ஸமாதானம் பின்வருமாறு. **'ब्रह्मणेत्वामहस ओमित्यात्मानं युंजीत'** என்று தாத்பர்யாநுஸந்தானரூப ஸமர்ப்பணத்தை விதிக்கிற வாக்யத்திலே ஸமர்ப்பணமந்த்ரமான ப்ரணவத்தை ப்ரகாசிப்பிக்கிறவிடத்திலே 'ப்ரஹ்மணே' என்று சதுர்த்யந்தமாக ப்ரஹ்மசப்தத்தைச் சொல்லுகையாலே, ச்ருதி ஸித்தமான ப்ரஹ்மவாசகத்தையுடைத்தான அகாரத்தினுடைய சதுர்த்யந்தத்வம் ஸூசிக்கப்படுகிறது. ஸ்ரீபராசரபட்டரும் இந்த தைத்திரீயோபநிஷத் வாக்யத்தை சப்தத்தாலும் அர்த்தத்தாலும் அநுபாஷித்துக்கொண்டு **'आयुःप्रजानाममृतंसुराणां रंगेश्वरं त्वां शरणं प्रपद्ये । मां ब्रह्मणेस्मै महसे तदर्थं प्रत्यंचमेनं युनजे परस्मै ॥'** என்று இந்த ப்ரணவார்த்தப்ரகாசகமான வாக்யத்தின் அர்த்தத்தை ஸ்வாநுஷ்டானபர்யந்தமாக அநுஸந்திக்கிற தசையிலே — "ப்ரஜைகளுக்கு ரக்ஷகராயும் தேவர்களுக்கு போக்யராயும் ஸ்ரீரங்கத்திற்குத் தலைவராயுமிருக்கிற தேவரீரைச் சரணம் புகுகின்றேன் பரப்ரஹ்மஸ்வரூபியாயும் தேஜஸ்ஸ்வரூபியாயுமிருக்கிற இப்பெருமான் பொருட்டு தாதர்த்யமாகிற சேஷத்வமே வடிவாகவுள்ள ப்ரத்யகாத்மாவும் ஸ்வயம் ப்ரகாசரூபமான அடியேனை விநியோகிக்கக்கடவேன் -- ஸமர்ப்பிக்கக்கடவேன்"-என்று ஸமர்ப்பணவிஷயத்தை சதுர்த்யந்தப்ரஹ்மசப்தத்தாலே அருளிச்செய்தார். ஆகையால் இந்த அகாரத்தில் சதுர்த்தீ விபக்தியே ஏறிக்கழிந்தது. மேலும் இந்த அகாரமானது வ்யக்தமான சதுர்த்தியையுடைய 'நாராயணாய' என்கிற பதத்திற்கு ஸங்க்ரஹமாகையாலே இதிலும் சதுர்த்தீவிபக்தியே ஏறிக்கழிந்தது என்று சொல்லவேண்டும். இங்ஙனம் சொல்லாவிடில் அகாரம் ஸங்க்ரஹமானபதமென்றும், அதற்கு நாராயணாய என்கிற பதமானது விவரணமென்றும் ஸித்திக்காது. இந்த சதுர்த்தீ விபக்திக்கு அர்த்தம் தாதர்த்யமாதலால் மகாரவாச்யனான ஜீவன் ஈச்வரனுக்கு சேஷம் என்று சொல்லுகிறது. சேஷசப்தத்துக்கு அர்த்தம் பூர்வமீமாம்ஸையில் **'शेषःपरार्थत्वात्'**

எனகிற ஸூத்ரத்தினால் அறிவிக்கப்படுகிறது. இந்த ஸூத்ரத்துக்கு வ்யாக்யானரூபமாக சேஷத்வலக்ஷணத்தை ஸ்ரீபாஷ்யகாரர் வேதார்த்தஸங்க்ரஹத்திலே அருளிச்செய்தார். அதாவது "पर-गतातिशयाधानेच्छया उपादेयत्वमेवदस्यस्वरूपं सःशेष· परःशेषी" "மற்றொரு வஸ்துவுக்கு ஓர் அதிசயத்தை (மேன்மையை) உண்டுபண்ணுவதற்காக ஸ்வீகரிக்கப்படுவதே எதற்கு ஸ்வரூபமோ அது சேஷவஸ்து. மற்றது அதாவது மேன்மையைப்பெறும் வஸ்து சேஷீ" என்று. இதைச் சற்றுவிவரிப்போம். உலகத்தில் வஸ்த்ரம், வீடு, வயல், தோட்டம், சந்தனம், புஷ்பம், தாம்பூலம் முதலிய வஸ்துக்கள் நம்முடைய ப்ரயோஜனத்திற்காகவும் மேன்மைக்காகவும் ஸ்வீகரிக்கப்படுகின்றன. இஷ்டவினியோகார்ஹமாயிருக்கின்றன. ஆகையால் அவைகள் நமக்கு சேஷமான வஸ்துக்கள். அவைகளால் ப்ரயோஜனத்தையும் மேன்மையும் பெறுகின்ற நாம் அவைகளுக்கு சேஷிகள். இவ்விதம் ஸ்வீகரிக்கப்படுவது சேஷவஸ்துவின் இச்சையினாலாவது, சேஷியின் இச்சையினாலாவது மூன்றாவது வஸ்துவின் இச்சையினாலாவது ஏற்படலாம். ஒரு யாகத்துக்கு நெல் முதலியது சேஷம் யாகமானது சேஷீ. எனென்றால் யாகத்திற்காக நெல் ஸ்வீகரிக்கப்படுகிறது. இவ்விடத்தில் ஸ்வீகரிப்பதில் இச்சையானது சேஷமான நெல் முதலியவற்றிற்கும், சேஷியான யாகத்திற்கும் இல்லையாதலால், மூன்றாவது வஸ்துவான யாகம் செய்கிறவனுடைய இச்சையால் ஸ்வீகரிக்கப்படுகிறது. பலோத்பத்தியில் இச்சையினால் யாகமும் அது செய்வதில் ப்ரயத்னமும் ஸ்வீகரிக்கப்படுகிறது. யாகஸித்தியில் இச்சையினால் மற்றவை ஸ்வீகரிக்கப்படுகின்றன. இதுபோலவே ஈச்வரனுக்கு ஓர் அதிசயத்தை உண்டுபண்ணுவதற்காகவே ஸ்வீகரிக்கப்படுவதானது சேதனங்கள், அசேதனங்கள், நித்யவஸ்துக்கள், அநித்யவஸ்துக்கள் ஆகிய எல்லா வஸ்துவினுடையவும் ஸ்வரூபமாயிருக்கிறது. ஆகையால் எல்லாம் ஈச்வரனுக்கு சேஷபூதம். எல்லாவற்றிற்கும் ஈச்வரன் சேஷீ. **'सर्वस्यवशीसर्वस्येशानः पतिं विश्वस्य'** — 'எல்லாவற்றையும்

தனக்கு வசமாக்கிக்கொண்டு ஆள்கிறவன் யாவற்றுக்கும் சேஷி' என்றிவை முதலிய ப்ரமாணங்களால், பரமாத்மா ஸர்வசேஷி என்னப்படுகிறான். இவ்வர்த்தத்தை பட்டர் 'उपात्तेसत्तास्थितिनियमनाद्यैश्चिदचितौ स्वमुद्दिश्य श्रीमानितिवदतिवागौपनिषदी'—உபநிஷத்வாக்யங்கள் என்ன தெரிவிக்கின்றனவென்றால் — சேதநாசேதனபதார்த்தங்களைப் படைப்பதோ, ரக்ஷிப்பதோ, நியமிப்பதோ மற்றும் எது செய்வதோ அவையெல்லாம் எம்பெருமான் தனக்காகவே செய்வதாகத் தெரிவிக்கின்றன. அவன் ஸ்வாமியாகவும், மற்றவை யாவும் ஸ்வம் ஆகவும் இருக்கையாலே, உடைமைகளை விஷயமாக உடையவன் செய்யும் ஸகல் காரியங்களும் ஸ்வார்த்தமாகவேயிருப்பதாகக் காண்கின்ற லோகானுபவத்தினாலும் இவ்வர்த்தம் நிஷ்கர்ஷிக்கப்படுகிறது. ஸகல ஜீவாத்மாக்களுக்கும் சேஷத்வமே ஸ்வரூபமென்று ப்ரமாணங்கள் முறையிடுகின்றன. 'यस्यास्मिनतमन्तरेमि योहमस्मि ससन् यजे' - 'எந்த பகவானுக்கு அடியனாக இருக்கிறேனோ, அந்த பகவானைவிட்டு நீங்கமாட்டேன். இயற்கையான அடிமையினால் யாவனாக இருக்கிறேனோ அவனாகவேயிருந்துகொண்டு அந்த பகவானை ஞானமாகிற யாகங்களினால் ஆராதிக்கிறேன்'—என்று சுருதியும், 'आत्मदास्यं हरेः स्वाम्यं, दासभूताः स्वतस्सर्वेह्यात्मानः परमात्मनः' - "இயற்கையில் ஜீவாத்மாக்கள் பரமாத்மாவுக்கு அடியவர்கள்—சேஷபூதர்கள்" என்று பகவச்சாஸ்த்ரங்களிலும், 'அடியேனுள்ளான்' என்று நம்மாழ்வாரும், 'நானுமுனக்குப்பழவடியேன்' என்று பெரியாழ்வாரும், ஜீவனுடைய பகவச்சேஷத்வத்தை நிர்ணயித்துச் சொன்னார்கள். "அஹங்காரமாகிற ஆப்பை (அழுக்கை) தத்துடைத்தால் ஆத்மாவுக்கு அழியாத பேர் அடியான்"—என்றார் உலகாசார்யர். ஆகையால் ஸ்வாதந்த்ர்யம் ஜீவனுக்கு ஔபாதிகம்—வந்தேறி. ஆனது பற்றி அது த்யாஜ்யம். இதற்குமேல் ஒரு ஆக்ஷேபம் வருகிறது - "அத்யந்தம் சேஷமாயிருக்கை ஆத்மாவுக்கு மிகவும் அதிகமான ஸுகம் என்று சொல்லுவது ஸர்வலோகாநுபவத்துக்கு விருத்தமானது. ஏனென்றால், எல்லா சேதனர்களுக்கும் ஸ்வாதந்த்ர்யமே

மிகவும் விரும்பத்தக்கதென்று காண்கிறோம். அது போலவே பாரதந்த்ர்யமும் மிகவும் துக்கரூபமாகக் காண்கிறோம். மனுஸ்ம்ருதியில் "பிறற்கு வசப்பட்டிருப்பது எல்லாம் துக்கம். தனக்குத்தானே வசமாயிருப்பது அதாவது ஸ்வாதந்த்ர்யம் ஸுகரூபமென்றும், மற்றவனுக்கு ஆட்செய்வது நாய்வ்ருத்தியாதலால் அந்த ஸேவையைத் தவிர்க்கவேணு"மென்றும் சொல்லப்பட்டிருக்கிறது—என்று. இந்த ஆக்ஷேபமானது தேஹத்திற்காட்டில் ஆத்மா வேறுபட்டதென்று ஆத்மஸ்வரூபத்தை யறியாமல், சரீரமே ஆத்மாவென்று சரீரத்திலே விபரீதமான ஆத்மாபிமானம் பண்ணுமவர்களின் சரீராத்மாபிமான கார்யமாகும். எப்படியென்றால்:—சரீரம் என்பது மனுஷ்யத்வாதிஜாதி, குணங்கள், இவைகளுக்கு ஆச்ரயபூதமான பிண்டமாய், ஸ்வதந்த்ரமாய்த் தோன்றுகிறது. 'இந்த சரீரமே நான்' என்று ஸம்ஸாரிகள் நினைக்கிறார்கள். ஆத்மாபிமானம் எவ்விதமாயிருக்கிறதோ, அதற்கு ஈடாயிருக்கும் புருஷார்த்தஜ்ஞானம். சிங்கம், புலி, பன்றி, மனிதன், யக்ஷன், ராக்ஷஸன், பிசாசம், தேவன், தானுவன், ஆண், பெண் என்கிற வ்யவஸ்தையுடைய ஆத்மாபிமானமுள்ளவர்களுக்கு ஸுகங்களும் வ்யவஸ்திதங்களாயிருக்கும். அவைகள் ஒன்றுக்கொன்று விருத்தங்களாய் வேறுபட்டிருக்கும். இவையெல்லாம் விபரீதமான ஆத்மாபிமானத்தின் கார்யம். ஆகையால் ஆத்மாபிமானத்துக்கனுகுணமான புருஷார்த்த வ்யவஸ்தையைக்கொண்டு எல்லாவற்றுக்கும் ஸமாதானம் செய்யவேண்டியது. ஆத்மாவுக்கு அனுகூலம் ஸுகம், ஆத்மாவுக்கு ப்ரதிகூலம் துக்கம் - என்பதுதான் ஸுகதுக்கலக்ஷணம். 'நான் ஸ்வதந்த்ரன்' என்று ஆத்மாபிமானமிருக்கும்போது, ப்ரதிகூலமானதால் பாரதந்த்ர்யம் துக்கமாகிறதேயல்லாமல் பாரதந்த்ர்யம் என்கிற காரணத்தாலல்ல. ஆத்மஸ்வரூபமோவென்றால் தேஹேந்த்ரியங்களிற்காட்டிலும் வேறுபட்டு ஜ்ஞானவடிவானது. அது பகவானுக்கு சேஷமாயிருப்பதையே ஸ்வரூபமாயுடையது. ஆனதால் ஆத்மா உள்ளபடியே அபிமானமிருந்தால், அதற்கு அனுகுண

மாக புருஷார்த்த ஞானம் உண்டாகும். "आत्मा ज्ञानमयोऽमलः" என்பதால் ஞானவடிவுள்ளது ஆத்மா என்கிற ஞானம் பிறக்கும். "पतिं विश्वस्य" என்றிவை முதலிய ப்ரமாணங்களால் பரமாத்மாவுக்கு சேஷமாயிருப்பதே ஜீவனுடைய ஆகாரம் என்று சொல்லப் படுகிறது. ஆனதால் சிங்கம், புலி முதலிய சரீரத்தில் ஆத்மாபிமானம்போல் 'நான் ஸ்வதந்த்ரன்' என்கிற அபிமானமும் கர்மத்தாலே ஏற்பட்ட விபரீதாத்மாபிமான ரூபமென்றறியத்தக்கது. ஆகவே, பரமாத்மாவைத் தவிர மற்ற விஷயங்கள் ஸுகமென்றிருப்பது கர்மத்தால் ஏற்பட்டது. அதனால்தான் அந்த விஷயஸுகங்கள் கர்மக்ருதமாகையால் அல்பமாயும் நிலையற்றதாயு முள்ளன. பரமபுருஷனுக்கோவென்றால் ஸ்வதஃஏவ ஸுகத்வமுள்ளது. ஆனதால அதுவே நிலையுள்ளதும் அளவற்றதுமான ஸுகம் என்று 'कं ब्रह्म खं ब्रह्म', 'आनन्दो ब्रह्म' —என்றிவை முதலான ப்ரமாணங்கள் கூறுகின்றன. பரஹ்மத்தைத் தவிர மற்ற எல்லா வஸ்துக்களுக்கும் ஸ்வரூபேண ஸுகத்வாபாவமும், கர்மக்ருதத்வேன அஸ்திரத்வமும் பராசரபகவானால் சொல்லப்பட்டது. எல்லாவஸ்துக்களுக்கும் ஸுகதுக்காத்மகத்வம் கர்மக்ருதமேயல்லது வஸ்து ஸ்வரூபக்ருதமல்ல. விஷசஸ்த்ராதிகள் ப்ரதிகூலங்களாயும் சந்தனகுஸுமாதிகள் அநுகூலங்களாயும் தோற்றுகிறது தேஹாத்மப்ரமத்தினாலே. ஈச்வராத்மகமாகையாலே எல்லா பதார்த்தங்களுக்கும் ஆநுகூல்யமே ஸ்வபாவம். ஆகையால் அஹங்காரத்தாலேகாணும்போது ஸாவவிஷயப்ரகாசனத்தையிலும் ஞானம் ஆநந்தரூபியாயிருக்கும். 'ஸாவம் பரவசம் துக்கம்' என்று சொன்னது பரமபுருஷனைத் தவிர மற்ற வஸ்துக்களுக்கெல்லாம், பரஸ்பரம் சேஷசேஷிபாவமில்லாததால் பகவானைத் தவிர மற்றவைகளைக் குறித்து சேஷமாயிருப்பது துக்கமாகவேயிருக்கும் என்பதைப்பற்றியாம். ஸேவை நாய வ்ருத்தியென்று சொன்னது அஸேவ்யஸேவையைப்பற்றியது. "सहाश्रमैस्सदोपास्यः समस्तैरेक एव" —"ஆச்ரமாத்மயஞானமுள்ளவர்களால் எப்போதும் பகவான் ஒருவனே உபாஸிக்கத்தக்கவன்" என்றும்

"मां च योऽव्यभिचारेण भक्तियोगेन सेवते । स गुणान् समतीत्यैतान् ब्रह्मभूयाय कल्पते ॥" (கீதை, 14-26) "யாவனொருவன் தேவதாந்தரபரித்யாக பூர்வகமாக பக்தியோகத்தால் என்னை ஸேவிக்கிறானோ, அவன் தாண்டமுடியாத முக்குண ப்ரக்ருதியைத் தாண்டி யதாவஸ்திதமான ஆத்மஸ்வரூபத்தை யடைகிறான்"—என்று பகவானும் சொன்னான். இதுவே பக்திரூபையான ஸேவையாகும். ஆனதால் பரப்ரஹ்மவிஷயமான பகவத்ஸேவையானது ஸுகரூபமாகவேயிருக்கும். தவிர, உகந்த விஷயத்துக்கு சேஷமாயிருக்குமிருப்பு ஸுகரூபமாகவே நாம் காணகிறோமல்லவா? "பணிமின்திருவருள்" (4—1—5) என்று சொன்னபடி, சிற்றரசர்கள் தங்கள் காலில் விழும்படி தாங்கள் ராஜ்யம் ஆள்கின்ற நாளில், தங்கள் ராஜ்யத்தை காமினிகளுக்கு ஸ்த்ரீதனமாக்கி அவர்களைப் படுக்கையிலே வைத்துத் தாங்கள் தாழ்நின்று, "மங்கைமீர்! கிருபைபண்ணியருளவேண்டும், உங்கள் திருவுள்ளத்தில் ஓடுகிறதை வெளியிடவேண்டும். அதை உடனே செய்து தலைக்கட்டுவோம்"—என்று சொல்லிக்கொண்டு தங்களுக்கு அபிமதமான ஸ்த்ரீகளிட்டவழக்காய் அவர்களுக்குப் பணிவிடை செய்துகொண்டு தங்கள் காமினிகளுக்கு சேஷபூதர்களாகத் தங்களை ஆக்கிக்கொண்ட பலபல அரசர்கள் உலகத்திலிருக்கவில்லையா? ஆகையால் ஸ்வதந்த்ரனை அபிமானித்திருக்கும் ஒருவனுக்கு சில வ்யக்தி விசேஷங்களில் பாரதந்த்ர்யமே போகரூபமாகக் காணகிறோம். ஆனதால் சேஷத்வம் ஸுகரூபமாகில் ஸ்வீகரிக்கத்தக்கது. ஸ்வாதந்த்ர்யம் துக்கரூபமாகில் விடத்தக்கது. பரப்ரஹ்மவிஷயத்தில் ஸேவையை உபாதேயமாகச் சொன்னார்கள். "சிற்றம் சிறுகாலே வந்துன்னைச் சேவித்து" என்றும் "दास्यमहारसज्ञाः" என்றும், "दास्यसुखैकसंगिनां" என்றும், ஈச்வர சேஷத்வம் விஹிதமாயும், போகரூபமாயுமிருப்பதால் அது உபாதேயமாகக்கடவது. இந்த சேஷசேஷி ஞானம் பிறக்கவே, பகவானைத் தவிர மற்றவர்கள் சேஷி என்கிற ஞானம் வேரறுப் போம்.

என்றும், "**स्वामित्वात्मत्वशेषित्वपुंस्त्वाद्याः स्वामिनोगुणाः । स्वत्वदासत्व कार्यत्वशेषत्वस्त्रीत्वदायिनः ॥**" - "ஸ்வாமித்வம், ஆத்மத்வம், சேஷித்வம், பும்ஸ்த்வம் முதலிய குணங்கள் பகவானுக்கே உள்ளன. அக்குணங்களுக்கு ப்ரதியான ஸ்வத்வம், தாஸத்வம், சரீரத்வம், சேஷத்வம், ஸ்த்ரீத்வம் முதலிய குணங்கள் ஜீவாத்மாவுக்கே உள்ளன"— என்றும் ப்ரமாணங்கள் கூறுவதால் ஜீவனுக்கு ஸ்த்ரீத்வம் வந்தேறியன்று, ஸ்வாபாவிகம். "புருஷோத்தமனான எம்பெருமானது பேராண்மைக்கு முன் உலகம் முழுவதும் பெண்தன்மையதாயிருக்கையாலும், ஜீவாத்மாவுக்கு ஸ்வாதந்த்ர்ய லேசமுமின்றி பாரதந்த்ர்யமே ஸ்வரூபமாயிருப்பதாலும் இவர்களுக்குப் பெற்ற ஸ்த்ரீபாவமே வந்தேறியன்று. ஆகவே ஸ்வாபாவிகம்" என்று ஆழ்வார்களின் பெண் பேச்சு விஷயமாக ஆசார்யர்களும் அருளிச்செய்திருக்கிறார்கள். "ஸத்ராத்தத்திலே பும்ஸ்த்வத்தைக் கழித்து பெண்ணுடையுடுத்தும்படியிறே அவனுடைய புருஷோத்தமத்வமிருப்பது"—என்பார்கள் ஆசார்யர். "**एकीभवद्भिरयुतैरपि मन्मथानां यत्कांतिसिंधुपृषतानुकृतिर्नशक्या । संप्रेक्ष्य तं यदुपतिं यमिनोपिनूनं स्त्रीभावमेव मनसा विमरां बभूवु ॥**" "அநேககோடி மன்மதர்கள் ஒன்று சேர்ந்தாலும் எந்தக் கண்ணபிரானது வடிவழகான கடலின் ஓர் திவலைக்கும் ஒப்பாகார்களோ அந்தக் கண்ணபிரானைக் கண்டதும் 'ஊன்வாட உண்ணாது உயிர்காவலிட்டு உடலில் பிரியாப்புலனைந்தும் நொந்து தாம்வாடவாட, காயோடு நீடு கனியுண்டு, வீசுகடுங்காலநுகர்ந்து நெடுங்காலம் ஐந்தீயோடு நின்று' தவம் செய்யும் மாமுனிகளும் கூட அவனைத் தனக்கு அனுபவிக்கப் பெண்மையை மனதால் அடைந்தார்கள்"—என்று ஸ்ரீ தேசிகனும் ஸ்ரீ யாதவாப்யுதயத்தில் அருளிச்செய்தார். ஜீவாத்மாவுக்கு ஸ்த்ரீபாவம் வந்தேறியன்று, ஸ்வாபாவிகம் என்பது வெகு அழகாயும் அற்புதமாயுமுள்ள ஒரு சூர்ணிகையால் ஆசார்யஹ்ருதயத்தில் விளக்கப்பட்டிருக்கிறது— "வித்யை தாயாகப்பெற்ற பாலமுதுமான திருநாமத்தாலே திருமகள்போல வளர்த்த தீஞ்சமாகிய தந்தை மற்றொருவருக்குப் பேசப்படாமல் விகுவைத்லோகபாத்தாவெனும் மணவாளரை நாலிரண்டிழைகொண்டு முப்புரியான ப்ரஹ்மஸூத்ரபந்தத்

தோடேவரிப்பிகக, பரமபருடன் ஸைகவகாண்டபின் சதுாத்தியில் புக்கு இடையீடுநடுகேகிடக்கும் நாள கழிதது ஜன்மபூமியைவிட்டகன்று சூழ்விசும்பிறபடியே உடன்சேன்றுகுடைநதுநிராடிவியன் துழாய அஞசனததின்நிறு நானப்போடி பீதகவாடைபல்கலன் கோணடு நோககியலஙகரிததுப பல்லாண்டிசைததுக கவரிசெயய நிறைகுடவிளககமேநதி யிளமங்கையரேதிரகோளள வைகுநதம் புககிருந்து வாய்மருததுப பெருஙகளிசசியாக வானவாபோகமுண்டு, கோப்புடைய கோட்டுக்கால்கட்டில மிதிதது ஆரோஹிதது, பரதாக்ரூரமாருதிகளைப பரிஷ்வஙகிதத மணிமிகுமாாபிலே குருமாமணி யாயணையும் வஸ்துவுககு மணிவலலிபபேச்சு வநதேறியன்று"—

*என்று. ஆசாரயன, திருமநதரதவாரா ஸவரூபஞான தனையுணடாககினபோது இவவாதமாவுககு ஸதபாவமாகையாலே, விதையை மாதாவாககொணடு இவவாதமவஸதுவை ஜனிபபிதது, போகயபதார்ததமான திருமநதரததாலே அநநயாரஹசேஷதவாதிகளாலே லக்ஷமீஸதருசமாக வளாததுககொண்டு போநத, ஸவரூபபோதபாதகனுய ஒரு தசையிலும கைவிடாதே ஹிதைஷியாய உஜஜீவபரனுயககொணடு மோக்ஷஹேதுவாயிருக்கையாலே, ஆதமரக்ஷகனை ஆசாரயனுகிற பிதா, அனயசேஷதவபரஸஙகம பராவாதபடி,* ‘**पतिंविश्वस्य**’ *என்று விசவபதியாயும,* ‘**कौसल्यालोक-भर्तारं**’ *என்று ஸாவலோகநாயகனுயச சொலலபபடுகிற மணவாளனை எட்டு அக்ஷரமாய மூனறு பதமாய ஈசுவரஸம்பந்தப்ரகாசகமான திருமநதரமாகிற மஙகளஸூததரபநததோடே* ‘**पाणिंगृह्णीष्व पाणिना**’ *எனகிறபடி வரிககும்படிபணணி, பரமபுருஷனை மணவாளா பரிகாஹிததபினபு, விவாஹாநநதரம சேஷஹோமபாயநதமான நாலுநாடகளிலும அகலுதலும அணுகுதலுமறறு அநநயாாஹசேஷதவானுகுணமான பரிமாறறததுககு ஆஹமெனனு மவைவ பரகாசிபபிததுககொணடிருககுமாபபோலே, பரணவோகதமான அநந்யாாஹசேஷதவததிலகுறைவற அஙகிகரிக்கையாலும, ததனுகுணமாகக் கிடடிப் பரிமாறப்பெருமையாலும அணுகுதலும அகலுதலுமற்று, கைஙகர்யபராரததனையோடே செலலும சரமசதுர்ததியிலே உடபுககு, தமபதிகள இருவரும் ஒரே படுககையிலேயிருநதுமகூட அனயோநயஸபாசயோநயதாலலாதபடி*

அனுபவிக்கும போகததை புஜித்து, பாதருஸமலேஷததுக்குப் படுககையிலே ஏறுமாபபோலே, திவயபர்யஙகததிலே பாதபீடத திலே அடியிட்டேறி, ஸ்ரீபரதாழவானையும அகரூரனையும திரு வடியையும ஆதரிதது அணைத்துககொணட, ஸ்ரீ கௌஸதுபம நிறம் பெறுமபடியழகியதான திருமார்பிலே 'குருமாமணிப்பூண்' என்று ச்லாகயமாய ஈசுவரத்வ சின்னமான ஸ்ரீ கௌஸதுபம போலே போகயமாய் தேஜஸகரமாயககொணடு அணைகிற ஆத்ம வஸ்துவுககு, கொடிபோன்றவள என்கிற ஸதரீதவ ப்ரயுகதமாய வரும பேச்சு வந்தேறி யன்று ஸவாபாவிகம எனறபடி. இவவிதம ஸ்வாபாவிகமான பாதருபார்யாஸமபந்தஞானம பிறககவே அகங் யார் ஹஸங்கையானது அறறுபபோம.

## (5) ஜஞாத்ருஜஞேய ஸம்பநதம்.

பரமாதமாவே அறியத்தகுநதவனென்றும், 'அவனையறிப வன ஜீவாதமாவெனறும காட்டும் இநத ஐந்தாவதான ஜஞாதரு ஜஞேயஸமபந்தம. உகாரார்ததமான பாதருபாரயாஸமபநதானு ஸநதானததுககு அபேக்ஷிதம இநத ஜஞாதருதவம. அசித தைக்காட்டிலும் வேறுபடடு ஸமபநதஙகளையும ஜஞேயததையு மறிந்து ஜ்ஞேயததுக்கு அதீனமாய, ஜஞேயபரயோஜனமுமா யிருககும ஜ்ஞாதருத்வம எனறு காட்டுமிந்தஸமபநதம். இது ப்ரண வததில மூனறுவது அக்ஷரமான மகாரததைபபறறியிருககிறது. அநந்யாரஹமான சேஷதவதாமததுககு பரதிஸமபநதியான சேஷீ அபேக்ஷிககப்படுவதுபோல, சேஷதவததிறகு ஆசரயமான சேஷ வஸ்துவும அபேக்ஷிதமாகையாலே கீழ அனுகதமான ஆசர யத்தை வ்யஞசனரூபமான மகாரம் சொலலுகிறது. கவாக்கத தாலே பருதிவயாதி பூதஙகளும சவாக்கத்தாலே வாக முதலிய கர்மேந்திரியங்களும, டவாக்கததாலே செவி முதலிய ஜஞானேந திரியஙகளும், தவாக்கததாலே கநதாதி விஷயஙகளும, பகாரத் தாலே மனஸ்ஸும, பகாரததாலே அஹஙகாரமும, பகாரததா லும பகாரத்தாலும் மஹானும ப்ரகருதியும சொலலபபடடன.

மகாரத்தாலே இருபத்தைந்தாவதான ஜீவாத்மா சொல்லப்படுகிறு
னென்று பாத்மோத்தரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. **मन ज्ञाने**
அல்லது **मन-अवबोधने** என்கிற தாதுவிலிருந்து நிஷ்பன்னமாகையா
லே, ஞானவாசியாயுமிருக்கையாலே ‘சென்றுசென்றுபரம்பரமாய்’
என்று தேஹேந்த்ரியங்களைக்காட்டில் விலக்ஷணமாயும், "**विज्ञा-
नात्मापुरुषः**" "**विज्ञातारमरेकेन विजानीयात्**" என்கிறபடியே ஜ்ஞான
ஸ்வரூபமாயும் ஜ்ஞானகுணகனுமிருக்கிற ஜீவாத்மாவை இந்த
மகாரம் சொல்லுகிறது. கீழ் சொல்லப்பட்ட சேஷத்வம் ஸர்
வாத்ம ஸாதாரணமாகையால், பத்தமுக்தநித்யர்களாகிற மூன்று
வித ஜீவவர்க்கத்தையும் குறிக்கிறது. இந்த மகாரம் லுப்தமான
ப்ரதமைகவசனமாய் ஜாத்யேகவசனமாயுமிருப்பதால், இந்த
ஜ்ஞானவாசகமான சப்தமானது ஜ்ஞானைகநிரூபணீயமான ஆத்மா
வைச் சொல்லுகிறது. "**तद्गुणसारत्वात् तद्व्यपदेशः प्राज्ञवत्**"
ஈச்வரன் ஆனந்தகுணஸாரனாகையாலே அவனுக்கு ஆனந்தவ்யப
தேசம்போலே, ஜீவனும் ஞானகுணஸாரனாகையாலே அவனுக்கு
ஞானவ்யபதேசமென்றும், **ज्ञोऽत एव** ஆத்மஜ்ஞானமாத்ரமல்லாமல்
ஜ்ஞாத்ருஸ்வரூபன் ஜ்ஞானவடிவாய்மட்டுமல்லாமல் ஜ்ஞானத்தை
குணமாகவுமுடையவன் என்றும் ச்ருதி ஜ்ஞாதாவாகவும் சொல்லு
கையாலே ஆத்மா ஜ்ஞாதாவாயுமிருக்குமென்று வேதாந்தஸூத்ரங்
களில் சொல்லப்படுகிறது. ஜ்ஞாதா என்றபோதே கர்த்தா
போக்தா என்னுமிடம் சொல்லிற்றாயிற்று. ஏனென்றால் கர்த்
ருத்வபோக்த்ருத்வங்கள் ஜ்ஞானாவஸ்தா விசேஷங்கள். இந்த
ஜ்ஞாத்ருத்வஸாமாநாதிகரண்யத்தாலே இவ்வாத்மாவினுடைய அஹமர்த்
தத்வம் சொல்லப்பட்டது. எங்ஙனேயெனில்:—"**अहमर्थो न चेदात्मा
प्रत्यक्त्वं नात्मनो भवेत्। अहं बुद्ध्या परागर्थात् प्रत्यगर्थो हि भिद्यते॥**"
‘ஆத்மா அஹமர்த்தமன்றாகில், ஆத்மாவுக்கு ஸ்வயம்ப்ரகாசத்வ
ரூபமான ப்ரத்யக்த்வம் இல்லாமல் போய்விடும். அஹம் புத்தி
யாலேயன்றோ பாஹ்யமான பராகர்த்தங்களிற்காட்டில் ஆந்தரமான
ப்ரத்யகர்த்தம் வேறாக அறியப்படுகிறது"—என்கிற பூர்வாசார்ய

வசனத்தாலே, ஆத்மாவுக்கு பாரார்த்த்யாவர்த்தகமான ஸ்வரூபம் அஹம்புத்திபோத்யத்வம். அல்லாதபோது இவனுடைய ஸ்வஸ்மைவேத்யத்வமும் ஸித்திக்காது. ஆகையாலே ஸ்வயம் ப்ரகாசனாய், ஜ்ஞாதாவான ஆத்மாவுக்கு ஸர்வாவஸ்தையிலும் அஹமர்த்தத்வம் அவசியம் கொள்ளவேணும். अहम् என்றிவை முதலான வாக்யங்களாலே மோக்ஷத்தசையிலும் அஹம் சப்தவிஷயத்வம் காண்கிறோம். ஆகையாலே 'अकारार्थायैवस्वमहं' அகாரார்த்தபூதனான ஈச்வரனுக்கே சேஷபூதன் நான் என்று, மகாரார்த்தத்தை அஹம் சப்தத்தாலே பட்டர் அருளிச்செய்தார். மணத்தால் பூவையும், ஒளியால் ரத்னத்தையும் நாம் ஆதரிப்பதுபோல், பகவானுக்கு சேஷமென்பதால் ஆத்மாவை சாஸ்த்ரங்களும் ரிஷிகளும் ஆழ்வார்களும் ஆசார்யர்களும் ஆதரித்தார்கள். 'यस्यास्मि-नतमनरेमि' 'अस्तिब्रह्मेतिचेद्वेद सन्तमेन ततोविदुः' என்கிற பகவானுக்கு நான் சேஷபூதனே அவனை விட்டு நான் விலகமாட்டேன். ப்ரஹ்ம ஞானமுள்ளவன் ஒருவனையே - அதாவது சேஷத்வஞானமுள்ள ஒருவனையே இருப்பவனாயும், அதில்லாதவனை, இல்லாதவன் அஸத் என்று வேதசாஸ்த்ரமும், 'ज्ञानानन्दमयस्त्वात्मा शेषो हि परमात्मनः । योह्येनं पुरुषं वेद देवा अपि नतं विदु' பகவச்சேஷத்வஜ்ஞானமுடையவனுடைய மஹிமையானது தேவர்களாலும் அளவிடமுடியாது— என்று ரிஷிகளும், "தொழுது எழு என்மனனே" என்று ஆழ்வார்களும், 'तवदास्यसुखैकसंगिनां' உன்னுடைய அடிமையாகிற இன்பமொன்றிலேயே விருப்பமுள்ள மஹான்களுடைய திருமாளிகைகளில் அடியேனுக்குப் புழுவாகப் பிறப்பது ஆயிடுக. ஜீவபரஸ்வரூபத்தை உள்ளபடியுணர்ந்தவர்கள் எம்பெருமான் திறத்தில் சேஷத்வத்தோடு நிற்கமாட்டார்கள். பாகவதசேஷத்வபர்யந்தம் போனால்தான் சேஷத்வம் ரஸிக்கும், என்று ஆசார்யர்களும், சேஷத்வத்தால் ஜீவனையாதரித்துப் போனார்கள். இவ்விதம் சேஷத்வத்திற்கு ஆச்ரயமல்லாமற்போனால் 'உயிரினாற்குறைவிலம்' என்றபடி ஆத்ம த்யாஜ்யமாகும்,

"கொள்ளும் பயனொன்றில்லாத கொங்கைதன்னைக் கிழங்கோடும் அள்ளிப்பறித்திட்டு அவன் மார்பிலெறிந்து என்னழலைத் தீர்வனே"—என்று ஆண்டாளும் பகவதனுபவத்திற்கு உபயுக்தமாகாத ஆத்மா - ஆத்மீயங்களெல்லாம், அழுந்த பக்தியுடையவர்களுக்கு உபேக்ஷிக்கப்படும் என்பதைக்காட்டினாள். **'न देहं न प्राणान्'** 'உனக்கு சேஷப்பட்டிருக்கையாகிற செல்வத்திற்குப் புறம்பான அதாவது உனக்கு சேஷப்படாத உடம்பை ஒரு க்ஷணமும் பொறுக்கமாட்டேன். அப்படிப்பட்ட ப்ராணனையும் பொறுக்கமாட்டேன் எல்லாரும் விரும்பக்கூடிய ஸுகத்தையும் ஸஹிக்கமாட்டேன் ஆத்மாவையும் ஸஹிக்கமாட்டேன். சேஷத்வசூன்யமான வேறு எதையும் ஸஹிக்கமாட்டேன். சேஷத்வசூன்யமான இவையெல்லாம் உருமாய்ந்து போகட்டும்'—என்று ஸ்ரீ ஆளவந்தாரும் இதையடியொற்றி பகவத் கைங்கர்யத்துக்கு உறுப்பல்லாதது முமுக்ஷுக்களுக்கு த்யாஜ்யம் என்கிற சாஸ்த்ரார்த்தத்தை வெளியிட்டார். ஆத்மஸ்வரூபமானது பகவதனந்யார்ஹ சேஷத்வைகநிரூபணீயமாயிருக்குமென்று, சேஷத்வத்தில் ஊற்றம் ஏற்ற சேஷத்வத்தை முதலில் சொல்லி பிறகு ஆத்மாவை மகாரத்தால் சொல்லுகிறது ப்ரணவம். இப்படி ஜ்ஞாதாவான ஆத்மாவுக்கு ஜ்ஞேயமான அறியத்தக்க பொருள் பரமாத்மா ஒருவனேதான் என்பதை இந்த ஸம்பந்தம் காட்டுகிறது. ஜ்ஞானம் என்பது உலகில் பலவிதம். ஆயுர்வேதம் சோதிடம், தர்க்கசாஸ்த்ரம், வானசாஸ்த்ரம், மோட்டார் வண்டி ஆகாய விமானம் முதலியன செய்யும்படியான ஜ்ஞானம், ஆகாச வாணி விஷயங்களில் ஜ்ஞானம், வெடிகுண்டுகளால் ஜகத்தை அழிப்பதற்குள்ள ஞானம் முதலியவற்றில் ஒவ்வொன்றில் யோக்யதை பெற்றவனும் தன்னை ஜ்ஞானியென்று நினைத்துக்கொள்ளுகிறான். ஆனால் உண்மையான ஜ்ஞானம் எது? ஜ்ஞானி என்பான் எவன்? என்கிற கேள்விக்கு சாஸ்த்ரங்கள் பதில் கூறுகின்றன **'तत्कर्म यन्न बन्धाय सा विद्या या विमुक्तये । आयासायापरं कर्म विद्यान्या शिल्पनैपुणम् ॥'** 'ஸம்ஸாரத்தில் அகப்படுவதற்குக் காரண

மாகாத கர்மம் எதுவோ அதுதான கர்மம். முக்தி பெறுவதற்கு உறுப்பானஜ்ஞானம எதுவோ அதுதான ஜ்ஞானம. கீழசசொனன படியிலலாத கர்மம் வினை ஆயாஸரூபமேயாம. பகவத்விஷயக மல்லாத ஜ்ஞானம செருபபுககுததககறறதுபோலேயாம' எனறும; 'संज्ञायते येनतदस्तदोषं शुद्धं परं निर्मलमेकरूपम् । संदृश्यते वाप्यधिगम्यते वा तज्ज्ञानमज्ञानमतोऽन्यदुक्तम् ॥' 'சாஸதரஜனயமான எநத ஜ்ஞானத தால் பகவான் அறியபபடுகிறானோ, பகுததறிவினலுணடாகிய எநத ஜ்ஞானததினல பகவான பாரககப்படுகிறானோ, பக்திரூபமாயும தாசனஸமாகாரமுமான எநத ஜ்ஞானததினல பகவான அடையப்படுகிறானோ, அதுவேதான ஜ்ஞானம - மறறவிதமான ஜ்ஞானங கள அஜ்ஞானமேயாம' – எனறும பராசரபகவான அருளிச் செயதார. "मोक्षेधीः ज्ञानमन्यत्रविज्ञानशिल्पशास्त्रयो" 'மோக்ஷவிஷயமான புத்திதான் ஜ்ஞானமெனபபடும மறற சாஸ்தரஙகளிலும் சிலபசாஸதரஙகளிலும ஜ்ஞானம விஜ்ஞானம எனப்படும்'–என்று அமரஸிமஹனும சொனனான. "ஒண்டாமரையாள் கேள்வன் ஒருவனையே நோக்கும் உணர்வு"—ஜ்ஞானமானது - அழகிய தாமரைப்பூவில் பிறநத பிராட்டிககு வலலபனன பெருமானை ஒருவனையே சென்று பறறும என்று பொயகையாழ்வார நிஷகர்ஷித தார. இநத சேஷதவஜ்ஞானமில்லாதபோது ஆதமாபஹாரரூபமான ஸ்வாதந்த்ரயபுததி நடக்கையாலே ஸ்வரூபமழிநதுவிடும. ஆகவே இநத ஜ்ஞாதருஜ்ஞேயஸமபநதஜ்ஞானம பிறக்கவே மறறவை அறியததககவையோ எனகிற சஙகையறும். இவவிதம் பரணவத்தால இநத ஐநதுவிதஸம்பநதமும - சொலலபபட்டது.

## (6) ஸ்வஸ்வாமிபாவஸம்பந்தம்.

கீழசசொனன சேஷதவத்துககு ஆசரயமான ஆதமாவினுடைய ஜ்ஞாதருதவமானது நல்லதைப பறறுகைககும கெட்டதை விடுவதறகும் ஹேதுவாயிருக்கும். அநதநத ஹேயஙகளை விடுகையாலும உபாதேயஙகளைப பறறுகையாலும உணடான சிகீர்ஷை (செயய இசசை) காதருதவமடியாயிருககும. கர்ததாவுககே சிகீர்ஷையுள்ளது. அநத காதருத்வமானது ஸ்வாதநதா

யத்தோடே கூடியிருக்கும் என்று சொல்லவேண்டும். ஏனென்றால "स्वतन्त्रःकर्ता" 'கர்த்தாவாகிய ஸ்வதந்த்ரனாகவேண்டும்' என்று வ்யாகரணசாஸ்த்ரம் சொல்லுகிறது. தவிர இதைச் செய்யவேண்டும், இதைத்தவிர்க்கவேண்டும் என்று விதிநிஷேத ரூபமான சாஸ்த்ரங்களில் ப்ரவ்ருத்திநிவ்ருத்திகளுக்கு சக்தனானவனே கர்த்தாவாகநியோகிக்கப்படுவான்=ஏவப்படுவான். அல்லாத போது ஸகல சாஸ்த்ரங்களும் நிஷ்ப்ரயோஜனமாயவிடும். 'कर्ता शास्त्रार्थवत्वात्' (2–3–33) என்று சாஸ்த்ரத்துக்கு ப்ரயோஜனம் வேண்டுகையாலே, ஜீவாத்மாவானவன் கர்த்தாவாகவேணும் என்று வேதாந்த ஸூத்ரத்திலும் சொல்லப்பட்டது. ஆகையாலே கர்த்ருத்வநிபந்தனமான ஸ்வாதந்த்ர்யத்தை ஸ்வரூபமாக வுடைய ஜீவனுக்குக் கீழ்ச்சொன்ன சேஷத்வமானது யுக்தமல்லவே! என்கிற சங்கை உண்டாகிறது. இந்த சங்கையை மந்த்ரசேஷமான நமச்சப்தம் நிவ்ருத்தி செய்து ஸ்வஸ்வாமி ஸம்பந்தத்தைத் தெரியப்படுத்துகிறது. இவ்வாத்மாவினுடைய ஸ்வார்த்தமான கர்த்ருத்வத்தை நிஷேதித்துக்கொண்டு அத்யந்த பாரதந்த்ர்யத்தை ப்ரகாசிப்பிக்கையாலே அந்த சங்கையைக் கழித்துக்கொடுக்கிறது. 'परात्तु तच्छ्रुतेः' ஜீவாத்மாவின் கர்த்ருத்வம் பரமாத்மாவினால் ஏற்படுகிறது. பரமாத்மாவின் ப்ரயோஜனத்துக்காகவேயல்லாமல் ஜீவாத்மாவின் ஸ்வப்ரயோஜனத்திற்காக அல்ல. ஸ்வார்த்தமான கர்த்ருத்வத்தை நம: என்கிறது எப்படி நிஷேதிக்கிறது என்றால ம: என்று கீழ்ச்சொல்லப்பட்ட மகாரவ்யஞ்ஜனத்தில் ஷஷ்டியில் ஏகவசனமாய், மகாரவாச்யனான அஹமாத்தபூதனான ஆத்மாவினுடைய மமத்வத்தைச்சொல்லி அதாவது தனக்கு உரியன் என்பதைச் சொல்லி நகாரத்தாலே அதை நிஷேதிக்கிறது. அதாவது நமம என்று தன்க்கு உரியன் அன்று என்று சொல்லுகிறது. ஆனால் தாதர்த்யவிரோதியான ஸ்வார்த்தத்தைச் சொல்லுகிற ம: என்கிறபதம் ஷஷ்டயந்தமாகாமல் சதுர்த்யந்தமல்லவா ஆகவேணும் ஏனென்றால

முன்பின் பதங்களான ‘ஆய’ ‘நாராயணாய’ என்கிற பதங்கள் சதுர்த்யந்தமாகவன்றோ இருக்கின்றன. முன்பின் பதங்களையனுஸரித்து மஹ்யம் என்று இதுவும் இருக்கவேணுமே. இல்லாவிடில் வாக்யத்துக்கு வைரூப்யம் வரும் ஆகையால் மம என்று ஷஷ்ட்யந்தத்வம் சேராதே’ என்று ஆக்ஷேபம் வரில் அப்படியன்று, இந்த ஷஷ்டீபானது ஸம்பந்தஸாமான்யத்தைச் சொல்லுகையாலே தாதர்த்யத்தையும் காட்டும் ஆகையாலேதான் நம:சப்தத்தை விவரிக்கும்போது ‘अतमह्यं न’ என்று ஷஷ்டிக்குச் சதுர்த்தி பொருளாகப் பட்டர் அருளிச்செய்தது. இந்த நம: என்கிற பதத்தில் முதலில் இருக்கிற ந என்கிற நஞ்ஞாலே ‘விடுமின் முற்றவும்’ என்னும்படிபோலே, த்யாஜ்யஸ்வரூபநிரூபணம் பண்ணுவதற்கு முன்னே த்யாகத்தைப் ப்ரதிபாதிக்கிறது. கீழே ஆத்மஸ்வரூபம் பகவதநந்யார்ஹசேஷத்வைகநிரூபணீயமாயிருக்குமென்று சேஷத்வத்தில் ஊற்றம் தோன்ற, ப்ரணவத்திலே, ஜீவாத்மஸ்வரூபத்தைப் ப்ரதிபாதிப்பதற்கு, முன்பே சேஷத்வத்தைப் ப்ரதிபாதித்தாப்போலே, இவ்விடத்திலும் விரோதிஸ்வரூபமானது நிஷித்தத்தைக் நிரூபணீயமாயிருக்குமென்று ப்ரகாசிப்பிக்கைக்காக, நிஷித்தஸ்வரூபப்ரதிபாதனத்துக்கு முன்பே நிஷேதப்ரதிபாதனம் பண்ணுகிறது. ஈச்வரனுக்கு கௌஸ்துபம்போல் பெருஹா விஷயமான ஜீவன் அநாதிகாலம் மௌளித்துப்போந்தது ஸ்வரூபவிரோதியான அஹங்காரத்தாலும் மமகாரத்தாலும் ‘अहमम्’ என்று ஜீவன் ஈச்வரனுக்கு போக்யமாம்போது ‘நீநும்தேன்றிவை வோமுதலமாபத்து’ என்கிறபடியே அஹங்காரமமகாரங்கள் கழியாதபோது ஈச்வரஸம்பந்தயோக்யதையேயில்லை. ‘யானே யென்றனதே என்றிருந்தேன்’ என்று அஹங்காரமமகாரங்களிரண்டையுமனுஸந்தித்து ‘யானே நீ யென்னுடைமையும் நீ’ என்று பிறகு அவற்றினுடைய நிவ்ருத்தியையும் ஆழ்வார் அனுஸந்தித்தார். அஹங்காரம் போனபோதே மமகாரமும் போய்விடும் இந்த ஸ்வரூப விரோதியான அஹங்காரமமகாரம் போல உபாயவிரோதியும் ப்ராப்யவிரோதியும் கழியவேணும். உபாயவிரோதியாவது தானே தனக்கு ரக்ஷகன் என்றிருக்கை.

அது கழிகையாவது "களைவாய் துன்பம் களையாதொழிவாய் களை கண் மற்றிலேன்" - நீ என் துக்கத்தைப்போக்கினாலும் ஸரி போக்காமற்போனாலும் ஸரி உன்னைத் தவிர வேறு ரக்ஷகவஸ்து இல்லை என்றிருக்கை. ப்ராப்யவிரோதியாவது ஸ்வப்ரயோஜன புத்தி. அது கழிகையாவது "மற்றைநங்காமங்கள் மாற்று"— உனக்குப்புறம்பான எங்களுடைய ஆசையைப் போக்கு என்றிருக்கை. 'स्वत्वमात्मनि संजातं स्वामित्वं ब्रह्मणिस्थितम्' – என்று சொல்லுகிறபடியே எப்போதும் ஜீவாத்மா பரமாத்மாவின் உடைமை, பரமாத்மா சொத்துக்கு உடையவன் — என்று சொல்லுவதால் சொத்துக்கு ஸ்வரக்ஷணகர்த்ருத்வமில்லை யென்றும், ஸ்வாமிக்கே அது தொழில் என்றும், சொத்தின் ப்ரயோஜனம் ஸ்வாமிக்கே உள்ளதென்றும் காட்டுகிறது இந்த ஸ்வஸ்வாமி ஸம்பந்தம். இந்த ஸம்பந்தஜ்ஞானம் பிறக்கவே ஸ்வாதந்த்ர்ய சங்கையறும்.

## (7) சரீரசரீரிஸம்பந்தம்.

கீழ் ப்ரணவத்தாலும் நமச்சப்தத்தாலும் சொல்லப்பட்ட ஜீவாத்மாவின் அத்யந்தபாரதந்த்ரயபர்யந்தமான பகவச்சேஷத்வமானது, பகவானுக்கு ஜீவன் சரீரமாய் நின்றொழிய பொருந்தாமையாலே, அந்த சேஷத்வபாரதந்த்ர்யங்களை நிரூபிப்பதற்காக ஜீவபரர்களுடைய சரீராத்மஸம்பந்தத்தை ப்ரகாசிப்பிக்கிறது மேலிருக்கும் நாராயணபதம். நாராயணபதத்தில் பஹுவ்ரீஹிஸமாஸத்தில் नाराः अयनं यस्य सः வ்யாப்யமான நாரங்கள் சரீரமாய் அந்தர்வ்யாப்தியாலே வ்யாபகஸ்வரூபம் சரீரியாகத் தோன்றும். நர: - நார: - நாரா: என்று நித்யபதார்த்தத்தையும், அதினுடையஸமூஹத்தையும், ஸமூஹபாஹுள்யத்தையும் சொல்லுகிறது. ப்ரக்ருதிபுருஷகாலங்களோடு, பரமபதத்தோடு, நித்யமுக்தவர்க்கத்தோடு, சத்ரசாமராதிபரிச்சதங்களோடு, ஆயுதாபரணங்களோடு, பெரியபிராட்டியார் முதலான நாச்சிமார்களோடு, திவ்யமங்களவிக்ரஹத்தோடு ஸாக்ஷாத்ஸம்பந்தம் நாரச்சப்தம் ப்ரதிபாதிக்கிறது. 'எண்பெருக்கந்நலத்தொண்

பொருள்' என்றும் 'எண்ணமுடியாதவர்களாய ஜ்ஞானம் ஆனந்தம் என்கிற குணங்களையுடையவர்களாய், நித்யமாய விலக்ஷணமான ஸ்வரூபத்தையுடையவர்களான ஸகல ஆத்மாக்களையுமுடையவனும்' என்றும், 'நாரணன்முழுவேழுலகுக்கும்நாதன்' என்றும் அருளிச்செய்கையாலே சேதநாசேதநங்களிரண்டும் நாரசப்தவாச்யமாகக்கடவது. நரன் பக்கல் நின்றும் பிறந்த தத்வங்களைப் பிறப்பாலே நாரங்களாக அறிகிறார்கள். அவைதான் அவனுக்கு வாஸஸ்தானமாகையாலே நாராயணன் என்றறியப்பட்டான்' என்கையால் நாரசப்தமானது கார்யபூதங்களான ஸர்வதத்வங்களையும் ஸ்பஷ்டமாகச் சொல்லுகிறது. இவ்விடத்தில் நரசப்தம் நாராயணனுக்குப்பர்யாயமான திருநாமம். 'जह्नुर्नारायणो नरः' என்று ஸஹஸ்ரநாமத்திலே திருநாமமாகச் சொல்லப்பட்டது. இப்படி காரணபூதனான நாராயணனுக்கு, கார்யபூதமான ஸமஸ்தவஸ்துக்களிலும் அநுப்ரவேசரூபமான வ்யாப்தியாலே, நாமரூபவ்யாகரணமுண்டாகையால் அந்தந்த பதார்த்தங்களில் அந்தராத்மதயா வ்யாப்தியாலே அவற்றை சரீரமாக உடையனாகையாலே, அந்தந்த பதார்த்தங்கள் தானேயாம்படி ப்ரகாசிப்பிக்கிறகையும், அவற்றுக்கு வாசகமான சப்தங்களுக்குத் தான் வாச்யனாகிறகையுமாகிற ப்ரகாரம் ச்ருதியிலே சொல்லப்படுகிறது. "நான் இந்த தேஜோப்பன்னரூபமான தத்வங்கள் மூன்றையும் இந்த ஜீவனை ப்ரகாரமாகக் கொண்டு அநுப்ரவேசித்து நாமரூபங்களைப் பண்ணுவேன்"— என்று ஸங்கல்பிக்கையாலே, இந்த ஜகத்தெல்லாம் காரணமான ஸச்சப்தவாச்ய வஸ்துவை ஆத்மாவாக உடைத்தாயிருக்கும், அது ஸத்யம், அவன் ஆத்மா, இது சரீரம். த்வம் சப்தவாச்யமும் அந்த காரணவஸ்துவென்றிட்டு நீயும் அதுவேயென்றும் 'யாவனொருவன் ப்ருதிவிக்குள்ளே வர்த்திக்கிறான், எவனுக்கு ப்ருதிவி சரீரமாயிருக்கிறதோ' என்று ஆரம்பித்து, ஜலம் அக்நி வாயு, ஆகாசம், ஸூர்யன், சந்த்ரன், நக்ஷத்ரம், ப்ராணன், வாக் முதலிய இந்த்ரி

யங்கள், மனஸ் முதலிய ஸமஸ்த அசித்வஸ்துக்களையும் அவனுக்கு சரீரம் என்று சொல்லி, 'य आत्मनितिष्ठन् यस्यात्माशरीरं' – 'यो विज्ञाने तिष्ठन् यस्य विज्ञानं शरीरं' 'எவன் ஜீவாத்மாவுக்குள் இருந்து கொண்டு அடக்கி ஆளுகின்றானோ எவனுக்கு ஜீவாத்மா சரீரமோ' என்று சேதனனையும் அசேதனத்தையும் பரமாத்மாவுக்கு சரீரமென்று தனித்தனியாகவும் சொல்லியிருப்பதால் சரீரமான யாவற்றையும் 'உடல்மிசைஉயிரெனக்கரந்தெங்கும்பரந்துளன்' என்றபடியே அனுப்ரவேசித்து அவைகளுக்கு ஆத்மாவாக பகவான் வ்யாபித்து நிற்கிறான் என்று ஏற்படுகிறது. ஸ்வதஸ்ஸித்தமான ஸர்வாவஸ்தாவ்யாப்தியையுடைய ஸர்வேச்வரனுக்கு அனுப்ரவேசமாவது - அந்தந்த கார்யோத்பத்தியிலே அபூர்வாவஸ்தாரூபமான விசேஷவ்யாப்தியைக் குறிக்கிறது. இந்த சரீராத்ம ஸம்பந்தத்தால், கீழ்ச்சொன்ன ஸ்வஸ்வாமிஸம்பந்தமானது, வீடு, வயல், தோட்டம் முதலிய சொத்துக்கள்போல உடையவனை விட்டுப்பிரிந்த நிலையுள்ளவையன்றிக்கே ஸ்வாமியை விட்டுப் பிரிக்கமுடியாதவையான உடைமைகளைப் பற்றியதாயிருக்கும் என்று ஸித்திக்கிறது. இந்த சரீராத்மஸம்பந்தமானது நம் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு ப்ரதாநப்ரதிதந்த்ரம். அதாவது மற்றுமுள்ள ஸித்தாந்திகளொருவரும் இசையாதே நம்முடைய ஸித்தாந்தத்திற்கே அஸாதாரணமான அர்த்தம். நம்முடைய ஸித்தாந்தம் ஒன்றில்தான் ஸகல ச்ருதிவாக்யங்களும் துல்யபலமானவை. நிர்விசேஷாத்வைதிகளுக்கு, ஜீவனுக்கும் ப்ரஹ்மத்திற்கும் ஐக்யம் சொல்லுகிறாப்போல் தோன்றும் அபேத ச்ருதிகளும், ஆத்மாவுக்கு யாதொரு குணமுமில்லையென்று சொல்லுகிறாப்போல தோன்றும் நிர்க்குணச்ருதிகளும் முக்கியமானவை. பேதச்ருதிகளும் ஸகுணச்ருதிகளும் முக்கியமல்ல. அவை வ்யவஹாரதசையில் கல்பிக்கப்பட்ட பேதங்களையும் குணங்களையும் சொல்லுகின்றன. த்வைதவாதிகளுக்கு அபேத ச்ருதிகள் முக்கியமல்ல. பேதச்ருதிகள் மட்டுமே ப்ரபலங்கள். அபேதச்ருதிகள் துர்ப்பலங்கள். விசிஷ்டாத்வைதிகளான நமக்கோ

யென்ற சேதநாசேதநங்களுக்கும் ஈச்வரனுக்கும் உண்டான சரீராத்மபாவஸம்பந்தத்தைச் சொல்லுகிற கடகச்ருதிகளின் பலத்தால் எல்லா ச்ருதிகளும் துல்யமான பலமுள்ளவை. ஸமஸ்த கல்யாணகுணங்களையும் பகவானிடத்திலிருப்பதாக போதிப்பதால் ஸகுணச்ருதிகளும், கெட்ட குணங்கள் ஒன்றுமில்லையென்று சொல்லுவதால் நிர்க்குணச்ருதிகளும், அத்யந்த பின்னங்களான சித், அசித், ஈச்வரன் என்கிற இம்மூன்று தத்வங்களின் ஸ்வரூபத்தைத் தனித்தனியாகப் பிரித்துச் சொல்லுவதால் பேதச்ருதிகளும் சரீரவிசிஷ்டமான பரமாத்மாவை, விசிஷ்டவேஷம் ஒன்று என்று விவக்ஷிப்பதால் அபேதச்ருதிகளும் ஸ்வரஸங்களாய ஸர்வச்ருதி ஸாமரஸ்யமுண்டாகையால் விசிஷ்டவேஷத்தால் தத்வம் ஒன்று என்று சொல்லக் குறையில்லை '**श्रीमन्नारायण एव चिदचिद्विशिष्ट अद्वैतं तत्त्व**' என்பது நம்முடைய ஸித்தாந்தத்தின் சுருக்கம். இதுவே விசிஷ்டாத்வைத சப்தத்தின் பொருள். **विशिष्टस्य अद्वैतं** = விசிஷ்டாத்வைதமென்று இந்த சரீராத்மஸம்பந்தத்தையிட்டு சில இடங்களில் தத்வம் ஒன்றாகவும் மற்ற இடங்களில் தத்வம் அநேகமாகவும் அர்த்தத்தை அநுஸரித்து அந்தந்த அபிப்பிராயத்துக்குத் தக்கவாறு ச்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே இந்த சரீரசரீரிஸம்பந்தஜ்ஞானம் பிறக்கவே ஜீவபரஸ்வரூபைக்யசங்கையறும்.

## (8) தார்யதாரக ஆதாராதேயஸம்பந்தம்.

ஆதாராதேயஸம்பந்தம். இது நாராயணதத்புருஷஸமாஸத்தினாலே ஸித்தமாயும், கீழ்ச்சொன்ன சரீராத்ம ஸம்பந்தத்திற்கு முக்கிய லக்ஷணமாயுமிருக்கும் '**नाराणां अयनं**' – 'நாரங்களுக்கு இருப்பிடம்' என்கிற ஷஷ்டீதத்புருஷஸமாஸத்தாலே, ஸர்வத்துக்குமாதாரமானவன் என்று சொல்லுகையாலே, '**उभे अस्मिन् द्यावापृथिवी अन्तरेव समाहिते उभावग्निश्च वायुश्च सूर्याचन्द्रमसावुभौ विद्युन्नक्षत्राणि यच्चास्येहास्ति यच्च नास्ति सर्वं तदस्मिन् समाहितं**' இந்த தஹராகாச சப்தவாச்யனான பரமாத்மாவின் பக்கலிலே த்யாவாப்ருதிவிகள்

இரண்டுமிருக்கும். அக்நி வாயு சந்தரன் ஸூர்யன் மின்னல் நக்ஷத்திரங்கள், இன்னும் இந்த ஜகத்தில அஸ்தி சப்தத்தால் சொல்லப்பட்ட சேதனஸமூஹமும, நாஸ்தி சப்தத்தால சொல்லப்பட்ட அசேதன வஸ்துவும இவையெல்லாம இவன பக்கலிலேயிருக்கின்றன என்றும, 'तस्मिन् लोकाः श्रिता सर्वे तदुनत्येति कश्चन' அவன பக்கலிலே எல்லா லோகங்களும ஆச்ரயித்திருக்கும; அந்த பரவஸ்துவையொழிய புறமபுபோவது ஒன்றுமில்லை-என்று சுருதியிலும 'विष्टभ्याहमिदं सर्वमेकांशेन स्थितो जगत्' (கீதை,10-42) 'यास्य-युतायुतांशे विश्वशक्तिरियंस्थिता' எவன ஒருவனுடைய ஸவரூபத்திலே பதினாயிரத்தில ஒன்றைப பதினாயிரம கூறிட்டு ஓர அம்சத்தில ஏக தேசாம்சத்தில ஸகல ஜகத்துமிருக்கிறது. என்று ப்ராணத்திலும எவனுடைய அயுதாமசாம்சத்தில ஒருகலையினுடைய அம்சத்தினுடைய அம்சத்தில விசித்ரமான சித்சித்துக்களினுடைய வேறுபாட்டையும பரவருத்தியையுமுடைத்தான இந்த ஜகத்தெல்லாம இருக்கிறதோ என்கிற ஸ்ரீ ஆளவந்தார வசனத்தாலும, அபரிச்சின்னாகாரமாய ஆநந்தஞானசசுடராகி அகலம கீழமேலளவிறந்த பரமாத்மஸவரூபத்தின ஏகதேசத்தில, ஸ்வதஃநித்யமாயும், ப்ரவாஹதஃநித்யமாயும, உபயவிபூதயந்தாகதமான ஸமஸ்தவஸ்து ஸமூஹங்களுமிருக்கும என்று சொன்னதால, பரமாத்மாவான வன தன்னைத்தவிர மற்ற எல்லா வஸ்துவுக்கும ஆதாரம என்றும, மற்ற வஸ்துக்கள ஆதேயமென்றும, சொல்லப்பட்டது. இதனால் ஈசுவரனுடைய பஹிர்வயாப்தி சொல்லப்பட்டது. நாரசப்த வாச்யங்கள தார்யமென்றும, அயநசப்தவாசயனான பகவான தாரகன் என்றும சொல்லப்பட்டது. அயநபதத்தால இந்த ஸம்பந்தம கிடைத்தது. ஆதேயத்வ - விதேயத்வ - சேஷத்வங்கள சரீரத்துக்கு லக்ஷணங்களாயும, ஆதாரத்வ-விதாயகத்வ-சேஷித்வங்கள சரீரிக்கு லக்ஷணங்களாயும சொல்லப்பட்டிருப்பதில ப்ரதானமான ஆதேயத்வ — தாரகத்வமாகிற லக்ஷணம இந்த ஸம்பந்தத்தால தோன்றுகிறது. சித அசித இவைகளின நித்யஸித்திக்குக் காரணம் இந்த ஸம்பந்தம. உலகத்தில் சரீரம சரீரியினுடைய

ஸ்வரூபாச்ரிதமுமாய் ஸங்கல்பாச்ரிதமுமாயிருக்கக் காண்கிறோம். ஜீவனிருந்தகாலமிருந்து இவன் விட்டபோது அழிகையாலே ஸ்வரூபாச்ரிதம். இவ்வாத்தம ஸங்கல்பமில்லாத ஸுஷுப்தி முதலிய அவஸ்தைகளில் நன்கு விளங்கும். விழிப்பு முதலிய அவஸ்தைகளில் ஸங்கல்பத்தாலே விழாதபடி தாங்கும்போது ஸங்கல்பாச்ரிதமென்னக்கடவது. இதில் ஸ்வரூபாச்ரிதமாயிருக்கிறபடியை ஆதேயத்வமென்றும் ஸங்கல்பாதீனமாயிருக்கிறபடியை நியாம்யத்வமென்றும் சொல்லுகிறது. ஈச்வரன் சேதனு சேதனங்களைப்பற்ற தாரகனுமாய் நியந்தாவுமாகையாவது—தன் ஸ்வரூபத்தாலும் ஸங்கல்பத்தாலும் யதார்ஹம் ஸத்தா - ஸ்திதி - ப்ரவ்ருத்திகளுக்கு ப்ரயோஜகனாயிருக்கை. இந்த தார்யதாரக ஸம்பந்தஜ்ஞானம் பிறக்கவே தாரகாந்தரஸங்கையறும்.

## (9) போகத்ருபோக்ய ஸம்பந்தம்.

இது 'நாராயணாய' என்பதில் 'ஆய' என்கிற நான்காம் வேற்றுமையிலே, அநந்யார்ஹசேஷபூதனான மகாரவாச்யனான ஜீவனுடைய ஸஹஜசேஷவ்ருத்தியிலே நானாம்படி அதில் கர்த்ருத்வ போக்த்ருத்வங்கள் சரியான பரமசேஷிக்கேயாதலால் சரீரமான சேஷபூதனுக்கு அன்று என்றிருக்கை. அதாவது ஸ்வார்த்தமான கர்த்ருத்வபோக்த்ருத்வங்கள் இல்லையென்றிருக்கை ஜீவனுக்கு ஜ்ஞாத்ருத்வம் ஸ்வாபாவிகத்தாலே கர்த்ருத்வம்போலே போக்த்ருத்வமும் பாரதந்த்ர்யத்தமாயிருக்கும். 'चतुर्थी वाशिषि' (2-3-73) இத்யாதி ஸூத்ரத்தாலே ப்ராப்தமாய சதுர்த்தியாதலால் ஸர்வஸ்வாமியான ஸர்வேச்வரன் பக்கல் இச்சேதனன் பண்ணும் வ்ருத்திவிசேஷ ப்ரார்த்தனையை ப்ரதிபாதிக்கிறது இங்கு ப்ரார்த்திக்கப்பட வேண்டிய வ்ருத்திவிசேஷமாவது, ஸ்வரூபவிருத்தங்களாயிருக்கிற புருஷார்த்தாபாஸங்களான ஐச்வர்யகைவல்யபுருஷார்த்தங்களைப் போலன்றிக்கே, உபாதேயதமமாய், ஆத்மாவுக்கு நித்யஸித்தமாய பகவானுடைய முகவிலாஸத்துக்கு ஹேதுவாயிருக்கிற பகவதனு ஜ்ஞைப்ரவ்ருத்தியினால் வெப்பட்ட கைங்கர்யம். இது மனோ வாக்காயம் என்கிற மூன்று கரணங்களாலும் அனுஷ்டிக்கத்தக்கதா

யிருக்கும். ‘ஒழிவில்காலமெல்லாமுடனாய்மன்னி வழுவிலா வடிமை செய்யவேண்டும்நாம’ – என்றும், ‘சென்றால்குடையாம் இருந்தால் சிங்காசனமாம் நின்றால் மரவடியாம் நீள்கடலுள் என்றும் புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்குமணையாம் திருமாற்கரவு’ – என்றும் சொல்லுகிறபடியே திருவனந்தாழ்வானைப் போலே ஸர்வவிதமான கைங்கர்யங்களையும் செய்யவேண்டுமென்று அபேக்ஷிக்கப்படுகிறதும், ஸர்வகாலத்திலும் ஸர்வதேசத்திலும் ஸர்வாவஸ்தைகளிலும் அனுவர்த்திக்கக்கடவதுமாயிருக்கும். இந்த கைங்கர்யம் ‘क्रियतां इति मां वद’ ‘கூவிப்பணிகொள்ளாய்’ என்றும், ‘ஏவமற்றமரா ஆட்செய்வார்’–என்றும் சொல்லுகிறபடியே பகவானுடைய நியோககார்யமாயிருக்கும். பாரதந்த்ர்யமே ஜீவனுக்குப் பிறக்கும் போக்யம் பாரதந்த்ர்ய விதியினாலல்லது புருஷார்த்தமல்லாமையாலே, இவனுடைய புருஷார்த்தத்துக்கு ஹேதுவான பகவத்ப்ரீதிஜனகத்வப்ரதிபத்தியையொழிய, ஸ்வயம் போக்யமாயிருக்குமாகாரமானது விரோதியாயேயிருக்கும். இதையாழ்வார் புருஷார்த்தநிஷ்கர்ஷம் பண்ணும் திருவாய்மொழியாகிற எம்மாவீடுத்திறத்தில் தெளிவாக அருளிச்செய்தார். ஆழ்வாருக்கு மோக்ஷத்தில் ருசியாகில் அதை இவருக்குக் கொடுத்துவிடுவோமென்று திருவுள்ளம்பற்றி, “ஆழ்வாரே, நீர் அபேக்ஷிக்கிற மோக்ஷத்தைக்கொள்ளும்” – என்று பகவான் சொல்ல, அதைக் கேட்ட ஆழ்வார், ‘எம்பெருமான் இப்படிக் கொடுக்கும் மோக்ஷம் நமக்கு ஏதுக்கு? நம்முடைய விருப்பத்தை நிறைவேற்றவேணுமென்ற திருவுள்ளத்தோடே அவன் தந்தருளும் மோக்ஷம் நமக்குப்புருஷார்த்தமாகுமோ? அவன் தன்னுடைய ருசிக்கிடாகக்கொடுத்தருளினலட்டுமே அது நல்லதேயல்லது, நம்முடைய ருசிக்கிடாகக் கொடுக்குமது நரகத்துக்கு ஒப்பாகும்’ என்று திருவுள்ளம்பற்றி ‘பிரானே, நான் முகத்துய எல்லையற்ற இன்பம் அனுபவித்தாலும் ஸரி, கைவல்யானுபவம் பெற்றாலும் ஸரி, ஆத்மவிநாசமடைந்தாலும் ஸரி, நரகானுபவம் பண்ணினாலும் ஸரி, இவற்றில் எனக்கு ஒரு

நிர்பந்தமில்லை. ஆனல் உனனுடைய ருசிககிடாக வருமதானல் இவைபிததனையும வரவுமாம. எனககாகவருமாகில மோக்ஷமும வேண்டாம. ஆனபினபு தேவரீருடைய ருசிககு ஏற்றது எதுவோ அதுவே எனககு பராபயமாகுமபடி செயதருளவேணும' என்றருளிச்செயதார. ஜீவன தனனுடைய பரிதிககாகச செயயும அடிமை வழுவுளளதாகும (குறறமுளளதாகும). இதை கைங காயததில கலை எனபார்கள. 'உனக்கே நாம் ஆட்செய்வோம்'— சேஷிககே உகபபாகபபணணவேணும - 'மற்றை நம் காமங்கள மாற்று' எனருள ஆணடாளும கைஙகாயததில ஸவபரயோஜ னதவபுததியைத தவிரககவேணும. 'ப்ராபயவிரோதி கழிகையா வது மற்றை நம் காமங்கள் மாறறு என்றிருககை' என்று உலகா சாரயா அருளிசசெயதார. 'अहमन्नं' எனகிற சுருதியும பகவானே போக்தா எனறும, ஜீவன போகயமெனறும சொலலுகிறது. 'कदाहमैकांतिकनित्यकिंकर प्रहर्षयिष्यामि सनाथजीवितः' — எனறார ஸ்ரீ ஆளவந்தாரும. நிதயகைஙகர்யமசெயபவனாக எனனை ஆககினு லொழிய எனனுடைய ஸததை பயனபெறமாட்டாது. தன னுடைய அனுவருததியால பகவானுககுப பிறநத ஹாஷமே சேதனனுக்கு பராபயம. 'உனனை அனுபவிதது நான எபபோது களிககபபோகிறேன' — என்று சொலலாமல 'எபபோது நான உனனை ஸந்துஷ்டனாககச்செயயபபோகிறேன' — என்று சொனன தால, சேதனலாபததாலஎம பெருமான் திருவுளளமே உகபபது. அதனாலுணடாகும் உகப்பே ஜீவனுககுள்ளது. ஸ்ரீ பாஷயகார ரும கடைசிஸூததரபாஷயததில 'न च परमपुरुष सत्यसंकल्पः, अत्यर्थ प्रियं ज्ञानिनं लब्ध्वा कदाचिदावर्तयिष्यति' — பகவான் தனககு மிகவுப் பரியமான ஞானியையடைநது, பிறகு அவனை லீலாவிபூதிககுத் திருப்புவதிலலை, என்று ஜ்ஞாநிநம் லபதவா எனகிற பதஙகளால் சேதனன் அடையும மோக்ஷமானது பகவானுககே கிடைதத லாபம எனகிற அாததம தோனறுமபடி பதமிடுகிறார. போகய வஸதுவையடைவது போகதாவுககுக கிடைததலாபமலலவா

சேதனலாபத்தால் எம்பெருமான் திருவுள்ளம் உகந்து அதனுலுண்டாகும் உகப்பே ஜீவனுக்கு உள்ளது என்பதை '**अहमन्नादः**' என்கிற ச்ருதி சொல்லிற்று. இந்த போக்த்ருபோக்யஸம்பந்தஜ்ஞானம் பிறக்கவே சேதனன் போக்தா என்கிற சங்கையறும்.

ஆக இந்த ஒன்பது வித ஸம்பந்தத்தை ப்ரதிபாதிக்கிற திருமந்த்ரத்தால் ஸர்வகாரணனும் ஸர்வரக்ஷகனுமான ஸர்வேச்வரனுக்கு அநந்யார்ஹசேஷபூதனாய், எனக்கு உரியனன்றிக்கேயிருந்துள்ள நான் ஸர்வசேஷியான நாராயணனுக்கு நித்யகைங்கர்யம் பண்ணப்பெறவேணுகவேணும் என்று ப்ரார்த்தித்ததாயிற்று.

**श्रीशैलचक्रवर्ती जीवपरसहजनवविधसंबन्धान् ।**
**आचार्यदर्शितपथा परमपुरुषमुदे व्यवृतैतान् ॥**



ராஜாஜி பிரஸ் லிமிடெட், தேவகோட்டை 948-48.